# தொல்லியல் நோக்கில் சங்ககாலம்





முனைவர் கா. ராஜன்





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# தொல்லியல் நோக்கில் சங்ககாலம்

முனைவர் கா. ராஜன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்
நுட்பப்பயிலக வளாகம், தரமணி, சென்னை-600113

டாக்டர் பா.சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் - டாக்டர் பா.சிவந்தி ஆதித்தனார்)

வரிசை எண்.5 நாள்:27-07-2004

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Tolliyal nōkkil Caṅkakālam** |
| Author | : | Dr.K. Rajan<br>Associate Professor & Head<br>Department of Archaeology<br>Tamil University, Thanjavur |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | A499 |
| Language | : | Tamil |
| Edition | : | Second, First-2004 |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x+150 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs.70/-<br>(Rupees Seventy Only) |
| Printed by | : | United Bind Graphics<br>43/95, Millers Road<br>Kilpauk, Chennai - 600 010 |
| Subject | : | Archaeological approach on Sangam Era |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ
படுவழிப் படுக (புறம். 239: 20-21)

பிணங்களை எரியூட்டுவதும், பிணங்களைச் சவக்குழியில் வைத்தலும், இறந்தோர்களை ஓர் இடத்தில் இடுவதும் என மூன்று முறைகளில் தமிழர் இறந்தவர்களைப் புதைத்தனர். கலசக்காடு என்பது முதுமக்கள் தாழிகள் விரவிக் கிடக்கும் இடங்களைக் குறிப்பதாகும். பெருங் கற்படைச் சின்னங்களையும், முதுமக்கள் தாழிகளையும், பிணங்களை வைத்துப் புதைத்துள்ள குறிப்புகள் (ப. 25) காணப்படுகின்றன.

சங்க இலக்கியத்தில் நினைவுக் கற்கள் பற்றிய குறிப்புகள் (அகம். 180: 7-8), (புறம். 3: 21), (நற். 381: 8), (குறு. 372. 5), (ஐங். 362-1), பதுக்கைளுடன் கூறிய கல்வட்டம், பதுக்கைகளுடன் கூடிய நடுகற்கள் எனும் தொடர்கள் வழியாக அக்கால புதைகுழிகள் குறித்த செய்திகள் நமக்கு பதிவுக்குள்ளாகி இருக்கின்றன.

நினைவுக் கற்கள் நடப்படும்போது நிகழ்த்தப்படும் சடங்குகள் பற்றி அட்டவணை இரண்டு மூலம் நூலாசிரியர் கி.பி. 5 முதல் கி.பி. 19 வரை விரிவுரத் தொகுத்துத் தந்துள்ளார்.

சிந்துவெளியில் எழுத்துகள் வரிவடிவில் கிடைக்கின்றன. அடுத்து பிராமி எழுத்துகள் கிடைக்கின்றன. அதற்கு அடுத்துக் குறியீடுகள் வடிவில் தமிழகத்திலேயே 75 விழுக்காடுகளுக்குமேல் கிடைக்கின்றன.

இலங்கையிலும், இந்தியாவிலும் கிடைத்துள்ள குறியீடுகளைக் கொண்டு ஒரு முடிவுக்கு ஆய்வாளர்களால் வரமுடியவில்லை. வேறுபட்ட பண்பாட்டுக் கூறுகள் ஒரு கருத்தைக் கூற இடம் அளிக்கவில்லை. எனினும் கிடைக்கப்பெற்ற குறியீடுகள் பானைகள் வழியாகவோ பிறவற்றின் வழியாகவோ கீறல்களை அறியமுடியவில்லை.

தமிழ்ப் பிராமி, அசோகர்காலத்துப் பிராமி, தம்பபாணிப் பிராமி, கல்வெட்டு எனும் வகைகள் வழியே தமிழர் தோற்றம், பரவல், உறவுகள், வாழ்வியல் நடவடிக்கைகள், காலம் தொடர்பான கருத்து மோதல்கள் உலக அளவில் இன்னும் தெளிவு பெற வேண்டிய தேவைகள் ஆய்வுலகில் தேடும் நிலையில் உள்ளன.

கரூர், கொற்கை, உறையூர், மயிலாடும்பாறை, அரிக்கமேடு, வல்லம், பேரூர், மாங்குடி ஆகிய சங்ககால ஊர்களில் அகழாய்வுகளில் கிடைத்தவை கி.மு. 4 நூற்றாண்டுக்கு முன் உள்ளவை (ப. 78) எனக் கணிக்க முடிகிறது.

தொழில்நுட்ப ஆற்றல், வணிகத் தொடர்பு மூலம் தரப்படுகிற பொருளாதார வளர்ச்சி, தகவல் தொடர்பு, இயற்கை மாற்றத்திற்குத் தக்கவாறு தங்களை மாற்றிக் கொள்வதற்கு ஏற்பவே சங்க கால மக்கள் வாழ்ந்துள்ளனர்.

வணிகம் எனும் தலைப்பில் அமைந்தவற்றில் இந்நூலாசிரியர் வணிகம் செய்தல் தொழில்நுட்பம் வாய்ந்த கொடுமணலில் கிடைக்கப் பெற்ற கல்மணிகள், முத்துக் குளித்தல், இலக்கியங்களில் குறிப்பிடும் துறைமுகங்கள், மரக்கலன்கள், மரக்கலக் கட்டுமானமும் எனப் பல நிலைகளில் தடயங்கள் வழியே தொல்லியல் நோக்கில் சங்ககாலம் எனும் இந்நூலை எழுதியிருப்பது மிகுந்த பயனளிக்கிறது. இந்நூலை இந்நிறுவனம் மறுபதிப்பாக வெளியிடுவதில் மிகுந்த பெருமை கொள்கிறது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு. இரா. சிவக்குமார் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

இயக்குநர்

# நன்றியுரை

சங்க காலம் பற்றிய ஆய்வு அண்மைக்காலமாகப் பல்துறை அறிஞர்களின் கவனத்தை ஈர்த்து வருகிறது. இலக்கியம், கல்வெட்டு, நாணயம், தொல்லியல், வெளிநாட்டார் குறிப்புகள் போன்ற முதன்மைச் சான்றுகளை முன்னிறுத்தி ஆய்வுகள் வெளிவந்தவண்ணம் உள்ளன. இந்த வகையில் தொல்லியல் அடிப்படையில் சங்ககாலம் பற்றிய சில செய்திகளை வெளிச்சத்திற்குக் கொண்டுவரும் நோக்கில் இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது. தொல்லியல் கண்டுபிடிப்புகளும், அவை ஏற்படுத்தும் தாக்கங்களும் பெரும்பாலும் ஆங்கில நூல்களிலேயே வெளிவருகின்றன. இவற்றில் சில, அறிஞர்களின் ஆய்விற்கு உட்படுத்தப்படாமலேயே போகின்ற போக்கு காணப்படுகின்றது. இந்நூல் அக்குறையை ஓரளவு நீக்கும் என்று எதிர்பார்க்கின்றேன்.

சங்க காலம் உருவாவதற்கு உரிய காரணிகளையும் அக்காலத்தில் நிலவிய பண்பாட்டுச் சூழலையும், தொழில் நுட்பத்தின் மேன்மையையும், வணிகத்தின் வளர்ச்சியையும், தமிழர்களின் எழுத்தறிவினையும் விளக்கும் வகையில் அண்மையில் வெளிப்பட்ட தொல்லியல் சான்றுகளின் அடிப்படையில் இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது. இந்நூலில் கூறப்பட்டுள்ள கருத்துகளை அறிஞர்கள் விவாதித்து இதன் நிறை குறைகளை வெளிப்படுத்த வேண்டுகின்றேன். இவை எதிர்கால ஆய்விற்குப் பெரிய உந்து சக்தியாக அமையும் என நம்புகிறேன்.

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவின் நூல்வடிவமே இந்நூல். இவ் அறக்கட்டளையை நிறுவிய தினத்தந்தி அதிபர் டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

எனது ஆய்விற்கு ஊக்கமும், ஆக்கமும் அளித்து வருபவரும் எனது ஆய்வின் முன்னோடியாக விளங்குபவருமான எங்கள் பேராசிரியர் முனைவர் எ. சுப்பராயலு அவர்களுக்கும்,

இந்நூலின் முதல் வரைவினை ஆழ்ந்து நோக்கிப் பல நல்ல அறிவுரைகளை நல்கிய எனது பேராசிரியரும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினருமாகிய புலவர் முனைவர் செ. இராசு அவர்களுக்கும், இந்நூலில் முன்வைக்கப் பட்டுள்ள கருதுகோள்களை ஆய்வுக் கண்ணோட்டத்துடன் அணுகி அவை செம்மை பெறத் தேவையான கருத்துகளை வழங்கிய தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை அலுவலர் முனைவர் சு. இராஜகோபால் அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைப் புலப்படுத்திக் கொள்கிறேன். இந்நூலில் காணப்படும் கருத்துகளை ஏற்றும், முரண்பட்டும், விவாதித்தும் இந்நூல் மேலும் ஒளிபெற உதவிய எனது துறை வல்லுநர்கள் திரு. ந. அதியமான், முனைவர் பா. ஜெயக்குமார் ஆகியோர்க்கும் நன்றி. இந்நூலை அழகுறத் தட்டச்சு செய்து வழங்கிய திருமதி சு. செந்தமிழ்ச் செல்விக்கும் நன்றி.

இச்சொற்பொழிவு நூலாக வெளிவர உதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநரும் இவ் அறக்கட்டளையின் பொறுப்பாளருமாகிய முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.



# ஆசிரியரை பற்றி...

கோவை மாவட்டத்தில் கரடிமடையில் பொ. காரே கவுடர்-முத்தம்மாள் அவர்களுக்கு 1955ஆம் ஆண்டு மகனாகப் பிறந்தார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் முதுகலைப் பட்டமும், புதுதில்லியில் உள்ள இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் தொல்லியல் பள்ளியில் முதுகலைப் பட்டயமும், கோவைப் பகுதியில் பெருங்கற்படைப் பண்பாடு பற்றிய ஆய்வுக்கு மைசூர்ப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றுள்ளார். இந்தியக் கடல்சார் வரலாற்று ஆய்வின் தந்தை எனப் பெயர் பெற்ற முனைவர் எஸ்.ஆர்.ராவ் அவர்களின் தலைமையின் கீழ்க் கோவாவில் உள்ள தேசியக் கடலாய்வு நிறுவனத்தில் தொழில்நுட்ப அலுவலராகப் பணிபுரிந்துள்ளார். 1989 முதல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் கல்வெட்டு மற்றும் தொல்லியல் துறையில் விரிவுரையாளராகப் பணியேற்று இப்பொழுது இணைப்பேராசிரியர் நிலையில் துறைத்தலைவராகப் பணியாற்றி வருகிறார்.

கடந்த இருபது ஆண்டுகளுக்கும் மேலாகத் தொல்லியல் ஆய்வில் ஈடுபட்டு ஆயிரத்திற்கும் மேற்பட்ட பண்டைய தொல்லியல் அமைவிடங்களைக் கண்டுபிடித்துள்ளார். குஜராத்தில் உள்ள துவாரகை கடல் அகழாய்விலும், பூம்புகார் கடல் அகழாய்விலும் இவரது பங்கு குறிப்பிடத்தக்கது. இது தவிர ராமாபுரம், பெரியபட்டினம், வல்லம், கொடுமணல் அகழாய்வுகளில் முக்கியப் பங்காற்றியுள்ளார். மயிலாடும்பாறை, தாண்டிக்குடி அகழாய்வுகளைத் தலைமையேற்று நடத்தியுள்ளார்; ஈடுபட்டுள்ளார்.

உயராய்வு தொடர்பாக ஜப்பான், தென்கொரியா, பிரான்சு, இங்கிலாந்து, இலங்கை போன்ற நாடுகளுக்குச் சென்று வந்துள்ளார். கேம்பிரிடஜ், காக்கு சூயின், இலண்டன் பல்கலைக் கழகங்களிலும் ஆய்வு மேற்கொண்டுள்ளார். சார்லஸ், வாலஸ்

நல்கை, பண்டைய இந்தியா மற்றும் ஈரான் அறக்கட்டளை நல்கைகளையும், பல்கலைக்கழக நல்கைக்குழுத் தகைமையையும் பெற்றுள்ளார். இப்போது இங்கிலாந்து நாட்டில் உள்ள காமன்வெல்த் ஆய்வுத் தகைமை பெற்று, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திற்கு ஆய்வு மேற்கொள்ளச் செல்ல உள்ளார்.

பல்கலைக்கழக நல்கைக்குழு, இந்திய வரலாற்று ஆய்வு நிறுவனம், இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறை, இந்தியத் தேசிய அறிவியல் நிறுவனம், பிரெஞ்சு நிறுவனம் போன்ற நல்கை நிறுவனங்களிலிருந்து நல்கை பெற்றுப் பத்திற்கும் மேற்பட்ட பெருந்திட்டங்களை முடித்தளித்துள்ளார். இப்போது மூன்று பெருந்திட்டங்களைச் செயல்படுத்தி வருகிறார்.

தமிழகத்தொல்லியல் கழகத்தின் செயலராகப் பணிபுரிந்துள்ளார். இந்தியத் தொல்லியல் ஆய்வுக்கழகம், இந்தியப் பழங்கற்கால ஆய்வுக்கழகம், இந்தியப் பாறை ஓவியங்கள் கழகம், இந்தியக் கடல்சார் வரலாற்று ஆய்வுக்கழகம் போன்ற தேசிய அளவிலான ஆய்வுக்கழகங்களின் செயற்குழு உறுப்பினராகப் பணியாற்றி வருகிறார். இவரது பல ஆய்வுக் கட்டுரைகள் தேசிய, பன்னாட்டளவிலான ஆய்விதழ்களில் வெளிவந்துள்ளன.

ஆசிரியரின் பிற நூல்கள்:

*1, Archaeology of Tamilnadu (Kongu Country) (1994)*

*2. Archaeological Gazetteer of Tamilnadu (1997)*

*3. South India Memorial Stones (2000)*

*4. Archaeology of Palar basin (2000)*

*5. Archaeology: Principles and Methods (2002)*

# பொருளடக்கம்

# முன்னுரை

**தொல்லியல் நோக்கில் சங்ககாலம்** என்ற தலைப்பில் இந்நூலை எழுதுவதின் நோக்கம் பலதரப்பட்டது. கடந்த பத்து ஆண்டுகளில் தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் கள ஆய்வுகளும், அகழாய்வுகளும் எண்ணற்ற தரவுகளை நமக்கு வழங்கியுள்ளன. அத்தரவுகளின் அடிப்படையில் சங்க காலத்தை மீள் உருவாக்கம் செய்வதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சியே இந்நூலாகும். பொதுவாகத் தமிழகத்தின் சங்க கால வரலாறு சங்க இலக்கியத்தின் அடிப்படையில் மட்டுமே பெரும்பாலும் உருவாக்கப்பட்டுள்ளது. இவ்வரலாறு சில நேரங்களில் சமகாலச் சமூகத்தின் எதிர்பார்ப்புக்குத் தக்கவாறு அமைந்துவிடுகிறது.

வரலாறு, உணர்வுகளின் அடிப்படையில் எழுதப்படாமல் உண்மைகளின் அடிப்படையில் எழுதப்படவேண்டும். ஒரு சமூகத்தின் வரலாற்றுப் பன்முகத்தை நமக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுவனவாக உள்ளவை இலக்கியம், கல்வெட்டு, நாணயம், தொல்லியல், வெளிநாட்டவர் குறிப்புகள் ஆகிய முதன்மைச் சான்றுகளே ஆகும். இத்தகைய சான்றுகள் தமிழகத்தில் சங்க காலத்திற்குரியவையாக நமக்குப் பல கிடைத்துள்ளன. இம்முதன்மைச் சான்றுகளை முன்னிறுத்தி மேற்கொண்ட ஆய்வுகள் சங்க காலச் சமூகம் எத்தகைய நிலையில் இருந்துள்ளது என்பதைப் பற்றி விவரிக்கின்றன. இதுகுறித்துப் பல்வேறு நூல்கள் வந்துள்ளன. இந்நூல்கள் அனைத்து முதன்மைச் சான்றுகளையும் ஒருமுகப்படுத்திச் சங்க காலத்தை மீள் உருவாக்கம் செய்ய முற்படவில்லை. அதற்குக் காரணம் பெரும்பாலான முதன்மைச் சான்றுகள் பல்வேறு தன்மை கொண்டவையாக இருப்பதால் அதை அறிந்து கொள்வதிலும், படித்துணர்ந்து கொள்வதிலும், தரவுகளை நேரடியாகப் பார்த்து அதன் தன்மையைப் புரிந்து கொள்வதிலும் பல்வேறு சிக்கல்களை அறிஞர்கள் எதிர்கொள்ள வேண்டியமையே ஆகும். தரவுகளின் பன்முகத் தன்மைகள் காரணமாகப் பெரும்பாலான தரவுகள் வல்லுநர்களின் ஆய்வுகளில் உட்படுத்தப்படாமல் போகின்ற போக்கு இங்கே காணப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட முதன்மைச் சான்றினை மட்டும் முன்னிறுத்தி ஆய்வு மேற்கொள்ளும்பொழுது அவ்வாய்வு முழுமை பெறாமல் அல்லது

ஒரு சமூகத்தின் பன்முகத்தையும் முழுமையாக வெளிக்கொணர இயலாமல் போகின்றது. மேலும் முதன்மைச் சான்றின் தன்மைக்கேற்ப அதன் மூலம் எட்டப்படும் முடிவுகள் சில தவறான கண்ணோட்டத்தை நமக்கு வழங்கிவிடுகின்றன. எடுத்துக் காட்டாக, சங்க இலக்கியத்தில் சமணர்களைப் பற்றிய குறிப்புகளோ, தமிழர் கடல் கடந்து வணிகம் செய்ததைப் பற்றிய குறிப்புகளோ, தமிழர் பயன்படுத்திய எழுத்து வரி வடிவங்களைப் பற்றிய குறிப்புகளோ, சங்க கால மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களைப் பற்றிய குறிப்புகளோ மிகுதியாகக் காணப்படுவதில்லை. இது இலக்கியம் என்ற முதன்மைச் சான்றினை மட்டும் வைத்து ஆய்வு செய்கின்றவர்கள் எதிர்கொள்கின்ற இடர்ப்பாடுகள் ஆகும்.

சமணர்கள் பற்றிய குறிப்புகள் மிகுதியாக இலக்கியங்களில் காணப்படாததால் இவர்கள் சங்க காலத்தில் செல்வாக்குப் பெற்றுத் திகழவில்லையோ என்ற தோற்றம் ஏற்படுகிறது. கல்வெட்டு என்று எடுத்துக்கொண்டால் குறிப்பாகத் தமிழ்ப் பிராமி கல்வெட்டுகளைப் பார்க்கும்பொழுது சங்ககாலத் தமிழகத்தில் சமண சமயம் மட்டுமே தழைத்தோங்கியிருக்க வேண்டும் என்ற தோற்றம் ஏற்படுகிறது. காரணம், தமிழகத்தில் இதுவரை கிடைத்த எண்ணற்ற தமிழ்ப் பிராமி வரிவடிவக் கல்வெட்டுகள் அனைத்தும் சமண சமயத்தைச் சார்ந்தனவாக உள்ளன. எனவே, கல்வெட்டுகளின் அடிப்படையில் ஆய்வு மேற்கொள்கின்ற பொழுது இது சங்க காலத் தமிழ்ச் சமூகத்தின் ஒரு பக்கத்தை மட்டுமே நமக்கு வெளிப்படுத்துவதாக உள்ளன.

புத்த மதத்தைப் பற்றிய குறிப்புகள் முதன்மைச் சான்றுகளில் பெரும்பான்மையாக நமக்குக் கிடைக்காததால் இம்மதம் தமிழகத்தில் நன்கு கால் ஊன்றவில்லையோ என்ற தோற்றம் ஏற்படுகிறது. ஆனால், தமிழகத்தின் கிழக்குக் கடற்கரைப்பகுதிகளில் காணப்படுகின்ற புத்தமதம் சார்ந்த எச்சங்கள் இக்கருத்துக்கு மாறாக உள்ளன. தொல்லியல் அகழாய்வுகளில் வெளிப்படுகின்ற தரவுகள் நமக்கு வேறொரு தோற்றத்தை வழங்குகின்றன. அகழாய்வுகளில் கிடைத்துள்ள தமிழ்ப் பிராமி வரிவடிவத்தில் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் எம்மதத்தையும் சாராது நிற்கின்றன. இது கல்வெட்டுத் தரவுகள் காட்டும் சமய உணர்வுகளுக்கு மாறாக உள்ளது. மேலும் தொல்லியல் அகழாய்வில் வெளிப்படுத்தப் படுகின்ற தரவுகள் ஒரு முழுமைத் தன்மை கொண்டவை என்றும் கூற இயலாது. காரணம் உயிருள்ள அல்லது கரிமச் சேர்க்கைப் பொருட்களான (organic material) மரம், பஞ்சு போன்றவற்றின் மூலம்

உருவாக்கப்பட்ட பொருள்கள் நமக்கு ஏராளமாகக் கிடைப்பது இல்லை. கனிமப் பொருட்களின் (inorganic) மூலம் உருவாக்கப்படும் பானை, கற்கருவிகள், இரும்பு ஆயுதங்கள் போன்றவையே நமக்கு மிகுதியாகக் கிடைக்கின்றன. மேலும், ஒரு சமூகத்தின் எண்ணம், சமயம், தத்துவம் போன்றவற்றை அகழாய்வுகளில் கிடைக்கும் பொருள்களின் தன்மையைக் கொண்டு மீள் உருவாக்கம்செய்ய இயலுமே தவிர அவற்றை நேரடித் தரவுகளாகக் கொள்ளமுடியாது. இதைப் போன்றே நாணயங்களையும், வெளிநாட்டவர் குறிப்புகளையும் கூறலாம்.

எந்தவொரு முதன்மைச் சான்றாக இருப்பினும் அது ஒரு முழுமையான அல்லது ஒரு சமூகத்தின் பன்முகத் தன்மையினை வெளிப்படுத்துவதாக அமையாது. எனவே, ஒரு தனிப்பட்ட முதன்மைச் சான்றினை முன்னிறுத்திச் செய்யப்படுகின்ற எந்தவோர் ஆய்வும் எந்நிலையிலும் முழுமையடையாது என்பது திண்ணம்.

இலக்கியம், கல்வெட்டு, நாணயம், அயல்நாட்டவர் குறிப்புகள், அகழாய்வுச் சான்றுகள் போன்ற அனைத்து முதன்மைச் சான்றுகளையும் ஒருமுகப்படுத்தி ஆய்வு செய்வதின் மூலம் ஓரளவு சங்க காலத்தை மீள் உருவாக்கம் செய்ய இயலும் என்ற அடிப்படையில் அண்மைக் காலங்களில் கிடைத்த தரவுகளின் அடிப்படையில் சங்க காலத்தை அறிய இந்நூல் முயல்கிறது.

## சங்க இலக்கியங்கள்

இதுவரை தமிழகத்தில் கிடைத்த இலக்கியங்களில் காலத்தால் முந்தியவை சங்க இலக்கியங்களே. முச்சங்கங்கள் பற்றிய குறிப்பு சங்க இலக்கியங்களில் நேரடியாகக் காணப்படாது கி.பி.7-8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இறையனார் அகப்பொருளுரை யிலேயே முதலில் காணப்படுகிறது. இவற்றில் முதல் இரு சங்கங்களைச் சார்ந்த தொல்லியல் எச்சங்கள் கிடைக்கவில்லை. ஆனால், கடைச் சங்கம் காட்டுகின்ற சமூகத்தைக் கல்வெட்டுகள், நாணயங்கள், அகழாய்வுச் சான்றுகள் வெளிப்படுத்துவனவாக உள்ளன. சங்க இலக்கியத்தின் காலத்தை நிர்ணயம் செய்வதில் பல்வேறுபட்ட கருத்துகள் அறிஞர்களிடையே காணப்பட்ட போதிலும் மொழியியல், வரலாற்றுக் குறிப்புகள், அகழாய்வுச் சான்றுகள், கிரேக்க-ரோமானியர்களின் குறிப்புகள் ஆகியவற்றின் அடிப்படையில் அவ்விலக்கியங்களின் காலத்தைக் கி.பி. முதலாம் நூற்றாண்டிற்கு முன்பாக எடுத்துச் செல்கின்றனர் (Subramanian 1980:25-34; Zvelebil 1973:4; 1974:41). எனினும் இக்கால எல்லை சங்க

இலக்கியங்கள் தொகுக்கப்பட்ட காலத்தைச் சுட்டுவதாக அமைகிறதா அல்லது இலக்கியம் உருவான காலத்தைக் குறிப்பிடுகிறதா என்பதைப்பற்றி அறிஞர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. எனினும் சங்கப் பாடல்களில் பெருங்கற்படைச் சின்னங்களைப் பற்றிய குறிப்புகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இப்பெருங்கற்படைச் சின்னங்கள் கி.மு. ஆயிரம் முதல் கி.பி. முதலாம் நூற்றாண்டுவரை எழுப்பப்பட்டுத் தென்னிந்தியா முழுவதும் பரவிக் கிடக்கின்றன. இவ்வாயிரம் ஆண்டுகளில் பெருங்கற்படைச் சின்னங்கள் பல்வேறு வளர்ச்சி நிலைகளை எட்டியுள்ளன. கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்கும் முற்பட்ட பெருங்கற்படைச் சின்னங்களைப் பற்றிய தெளிவான குறிப்புகளைச் சங்கப் பாடல்களில் பார்க்கும்பொழுது இப்பாடல்களின் காலத்தைப் பின்னோக்கி எடுத்துச் செல்ல வேண்டியுள்ளது.

பொதுவாக 1970களிலும் அதற்கு முன்பாகவும் சங்க இலக்கியத்தை ஆய்வு செய்த அறிஞர்கள் தமிழக வரலாற்றை மீள் உருவாக்கம் செய்வதிலேயே தமது கவனத்தைச் செலுத்தி உள்ளனர். சமூகம், பொருளாதாரம், அரசியல் மற்றும் பண்பாட்டுக் கூறுகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை என்று பார்க்காமல் இவற்றைத் தனித்தனியே ஆய்வு செய்தனர் (Gurukkal 1989:162; Gurunathan 2001; Hardy 1983:167-193; Hart 1976:46; 1976a:326-327; Kailasapathy 1968:152-157; Marr 1985:453-455; Ramanujam 1967; Samuel 1978:1-2; Sastri 1987: 45-48; Zvelebil 1973:12-20). அதிலும் திராவிட-ஆரிய கோட்பாடுகளின் அடிப்படையிலேயே பெரும்பாலான ஆய்வுகள் முன்னெடுத்துச் சொல்லப்பட்டன (Iyengar 1918; Iyangar 1983: Kanakasabhai 1956; Pillay 1975; Sastri 1958, 1972; Singaravelu 1966; Sivarajapillai 1984; Subramaniam 1980). இத்தகைய கண்ணோட்டம் காலந்தோறும் ஏற்படுகின்ற சமூகக் கோட்பாட்டு மாற்றம், அறிவியல் முன்னேற்றம் ஆகியவற்றின் தாக்கங்களுக்கு உட்படாமல் தமிழ்ச் சமுதாயம் ஒரு நிலையான தன்மையினைக் கொண்டு பல ஆண்டுகளாக விளங்கியிருக்கிறது என்ற செய்தியைத் தருவதாக அமைந்து விடுகிறது. இது இலக்கியம் அல்லாத பிற தரவுகள் காட்டும் காட்சிகளுக்கு முரண்பட்டு நிற்கிறது. தமிழ்ச் சமுதாயம் இயற்கையின் மாறுபாட்டிற்குத் தக்கவாறும், கிடைக்கும் கனிம வளங்களுக்குத் தக்கவாறும், சுற்றுச்சூழலில் ஏற்படுகின்ற மாற்றத்திற்குத் தக்கவாறும், தொழில் நுட்பத்தில் அல்லது அறிவியலில் ஏற்படுகின்ற மாற்றத்திற்குத் தக்கவாறும் காலந்தோறும் தன்னை மாற்றிக்கொண்டே வந்துள்ளது. இத்தகைய மாற்றங்களை வெளிப்படுத்துகின்ற தரவுகளைத் தருவனவாகத் தொல்லியல்

சான்றுகள் உள்ளன. எனினும் இத்தொல்லியல் சான்றுகளுடன் ஒப்பிட்டு நோக்கி ஆய்வுகள் இதுவரை மேற்கொள்ளப்படவில்லை.

கடந்த 25 ஆண்டுகளாகச் செண்பகலெட்சுமி, ராஜன் குருக்கள், சிவத்தம்பி, சுதர்சன் செனாவிரத்னே போன்றோர் சங்ககாலச் சமுதாயத்தில் காலந்தோறும் ஏற்பட்ட மாறுதல்களைத் தொல்லியல், கல்வெட்டு, நாணயம் போன்ற தரவுகளை உள்வாங்கிக் கொண்டு மானிடவியல் கோட்பாட்டின் அடிப்படையில் ஆய்வு செய்துள்ளனர் (Champakalakshmi 1989:278-307, Gurukkal 1989:159-175, Seneviratne 1989, Sivathamby 1981). இவ்வாய்வாளர்கள் அனைவரும் சங்க இலக்கியங்களில் காணப்படும் திணைக்கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு ஐந்திணைகளில் ஏற்படுகின்ற, ஏற்பட்ட பல்வேறு சமூகச் சூழல்களைச் சுட்டிக்காட்டி அதனடிப்படையில் எழுந்த அரசு உருவாக்கத்தை விளக்கியுள்ளனர். இத்திணை மரபுகளின் அடிப்படையில் வளமையான பகுதியான மருத நிலப் பகுதியிலேயே முதன்முதலில் அரசு உருவாகியிருக்க வேண்டும் என்ற கருத்தினை முன்மொழிகின்றனர். இது உழவுத்தொழிலைப் பெரிதும் நம்பி அதன்மூலம் ஏற்பட்ட உபரி உற்பத்திப் பெருக்கத்தை மனத்தில் கொண்டு இந்நிலைப்பாட்டை இவ்வாய்வாளர்கள் எடுத்திருக்க வேண்டும். வளமையான பகுதிகளிலேயே அரசு உருவாகியிருக்க முடியும் என்ற கருதுகோளின் அடிப்படையில் எழுந்த ஒரு முடிவு இது எனலாம். ஆனால் அண்மைக் காலங்களில் வெளிக் கொணரப் பட்ட தொல்லியல் சான்றுகள் இம்முடிவுகளை முழுமையாக ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் அமையவில்லை. எடுத்துக்காட்டாக, முல்லையும் பாலையும் தாங்கி நிற்கின்ற கொங்கு நாட்டுப் பகுதி சேர அரசு உருவாக்கத்திற்குப் பெரும் பங்கு புரிந்துள்ளது. இம்முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் இங்குக் கிடைக்கின்ற இரும்புக் கனிமத்தையும் மணிக் கற்களையும் பயன்படுத்தித் தமது தொழில்நுட்பத் திறனால் மிகச்சிறந்த எஃகுக் கருவிகளையும் மணிகளையும் உருவாக்கி மேலைநாடுகளுக்குக் குறிப்பாக ரோம நாட்டிற்கு ஏற்றுமதி செய்துள்ளனர். வெளிநாட்டு வணிகத்தின் மூலம் பெற்ற வருவாய் இவர்களது வாழ்க்கை மேம்பாட்டிற்கும், சமூகக் கட்டமைப்பிற்கும், அரசுருவாக்கத்திற்கும் அடிகோலியது. இந்தியாவில் கிடைத்த ரோம நாணயங்களைக் கணக்கில் எடுத்துக்கொண்டால் கொங்குப் பகுதியிலேயே அதிகமான நாணயங்கள் கிடைத்துள்ளன. இத்தகைய நாணயங்கள் வளமையான மருத நிலப் பகுதியில் கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. எனவே நீர் வளம் மிக்க வளமையான பகுதியில்

மட்டுமே அரசு உருவாக்கம் முதன்முதலில் ஏற்பட்டு இருக்கவேண்டும் என்ற கருத்தை மீண்டும் ஆய்விற்குட்படுத்த வேண்டியுள்ளது.

சங்ககால அரசு உருவாக்கம் பற்றிய கருதுகோள் சங்க இலக்கியங்களின் அடிப்படையிலேயே பெரும்பாலும் உருவாக்கப்பட்டுள்ளது. ஆனால் சங்க இலக்கியத்தைக் கால நிரல்படப் பகுத்து ஆய்வு செய்வதில் ஏற்படுகின்ற இடர்ப்பாடுகளும், பாடல்கள் உருவான காலம், தொகுக்கப்பட்ட காலம், தொகுக்கப்பட்ட முறை, தொகுக்கப்பட்ட காலத்தின் சமூகப்பின்னணி ஆகியவற்றின் காரணமாக இவ்விலக்கியம் அக்காலத்தில் வாழ்ந்த தமிழ்ச் சமுதாயத்தை முழுமையாகப் பிரதிபலிக்கவில்லை எனலாம். எடுத்துக்காட்டாக, கடந்த 10 ஆண்டுகளில் எண்ணற்ற கிரேக்க, ரோம நாணயங்களும், பாண்டிய, சேர மன்னர்கள் வெளியிட்ட நாணயங்களும். முத்திரை நாணயங்களும் தமிழகத்தில் கிடைத்துள்ளன. ஆனால் இவைபற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் கிடைக்கவில்லை.

இதுபோலவே தமிழகத்தில் விளங்கிய தமிழ்ப் பிராமி வரிவடிவத்தைப் பற்றியும் அவை பாறைக்குகைகளில், நாணயங்களில், பானை ஓடுகளில், மோதிரங்களில் எழுதப்பட்ட தன்மை பற்றியும் பெரிதும் இலக்கியங்களில் பேசப்படவில்லை. தமிழகத்தில் சமணர்களுக்குக் கொடையாக அளிக்கப்பட்ட பாறைக் குகைகளில் காலத்தால் முந்தைய தமிழ்ப் பிராமி கல்வெட்டுகள் ஏராளமாகக் கிடைத்த போதிலும் அவற்றைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் காணப்படாதது வியப்பூட்டுவதுடன் அதன் தன்மையையும் பறைசாற்றுபவையாக உள்ளன. அண்மையில் எகிப்து நாட்டின் செங்கடல் கடற்கரையில் அமைந்துள்ள ரோமநாட்டுத் துறைமுகமான குவாசிர்-அல்-காதிம், பெரனிகே ஆகிய இடங்களில் கிடைத்த தமிழ்ப் பிராமி வரிவடிவத்தில் தமிழ்ப் பெயர் பொறிக்கப் பெற்ற பானை ஓடுகளும், தாய்லாந்து நாட்டில் கிளாங்தோம் என்ற இடத்தில் கிடைத்த உரைகல்லும் (touch stone), மத்தியத் தரைக்கடல் பகுதியில் நைல் நதி முகத்துவாரத்தில் அமைந்துள்ள அலெக்ஸாண்டாரியா துறைமுகத்தில் வாழ்ந்த ஒரு வணிகனுக்கும், மேலைக் கடற்கரையில் அமைந்துள்ள சேர நாட்டுத் துறைமுகமான முசிறியில் வாழ்ந்த ஒரு வணிகனுக்கும் இடையே நடைபெற்ற வணிக ஒப்பந்தமும் புதியனவாகக் கிடைத்த முதன்மைச் சான்றுகளில் குறிப்பிடத் தக்கவையாகும். இது தொடர்பான குறிப்புகள் எதுவும் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை.

இவற்றுள், கி.பி.இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த கிரேக்க மொழியில் எழுதப்பட்ட வணிக ஒப்பந்தம் தான் இந்திய வணிக ஒப்பந்தங்களில் காலத்தால் முந்தியதாகும். இவ்வணிக ஒப்பந்தம் தமிழக வணிகர்கள் மேலை நாட்டுடன் கொண்ட வணிக உறவுகளைப் பறைச்சாற்றுவனவாக உள்ளது. ஆனால் சங்க இலக்கியமோ யவனர்கள் இங்கு வருகை புரிந்ததைக் குறிப்பிடுகிறதே தவிர தமிழர்கள் கடல் கடந்து சென்று செய்த வணிகத்தைக் குறிப்பிடவில்லை.

சங்க இலக்கியம் சமகாலத்திய தமிழ்ச் சமூகத்தைப்பற்றி ஏராளமான தரவுகளை அளித்துள்ளது என்பதை மறுக்க இயலாது என்ற போதிலும் அது அக்காலச் சமூகத்தின் பன்முகத்தை முழுமையாக வெளிக்காட்டவில்லை அல்லது தாங்கி நிற்கவில்லை என்பதையே மேற்கண்ட சான்றுகள் உணர்த்துகின்றன.

சங்க இலக்கியத்தைத் தொகுத்தவர்கள் அவர்கள் வாழ்ந்த காலக்கட்டத்தில் அச்சமூகத்தின் பிரதிபலிப்பாக அச்சமூகத்திற்குத் தேவையெனக் கருதியவற்றைத் தொகுத்துப் பிறவற்றை ஒதுக்கி யிருக்கக்கூடும். எடுத்துக்காட்டாக, சேர மன்னர்களின் ஆதரவினால் அவர்களது அரசமரபைப் பதிவுசெய்வதற்காக உருவாக்கப்பட்ட பதிற்றுப்பத்தில் அந்நாட்டின் பிற செய்திகள் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்க இயலாது. இதைப்போன்றுதான் ஒவ்வொரு இலக்கியமும் சில நோக்கங்களுக்காக வகுக்கப்படும்பொழுது அதன் நோக்கத்திற்கு மாறுபட்ட சில செய்திகள் முக்கியத்துவமின்றிப் போய்விடுகின்றன. ஆகவே சங்க இலக்கியம் அக்காலச் சமூகத்தைப் பிரதிபலிப்பதாக இருந்தாலும் அது சமூகக் கூறுகளை முழுமையாகப் பிரதிபலிக்கவில்லை எனக் கருதவேண்டியுள்ளது. இக்குறை பாட்டினை இலக்கியவியலார், மொழியியலார், நாணயவியலார், கல்வெட்டியலார், அறிவியலார் போன்ற பல்துறை அறிஞர்களை ஒருங்கிணைப்புச் செய்வதன் மூலமே சரிசெய்ய இயலும். எனவே தான் இந்நூலில் அண்மையில் வெளிக்கொணரப்பட்ட கல்வெட்டு, நாணயம், தொல்லியல் சான்றுகளின் அடிப்படையில் சங்க காலத்தை மீள் உருவாக்கம் செய்யும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆயினும் முதன்மைச் சான்றுகளின் பரந்துபட்ட தன்மை காரணமாகச் சில செய்திகள் மட்டுமே இந்நூலில் முன்னிறுத்தப்பட்டுள்ளன.

# பெருங்கற்படைக்காலம்

சங்க காலச் சமூகம் அறிவியல், தொழில்நுட்பம், எழுத்தறிவு, வெளிநாட்டுடனான தொடர்பு போன்றவற்றின் ஊடாக ஏற்பட்ட அரசு உருவாக்கம் என எண்ணற்ற நிகழ்வுகளில் தலையோங்கி இருந்தது. இவ்வளர்ச்சி பல்வேறு அறிவியல் சார்ந்த புலங்களினால் ஏற்பட்டவை என்றாலும்கூட அவ்வளர்ச்சி ஒரு தன்மையினதாக இல்லை. மேலும், இவ்வளர்ச்சி நிலையை அச்சமூகம் ஒரு குறுகிய காலக்கட்டத்தில் அடைந்துவிடவில்லை. சங்க கால அரசு உருவாக்கத்திற்கு அல்லது சங்க காலச் சமூகக் கட்டமைப்பு உருவாக்கத்திற்கு அல்லது சங்க கால இலக்கிய எழுச்சிக்குக் காரணமாக இருந்தவர்கள் சங்க காலத்திற்கு முன்பு வாழ்ந்த மக்களே ஆவர். அவர்கள் யார்? அவர்கள் எங்ஙனம் சங்க காலச் சமூக உருவாக்கத்திற்குக் காரணமாக இருந்தனர் என்பதை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

சங்க கால மக்களின் வாழ்க்கையை உயர்நிலைக்கு இட்டுச் சென்றவர்கள் அவர்களுக்கு முன்பு தமிழகத்தில் வாழ்ந்த பெருங்கற்படைக் காலத்தைச் சார்ந்த மக்களே என்றால் அது மிகையாகாது. திராவிடப் பண்பாட்டின் முக்கியக் கூறாக விளங்கிய "இறந்தவர்களைப் புதைத்து அவர்களை வழிபடுகின்ற வழக்கம்" பின்னாளில் பெருங்கற்படைச் சின்னங்களாக உருவாவதற்கு அடிகோலியதும் இம்மக்களே எனலாம். நீத்தோர் நினைவாகப் பெரிய கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட நினைவுச் சின்னங்கள் விந்திய மலைக்குத் தெற்கே இந்தியாவின் தீபகற்பப் பகுதியில் நிறைந்து காணப்படுகின்றன. பெருங் கற்களைக் கொண்டு நீத்தோர் நினைவுச் சின்னங்கள் உருவாக்கப்பட்டதன் காரணத்தால் இது பெருங்கற்படைக் காலம் எனத் தொல்லியலாளரால் அழைக்கப்படுகிறது. இப்பெருங் கற்படைக் காலம் தமிழகத்தில் கி.மு. ஆயிரம் முதல் கி.பி.முதலாம் நூற்றாண்டு வரை நின்று நிலைத்திருந்தது (படம் 1). சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இப்பண்பாட்டுக் காலம் தென்னகத்தில் வழக்கில் இருந்ததால் இது பல்வேறு

பண்பாட்டு வளர்ச்சி நிலைகளைப் பெற்றது (படம் 2). அதனால் இதன் தொடக்கக் காலத்திற்கும் இறுதிக் காலத்திற்கும் இடையேயான பண்பாட்டுக் கூறுகள் பல வேறுபாடுகளைக் கொண்டு காணப்படுகின்றன.




படம் 1 தமிழகத்தில் பெருங்கற்படை எச்சங்கள் உள்ள இடங்கள்

இப்பண்பாட்டுக் காலத்திற்குரிய சில சிறப்பம்சங்கள் சங்க இலக்கியத்தில் விரவிக் கிடப்பதால் இதன் இறுதிக்காலம் சங்க காலத்தோடு தொடர்புடையதாகக் காணப்படுகிறது. பெருங்கற்படைக் காலத்தின் முக்கியப் பண்பாட்டுக்கூறான பரல் உயர் பதுக்கைகள் (cairn circle with cist) தமிழகத்தின் தகடூர் நாடு (படம் 3) முழுவதும் தொண்டை நாட்டின் மேற்குப் பகுதிகளிலும், கொங்கு நாட்டுப் பகுதிகளிலும் (படம் 4),

பாண்டி நாட்டின் மேற்குப் பகுதிகளிலும் அதிகமாகக் காணப்படுவதால் இப்பெருங்கற்படைச் சின்னங்களின் பண்பாட்டுக் கூறுகள் வடக்கிலிருந்து தெற்காகத் தமிழகத்தில் ஊடுருவியிருக்க வேண்டும் எனவும் காலத்தால் முந்திய பெருங்கற்படைச் சின்னங்கள் தமிழகத்தின் வட பகுதி மாவட்டங்களிலும் பிந்தியவை பிற பகுதிகளிலும் இருக்க வேண்டும் எனவும் தொல்லியலார் கருதுகின்றனர்.




படம் 2: தென்னிந்தியாவில் தொல்லியல் அமைவிடங்கள்




படம் 3 தகடூர் பகுதியில் தொல்லியல் எச்சங்கள்

இப்பெருங் கற்படைச் சின்னங்களை உருவாக்குவதற்கு கற்கள் தேவைப்படுவதால் இவை குறிஞ்சி, முல்லை நிலப் பகுதிகளிலேயே அதிகம் காணப்படுகின்றன எனலாம். பெருங் கற்படைச் சின்னங்கள் குறிஞ்சி, முல்லைப் பகுதிகளுக்கு உரியனவாக இருக்கும்பொழுது மருதம் நிலத்திற்குரியனவாக முதுமக்கள் தாழிகள் விளங்குகின்றன. தமிழகத்தின் கீழ்ப் பகுதியில் குறிப்பாகத் தென்பெண்ணை, காவிரி, வைகை, தாமிரபரணி நதிகளின் படுக்கைகளில் கிடைக்கின்ற தாழிகளையும் இப்பண்பாட்டுக்குள்ளேயே அறிஞர்கள் அடக்குகின்றனர். இம் முதுமக்கள் தாழிகளுடன் எவ்விதக் கற்படைகளும் இணைந்து இருக்கவில்லை. எனினும் இவற்றையும் பெருங்கற்படைப் பண்பாட்டுச் காலத்தைச் சார்ந்ததாகவே அறிஞர்கள் கருதுவதற்குக் காரணம் முதுமக்கள் தாழிகளிலும் பெருங்

கற்படைச் சின்னங்களில் காணப்படும் கறுப்பு சிவப்பு மட்பாண்டங்கள், இரும்பு ஆயுதங்கள் கிடைப்பதே ஆகும். இதைப் பெருங்கற்படைச் சின்னத்தின் மாறுபட்ட தன்மை என்றே ஆய்வாளர்கள் கருதுகின்றனர். எடுத்துக்காட்டாக, தாமிரபரணி ஆற்றின் தென் கரையில் அமைந்துள்ள ஆதிச்சநல்லூரில் கிடைத்த முதுமக்கள் தாழிகளைப் பெருங்கற்படைப் பண்பாட்டுக்குள் அடக்கிப் பார்ப்பதை இங்கு நினைவு கூர்தல் வேண்டும்.




படம் 4 கொங்கு நாட்டுப் பகுதியில் சங்க கால ஊர்கள்

பெருங்கற்படையின் தொடக்கம் கி.மு. ஆயிரம் எனக் கொண்டும் இப்பண்பாடு வடக்கிலிருந்து தெற்காக முன்னேறியது என்ற கருதுகோளை மனத்தில் நிறுத்தியும் இப்பண்பாட்டின் காலம் தமிழகத்தின் தென்பகுதி நோக்கிச் செல்லச்செல்லப் பின்னோக்கிச் செல்கிறது எனலாம். ஆனால் இது அகழாய்வுகளில் கிடைக்கும் தரவுகளுக்கும், இலக்கியங்களில் காணப்படும் குறிப்புகளுக்கும் முரண்பாடாக உள்ளது. தமிழகத்தில் மருதம், நெய்தல் நிலப் பகுதிகளில் குறிப்பாகப் பெண்ணையாற்றுக்குத் தெற்கே வாழ்ந்த மக்கள் நீத்தோர் நினைவாக முதுமக்கள் தாழிகளை வைத்துள்ளனர். பெருங்கற்படைச் சின்னங்கள் வடக்கிலிருந்து வந்ததாகக் கணக்கில் கொண்டால் தமிழகத்தின் அதியமான் ஆண்ட தகடூர்ப் பகுதியில் கிடைப்பவை காலத்தால் முந்தியதாகவும் பாண்டியர்கள் ஆட்சி புரிந்த தென்பகுதி காலத்தால் பிந்தியதாகவும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியுள்ளது. ஆனால் சங்க இலக்கியமோ பாண்டியர்கள் தெற்கிலிருந்து வடக்காக வந்ததைத் தென்மதுரை, கபாடபுரம், மதுரை என அவர்களது தலைநகர மாற்றத்தைக் கொண்டு உணர்த்துகிறது. ஆதிச்சநல்லூரில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் இரும்புக் கருவிகளுடன் ஏராளமான செம்புக் கருவிகளும் கிடைத்துள்ளன. மேலும் இங்குக் கிடைத்த ஆபரணங்களும், கருவிகளும் தமிழகத்தின் வடக்குப் பகுதியில் கிடைத்தவற்றிலிருந்து சிறிது மாறுபட்டுக் காணப்படுகின்றன.

அண்மையில் தேனி மாவட்டப் பகுதியில் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டு ஏராளமான சங்க கால ஊர்கள் இந்நூல் ஆசிரியரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மேற்குத் தொடர்ச்சி மலைச் சாரலில் வைகை ஆற்றின் துணை ஆறுகளான முல்லையாறு, சுருளியாறு பாய்கின்ற வளமையான கம்பம் பள்ளத்தாக்கில் இவ்வூர்கள் உள்ளன. இவ் ஊர்களில் பெரும்பாலும் முதுமக்கள் தாழிகளே காணப்படுகின்றன. பாண்டி நாட்டையும் சேர நாட்டையும் இணைக்கும் முக்கியப் பெருவழி இதனூடே சென்றிருக்க வேண்டும் என்பதைக் கம்பத்திற்கு அருகாமையில் உத்தமபுரத்தில் கிடைத்த ரோமநாணயங்கள் பறை சாற்றுகின்றன (Santhalingam 1997: 57-60). எனவே, பெரிய கற்களைக் கொண்டு இறந்தவர்களுக்குப் பெருங்கற்படைச் சின்னங்களை உருவாக்கும் வழக்கம் தமிழகத்தின் வடக்குப் பகுதியில் ஊடுருவுவதற்கு முன்பாகவே இரும்பின் பயன்பாடும், கறுப்பு சிவப்புப் பானை ஓடுகளின் பயன்பாடும் தமிழகத்தின்

தெற்குப் பகுதியில் ஊடுருவிவிட்டன எனலாம். எனவே, முதுமக்கள் தாழிகளைத் தமிழகத்தில் பயன்படுத்திய மக்கள் பெருங் கற்படைச் சின்னங்களை பயன்படுத்திய மக்களைக் காட்டிலும் காலத்தால் முந்தியவர்கள் எனலாம். எனவே, பெரிய கற்களைக்கொண்டு நினைவுச் சின்னங்களை உருவாக்காமல் முதுமக்கள் தாழிகளை மட்டுமே பயன்படுத்திய மக்களின் பண்பாட்டினைப் பெருங்கற்படைப் பண்பாட்டுக்குள் உள்ளடக்கிக் கால நிர்ணயம் செய்வதைத் தவிர்க்கலாம். இருப்பினும் பண்டைத் தமிழகம் என்பது வடவேங்கடம் முதல் தென்குமரி வரை தற்போதைய கேரள மாநிலத்தையும் உள்ளடக்கிய பகுதிகளாகவே விளங்கியுள்ளது என்பதைப் பண்டைத் தமிழகம் முழுவதும் விரவிக் கிடக்கின்ற தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுகள் பறைசாற்றுகின்றன.

தமிழகத்தில் குமரி முதல் வட எல்லையான வடவேங்கடம் வரை கிடைக்கின்ற நாணயங்கள், கல்வெட்டுகள், எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகள், மோதிரங்கள் எனப் பலவும் தமிழ்ப் பிராமி வரிவடிவத்தில் எழுதப்பட்டனவாகக் காணப்படுகின்றன. இவற்றில் சிலவற்றில் காணப்படும் தமிழ் மொழியின் தன்மை சங்க இலக்கியங் களுக்கும் முற்பட்டதாகக் காட்சியளிக்கிறது. இத்தகைய நிலைப் பாட்டிற்கு மாறாக வடவேங்கடத்திற்கு வடக்கே தமிழகத்தின் எல்லைக்கு அப்பால் பிராகிருத மொழி ஆவணங்களே கிடைக்கின்றன. இது சங்க இலக்கியம் குறிப்பிடுவது போல் மொழிபெயர்தேயம் என்று ஏற்றுக் கொள்வதில் எவ்வித இடர்ப்பாடும் இல்லை. பண்டைத் தமிழகத்தில் தற்போதைய கேரள மாநிலமும் உள்வாங்கப்பட்டு இருந்தது என்பதை அண்மையில் எடக்கல் என்ற இடத்தில் கிடைத்த தமிழ்ப் பிராமிக் கல்வெட்டு பறைசாற்றுகின்றது.

பல்வேறு இயற்கைச் சூழலில் வாழ்கின்ற மக்கள் அச்சூழலுக்குத் தக்கவாறு தம்மை மாற்றிக்கொண்டு தமது பண்பாட்டுக் கூறுகளை முன்னெடுத்துச் சென்றுள்ளனர் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். நீத்தார் நினைவாக எழுப்பப்படும் நினைவுச் சின்னங்களின் அடிப்படையில் மட்டுமே மக்களை வேறுபடுத்திப் பார்ப்பது தவறான அணுகு முறையாக அமைந்துவிடும். இச்சின்னங்களைப் பண்பாட்டின் ஒரு கூறாக மட்டுமே கணக்கில் கொண்டு அதை மற்ற பண்பாட்டுக் கூறுகளுடன் இணைத்துப் பார்த்தல் வேண்டும். சங்க இலக்கியம் மக்களின் பண்பாட்டுக் கூறுகளை

நிலப்பாகுபாட்டின் அடிப்படையில் எடுத்தியம்பியபோதிலும் அனைவரையும் தமிழ் மக்கள் என்ற பொதுக் கூறுக்குள் அடக்கியிருப்பது இங்கு மனங்கொள வேண்டும். இத்தகைய நீத்தோர் நினைவுச் சின்னங்கள் பல்வேறு வடிவில் கி.மு. ஆயிரம் ஆண்டு முதல் சங்க காலம் வரை தொடர்ந்து வந்துள்ளன. சங்க இலக்கியங்கள் சுட்டுகின்ற தலைநகரப் பகுதிகளிலும், வணிகப் பெருநகரங்களிலும் துறைமுகப் பட்டினங்களிலும் இவை காணப்படுகின்றன. சில இடங்களில் ஒரே இடத்தில் ஆயிரத்திற்கு மேற்பட்ட சின்னங்கள் காணப்படுவது மக்கள் ஒரு இடத்தில் தொடர்ந்து வாழ்ந்துள்ளனர் என்பதைக் குறிக்கிறது. இச் சின்னங்களுக்கு அருகில் காணப்படும் வாழ்விடப் பகுதிகளின் அளவும் தன்மையும் இதை மேலும் தெளிவு படுத்துகின்றன. இப்பண்பாடு வரலாற்றுக் காலத்திலும் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டது என்பது கொடுமணலில் அகழப்பட்ட பெருங்கற்படைச் சின்னத்தில் இருந்து எடுக்கப்பட்ட தமிழ்ப் பிராமி பொறிக்கப்பட்ட பானை ஓட்டின் மூலம் உய்த்துணரலாம் (Rajan 1996:72-82). சூலூரில் பெருங்கற்படைச் சின்னத்தை அகழ்ந்தபொழுது கிடைத்த வெள்ளி முத்திரை நாணயமும் (Beck 1930:166-182), தருமபுரி மாவட்டத்தில் கம்பையநல்லூர் என்ற இடத்தில் பெருங்கற்படைச் சின்னத்திலிருந்து கிடைத்த இருமொழி வரிவடிவக் காசும் இங்குச் சுட்டத்தக்கவை. கம்பையநல்லூரில் கிடைத்த நாணயம் பல நிலைகளில் சிறப்பு வாய்ந்ததாகும். இக்காசு கரோஷ்டி, கிரேக்கம் என இரு வரிவடிவங்களில் எழுதப்பட்டது என்பதும் இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் தட்சசிலத்தை மையமாகக் கொண்டு கி.பி.30-40ஆம் ஆண்டுகளில் ஆட்சிபுரிந்த சீத்திய மன்னன் (Scythian ruler) இந்திரவர்மனின் மகன் அஸ்பவர்மனால் வெளியிடப்பட்டது என்பதும் இக்காசின் சிறப்பம்சமாகும் (Sukavana Murugan 2000). இது அக்காலக்கட்டத்தில் தமிழகம் அப்பகுதியுடன் கொண்ட தொடர்பினை வலியுறுத்துவதாகும். கி.பி.முதலாம் நூற்றாண்டிற்கு முன்பாகவே தமிழகம் அப்பகுதியுடன் தொடர்பு கொண்டிருந்தது என்பதற்கு அப்பகுதியில் இருந்து அப்பகுதிக்கே உரித்தான வைடூரியங்கள் (lapis lazuli) இங்குத் தருவிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டு உள்ளதைக் கொடுமணல் அகழாய்வு புலப்படுத்துகிறது. இலங்கையின் வடபகுதியான யாழ்ப்பாண தீபகற்பத்தில் ஆணைக்கோட்டை என்ற இடத்தில் அகழாய்வு மேற் கொள்ளப்பட்டது. இறந்தவரின் அருகாமையில் இரு வரிவடிவ

எழுத்துகளைத் தாங்கிய முத்திரை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. இம் முத்திரையின் மேல்வரியில் மூன்று குறியீடுகளும் கீழ் வரியில் அதற்கு இணையான 'கோவேத' எனப் பொறிக்கப் பட்ட தமிழ் வரிவடிவங்களும் காணப்பட்டன (Ragupathy 1987: 199). இது தமிழ் மக்கள் அக்காலக்கட்டத்தில் பயன்படுத்திய இரு வரிவடிவங்களைத் தெளிவுபடுத்துகிறது. இத்தகைய குறியிடுகள் தமிழகத்தில் அகழாய்வு மேற்கொள்ளப்பட்ட அனைத்துச் சங்ககால ஊர்களிலும் கிடைத்து உள்ளன. குறியிடுகளின் எண்ணிக்கையைப் பார்க்கும் பொழுதும் அதன் தன்மையைப் பார்க்கும்பொழுதும் சங்க காலத்திற்கு முன்பாகவே தமிழ் மக்கள் ஒருவகையான வரிவடிவத்தைப் பயன்படுத்தினர் என்பதை உய்த்துணரலாம். இக்குறியீடுகளில் பெரும்பான்மையானவை சிந்துவெளிக் குறியீடுகளுடன் ஒத்துள்ளன என்பதையும் இங்கு நினைவு கூர்தல் வேண்டும். கொடுமணல், மாங்குடி, கரூர், அரிக்கமேடு, உறையூர், தேரிருவேலி போன்ற இடங்களில் மேற் கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் கிடைத்த பண்பாட்டுக் கூறுகளின் அடிப்படையில் பெருங்கற்படைச் சின்னமும் முதுமக்கள் தாழியும் வரலாற்றுக் காலத்திலும் தொடர்ந்து கடைப்பிடிக்கப் பட்டு வந்தன எனலாம்.

பெருங்கற்படைச் சின்னம் மற்றும் முதுமக்கள் தாழி பற்றிய ஆய்வு தமிழகத்தில் இன்னமும் முழுமை பெறவில்லை. இந்நூல் ஆசிரியரால் தமிழகத்தில் தருமபுரி, கிருட்டிணகிரி, வேலூர், திருவண்ணாமலை, விழுப்புரம், கடலூர், ஈரோடு, புதுக்கோட்டை, தேனி, கோவை மாவட்டப் பகுதிகளில் மேற் கொள்ளப்பட்ட தொல்லியல் கள ஆய்வுகளில் மட்டும் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட சங்ககால எச்சங்கள் கொண்ட ஊர்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இன்னும் தமிழகத்தின் பிற பகுதிகளில் கள ஆய்வு மேற்கொள்ளப்படும் பொழுது இதன் எண்ணிக்கை பெருமளவு பெருகும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. இருப்பினும் இது மேற்பரப்பாய்வு என்பதால் பண்பாட்டின் முக்கியக் கூறுகள் வெளிப்படுவது இல்லை. அகழாய்வு செய்யப்படும்பொழுது மட்டுமே முழுமையாகச் சங்ககாலப் பண்பாட்டினை உணர முடியும். இருப்பினும் இதுவரை மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வு மூலம் மனிதன் வேட்டையாடுதலிலிருந்து, கால்நடை வளர்ப்பிற்கு மாறிப் பின்னர் விவசாயத்திற்கு மாறிய பண்பாட்டு வளர்ச்சி நிலையை இவை தெளிவுபடுத்துகின்றன. எடுத்துக்காட்டாக,

பதிற்றுப்பத்தில் குறிப்பிடுகின்ற கொடுமணம் (கொடுமணல்) என்ற சங்ககால ஊரில் நடத்தப்பட்ட அகழாய்வில் இருநூற்றிற்கும் மேற்பட்ட எழுத்துப்பொறிப்புப் பெற்ற பானை ஓடுகளும், வெள்ளி முத்திரை நாணயங்களும், இரும்பு, எஃகு செய்வதற்கான உலைக் கலங்களும், இரும்பு ஆயுதங்களும், வைடூரியம், சூதுபவளம், பளிங்கு, நீலக்கல், பச்சைக்கல் போன்ற அரிய மணிக்கற்களில் செய்யப்பட்ட ஏராளமான மணிகளும், குறியீடுகளும், நெய்யப்பட்ட துணியும், அவை நெய்வதற்குப் பயன்படுத்திய தக்களிகளும் என ஏராளமான தரவுகள் வெளிக்கொணரப்பட்டன (Rajan 1997a:75-90) கொடுமணலில் பண்டைய வாழ்விடம் 50 ஏக்கர் நிலப் பரப்புக் கொண்டது. இதில் ஒரு ஏக்கருக்குக் குறைவாகவே அகழாய்வு செய்யப்பட்டுள்ளது. அதேபோன்று அங்குள்ள நூற்றுக்கணக்கான பெருங்கற்படைச் சின்னத்தில் பதின்மூன்று மட்டுமே தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையால் அகழாய்வு செய்யப்பட்டுள்ளன. இதுவரை மேற்கொண்ட ஒட்டுமொத்த அகழாய்வையும் கணக்கில் கொண்டால் ஒரு சதவீதத்திற்கும் குறைவான பெருங்கற்படைச் சின்னங்களே அங்கு அகழாய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த ஒரு சதவீத அகழாய்வில் பல்வேறு வகையான தரவுகள் கிடைக்கின்றன என்றால் மீதமுள்ள 99 சதவீதப் பகுதிகளை அகழாய்வு செய்யும்பொழுது மேலும் பன்மடங்கு செய்திகள் அல்லது தொல்பொருட்கள் வெளிவரும் என்பதை உய்த்துணரலாம். இவ்வூர் சங்க இலக்கியமான சேரர்களின் அரசமரபை வெளிப்படுத்தும் பதிற்றுப்பத்தில் இரு இடங்களில் மட்டுமே குறிப்பிடப்படுகிறது. பிற சங்க இலக்கியங்களில் இவ்வூர் பற்றிய குறிப்புகள் இல்லை. சங்க காலப் புலவர்களால் பெரிதும் பேசப்படாத சங்க கால ஊரான கொடுமணலில் மேற்கொள்ளப்பட்ட ஒரு சதவீத அகழாய்வில் மட்டுமே இத்துணைத் தொல்பொருட்கள் கிடைக்கின்றன என்றால் சங்க இலக்கியங்களில் வியந்து பேசப்படுகின்ற மதுரை, பூம்புகார், கொற்கை, முசிறி, கரூர், உறையூர் போன்ற இடங்களில் அகழாய்வு செய்யப்படும் பொழுது எத்துணைத் தொல்பொருட்கள் அல்லது செய்திகள் வெளிவரும் என்பதை எண்ணிப்பார்க்கின்றபொழுது மலைப்பாக இருக்கிறது. அண்மையில் தமிழ்நாடு தொல்லியல் ஆய்வுத்துறை வைகை ஆற்றின் முகத்துவாரத்தில் அவ்வாற்றின் வடகரையில் அமைந்துள்ள அழகன்குளம் என்ற சங்ககாலப் பாண்டியர் துறைமுகப் பட்டினத்தில் இருந்து எண்ணற்ற தொல் பொருட்களை வெளிக்கொணர்ந்துள்ளது. இத்துறைமுகப்பட்டினம்

இலங்கையுடனும் ரோம நாட்டுடனும் கொண்ட தொடர்பினை இங்குக் கிடைத்த இலங்கை நாட்டிற்கே உரித்தான பிராகிருத மொழியில் பெயர் பொறிக்கப் பெற்ற பானை ஓடுகளும், ரோம நாட்டைச் சார்ந்த நாவாயின் உருவம் பொறித்த பானை ஓடும், ரோம நாணயங்களும் பறைசாற்றுகின்றன (Kasinathan 1997) ஆனால் சங்ககாலத் துறைமுகப்பட்டினத்தின் உன்னதத் தன்மையை வெளிப்படுத்தும் இத்துறைமுகப் பட்டினத்தைப் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. பாண்டி நாட்டிற்குச் சொந்தமான இத்துறைமுகப் பட்டினம் பெரிதும் பேசப்படாமல் அவர்களது கொற்கைத் துறைமுகமே பெரிதும் பேசப்படுகிறது. எனவே, கொற்கைத் துறைமுகப்பட்டினம் அழகன் குளத்தைவிட அளவிலும் சிறப்பிலும் மேன்மை வாய்ந்ததாக இருந்திருக்க வேண்டும். சங்கப் புலவர்களின் கவனத்தை ஈர்க்காத அழகன்குளம் துறைமுகப் பட்டினத்திலேயே இத்துணைச் சிறப்பு வாய்ந்த தொல்பொருட்கள் கிடைக்கின்றதென்றால் புலவர்களால் பெரிதும் போற்றப்படுகின்ற ஊர்கள் அக்காலக்கட்டத்தில் மிகச் சிறப்புற்று இருக்க வேண்டும் என்பது திண்ணம். எனவே சங்ககாலத்தில் தமிழ் மக்கள் எல்லா நிலைகளிலும் உன்னத நிலையை அடைவதற்கு உறுதுணையாக இருந்தவர்கள் சங்ககாலத்திற்கு முன்பு வாழ்ந்தவர்களாகிய பெருங்கற்படைச் சின்னங்களையும் முதுமக்கள் தாழிகளையும் பெரிதும் பயன்படுத்திய மக்களே ஆவர். இவர்கள் தமிழகத்தில் கி.மு. ஆயிரம் முதல் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு வரை பல்வேறு பண்பாட்டுப் படிநிலைகளைக்கடந்து வந்து பின்னர் கி.மு.5ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் வரலாற்றுக் காலத்திற்குள் நுழைந்தனர் எனலாம். வரலாற்றுக் காலமான சங்ககாலத்தில் கோலோச்சிய பின்னரும் இச்சின்னங்களை எழுப்பும் பழக்கம் கொண்ட இப்பண்பாடு கி.பி. முதலாம் நூற்றாண்டு வரை தொடர்ந்து வந்திருப்பதைத் தமிழகத்தில் அண்மையில் கிடைத்த பல்வேறு அகழாய்வுச் சான்றுகள் புலப்படுத்துகின்றன.

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழகத்தில் நின்று நிலவிய இப்பெருங்கற்படைச் சின்னங்கள் பற்றியும், முதுமக்கள் தாழிகள் பற்றியும் அறிந்துகொள்ள அகழாய்வுகள் மட்டுமே துணைபுரிந்துள்ளன. இப் பண்பாட்டின் கால வரிசையில் ஏற்பட்ட மாற்றங்களைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுவதற்கு ஏதுவான இலக்கியச் சான்றுகள் நம்மிடையே இல்லை. இப்பண்பாட்டின் இறுதிக்கட்டத்தில் வெளியான சங்க

இலக்கியங்களே இப்பண்பாட்டின் இறுதிக் கூறுகளை விவரிக்கின்றன. இருப்பினும் சங்க இலக்கியங்களை ஆழ்ந்து நுணுகிப் பார்க்கின்றபொழுது இச்சின்னங்களின் தோற்றத்தில் ஏற்பட்ட படிநிலை வளர்ச்சியையும் மறைமுகமாகச் சங்கப் பாடல்களின் தொன்மையையும் அறிந்துகொள்ள முடிகிறது என்பதால் இப்பண்பாட்டின் கூறுகளை அறிந்துகொள்வது அவசியமாகிறது.

## பெருங்கற்படைச் சின்னங்களும் சங்க இலக்கியமும்

சங்க இலக்கியங்கள் பெருங்கற்படைப் பண்பாட்டின் இறுதிக் கட்டத்தில் நிகழப்பெற்ற நிகழ்வுகளைக் குறிப்பிடு கின்றன. தொறுப்பூசலில் ஈடுபட்டு இறந்துபட்ட வீரமக்களுக்கு எழுப்பப்பட்ட கற்பதுக்கை குறித்தும், அக்கற்பதுக்கைகளுடன் நடப்பட்ட நெடுங்கற்கள் (menhir) தொடர்பாகவும் பின் இந்நெடுங்கற்கள் எங்ஙனம் வீரக் கல்லாக (hero stone) மாறியன போன்ற செய்திகளையும் தமது பாடல்கள் மூலம் புலப் படுத்துகின்றனர். ஆயினும் இவ்விடத்தில் ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற சில பாடல்கள் பெருங்கற்படைப் பண்பாட்டைக் குறிப்பது மூலம் மொத்த தமிழகமே இந்நிலைப்பாட்டினைத் தான் கொண்டிருந்தது என்று கொள்ள முடியாது. சங்கப் புலவர்கள் தாம் வாழ்ந்த சூழலில் குறிப்பாக வாழ்ந்த பகுதிகளில் கண்ணுற்ற செய்திகளைப் பதிவு செய்து சென்றுள்ளனர். இன்னும் சிலர் செவிவழிச் செய்தியாகப் பெற்றவற்றையும் பதிவு செய்திருக்க வேண்டும். இதை மனத்தில் நிறுத்தியே சங்க இலக்கியங்களில் காணப்படும் பெருங் கற்படைத் தொடர்பான செய்திகளை ஆய்விற்கு உள்வாங்கிக் கொள்ள வேண்டியுள்ளது.

பெருங்கற்படைச் சின்னங்களைப் பற்றிய ஆய்வு 1872இல் தொடங்கப்பட்டது. தொடங்கப்பட்ட காலம் தொட்டுச் சம காலத்தில் நிலவிய கருதுகோள்களுக்குத் தக்கவாறும், கருத்து முரண்பாடுகளுக்குத் தக்கவாறும், தேசிய எழுச்சிக்கு ஏற்றவாறும் இப்பண்பாட்டின் தொடக்கம், பரவல் மற்றும் காலங்களைக் கணிப்பதில் கருத்து மோதல்கள் ஏற்பட்டன. குறிப்பாக ஆரியர்-திராவிடர் பண்பாடு தொடர்பான கருத்து மோதல்கள் ஏற்பட்டபோது திராவிடர் கொள்கையைக் கடைப்பிடித்தவர்கள் திராவிடப் பண்பாட்டின் ஒரு சின்னமாக இவை விளங்கியதால் இப்பண்பாடு குறித்த ஆய்வு வலுப்பெற்றது எனலாம். இருப்பினும் இவ்வாய்வுகளுக்கு இடையே ஒருமித்த கருத்து

ஏற்படாமைக்குக் காரணம் தமிழகம் முழுவதும் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டுத் தரவுகள் வெளிப்படுத்தப்படாததும், தெரிவு செய்யப்பட்ட அகழாய்வுகள் மேற்கொள்ளப்படாததுமே ஆகும். இருப்பினும் இந்நூல் ஆசிரியரால் தமிழகத்தில் குறிப்பாக வடபகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட களஆய்வுகளும், கொடுமணல், மயிலாடும்பாறை, தாண்டிக்குடி போன்ற இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளும் இப்பண்பாடு தொடர்பான சில முக்கியக் கூறுகளை வெளிக் கொணர்ந்தன. அதேபோன்று நடுவண் அரசின் தொல்லியல் அளவீட்டுத்துறை (ASI) இவ்வாண்டு ஆதிச்சநல்லூரில் அகழாய்வுப் பணியை மேற்கொண்டுள்ளது. இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பாக அலெக்ஸாண்டர் ரே (Alexander Rea) என்பவரால் இங்கு அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது. இந்தியா சுதந்திரம் அடைந்ததற்குப் பின்பு தமிழகத்தின் தென்பகுதியில் முதுமக்கள் தாழிகளை வெளிக் கொணர்வதற்கு மேற்கொள்ளப்பட்ட முதல் அகழாய்வுப் பணி இது எனலாம்.

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழகத்தின் தெற்குப் பகுதியில் தாமிரபரணி நதிமுகத்துவாரத்தில் அமைந்துள்ள கொற்கைத் துறைமுகப் பட்டினத்தில் மட்டுமே அகழாய்வு செய்யப்பட்டுள்ளது (Abdul Majeed 1987:73-77). ஆனால் அந்நதியின் நீண்ட ஆற்றங்கரைப் பகுதியில் இதுவரை எவ்வித அகழாய்வும் மேற்கொள்ளப் படவில்லை. இதனால் தமிழகத்தின் தென்கோடியில் வாழ்ந்த தமிழ் மக்களின் சிறப்புப் பண்பாட்டுக் கூறுகளை அறிய இயலவில்லை. மேலும் தமிழ்ப் பண்பாடு தெற்கிலிருந்து வடக்காகப் பரவியதா? என்பதையும் அறுதியிட்டுக் கூற இயலவில்லை. தற்பொழுது நடைபெற்று வரும் ஆதிச்சநல்லூர் அகழாய்வு ஓரளவிற்கு இதற்கு விடையளிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தியாவின் பிற மாநிலங்களைப்போல் அல்லாது தமிழகத்தில் செப்புத் தாது (copper ore) கிடைக்காமையாலும், செப்புத்தாது கிடைக்கும் பகுதிகள் வெகு தொலைவில் இருந்தமையாலும் தமிழகம் செப்புக்காலப் பண்பாட்டினைப் பெற்றுத் திகழவில்லை. ஆனால், அதற்கு மாறாக மற்ற மாநிலங்களைவிட இங்கு இரும்புத்தாது அதிகமாகக் கிடைப்பதால் இரும்பு உருக்குவதற்கான தொழில்நுட்பம் பெற்றவுடன் தமிழகத்தின் வளர்ச்சி பன்மடங்காகப் பல்கிப் பெருகியுள்ளதைத் தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட அனைத்து அகழாய்வுகளும் எடுத்தியம்புகின்றன. வைகை ஆற்றுக்குத்

தெற்கே மாங்குடி, தேரிருவேலி, கல்லுப்பட்டி போன்ற இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் தென்தமிழகம் நுண்கற்கருவிக்காலப் பண்பாட்டிலிருந்து நேரடியாகப் பெருங்கற்படை அல்லது முதுமக்கள் தாழிப் பண்பாட்டிற்கு மாறியதைப் பறைசாற்றுகின்றன (Shetty 2003). வைகை ஆற்றுக்கு வடக்கே குறிப்பாகப் பெண்ணையாறு, பாலாறு ஆற்றுப் பள்ளத்தாக்குகளில் அல்லது நீர்ப்பிடிப்புப் பகுதிகளில் அமைந்துள்ள ஊர்களான அப்புக்கல், பையம்பள்ளி, மயிலாடும்பாறை போன்ற இடங்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் வடதமிழகம் புதிய கற்காலப் பண்பாட்டிலிருந்து பெருங்கற்படைப் பண்பாட்டுக் காலத்திற்கு மாறியதைத் தெரிவிக்கின்றன (Rao 1964-65:22-23; 1967-68:26-30; Rajan 2003: 120-126).

எனவே, தமிழகம் தமது இயற்கைச்சூழலின் காரணமாகவும், கனிமவளத்தின் காரணமாகவும் இரும்பின் பயன்பாட்டிற்கு அறிமுகமாகும் வரை பல்வேறுபட்ட பண்பாட்டு வளர்ச்சி நிலைகளில் இருந்துள்ளது. எனவே, ஒட்டு மொத்த தமிழகமும் ஒரே பண்பாட்டுக் கூற்றினைக் கொண்டிருந்தது எனக் கருத இயலாது. அங்ஙனம் இருக்க வேண்டிய அவசியமும் இல்லை. இருப்பினும் இரும்பின் பயன்பாடு தமிழகத்தில் புகுத்தப்பட்டபொழுது அக்கனிமம் பரவலாகத் தமிழகத்தில் கிடைப்பதால் அதன் பயன்பாட்டின் மூலம் பெற்ற உற்பத்திப் பெருக்கம் தமிழகம் ஒருமுகப்பண்பாட்டினை நோக்கி அடியெடுத்து வைக்க உதவியது. இந்நிலைப்பாடு தமிழகத்தில் கி.மு ஆயிரத்தில் தொடங்கிவிட்டது எனலாம். இரும்பின் பயன்பாட்டினால் ஏற்பட்ட உற்பத்திப் பெருக்கம் மற்றும் உபரி உற்பத்தி சமூகத்தின் பல்வேறு வளர்ச்சி நிலைக்கு எடுத்துச் சென்றது. இது சமூகத்தின் கட்டமைப்பில் பல்வேறு குழுக்களின் தோற்ற எழுச்சியையும் மன்னர், வேளிர், வேந்தர் போன்ற அரசு உருவாக்கத்திற்கும் அடிகோலியது.

கி.மு. ஆயிரம் ஆண்டு வாக்கில் உருவான இந்நினைவுச் சின்னங்கள் தமிழகத்தில் காணப்படும் காலத்தால் முந்திய நினைவுச் சின்னங்கள் எனலாம். நீத்தோர் நினைவாக எழுப்பப்பட்ட இந்நினைவுச் சின்னங்களில் இறந்தவர்களின் எஞ்சிய எலும்புத் துண்டுகள் (post-excarnation) வைக்கப்பட்டு இருந்தன. இதற்கு முன்பு வழங்கிய புதிய கற்காலப் பண்பாட்டில் மனிதனின் முழு எலும்புக்கூடும் கிடைத்துள்ளது. பெருங்கற்காலப் பண்பாட்டிற்குப் பின்னர் வைதீக மரபின்

தாக்கத்தால் எரியூட்டுதல் தமிழகத்தில் வழக்கத்திற்கு வந்தது. இவ்விடைப்பட்ட காலமான பெருங்கற்படைக் காலம் சிறப்பு வாய்ந்த திராவிடர் பண்பாட்டிற்குரிய காலமாக விளங்கி வந்துள்ளது.

தமிழகத்தில் பெருங்கற்படைச் சின்னங்களும், முதுமக்கள் தாழிகளும், ஈமப்பேழைகளும் பரவிக்கிடப்பதும்; அவை ஒரே இடத்தில் ஆயிரக்கணக்கில் இருப்பதும்; இப்பண்பாட்டுடன் தொடர்புடைய வாழ்விடத்திலிருந்தும், இச் சின்னங்களிலிருந்தும் வெளிப்போந்த தொல்பொருட்கள் இவர்கள் ஒரே இடத்தில் வாழ்ந்ததையும்; மக்கிய நிலையில் கிடைத்த அரிசி, சோளம், கம்பு போன்ற தானிய வகைகள் இவர்கள் உற்பத்திப் பெருக்கத்தில் ஈடுபட்டு இருந்ததையும்; நீர் நிலைகளுக்கு அருகில் இவை காணப்படுவதால் மழைநீர் கொண்டு உற்பத்தி செய்யும் முறைமையிலிருந்து குளம், ஆற்றுப்பாசனத்தில் ஈடுபட்டதையும் தெளிவுறுத்துகிறது. இப்பண்பாட்டின் இறுதிக் கட்டத்தில் விவசாயம், இரும்பு மற்றும் எஃகுத் தொழில், பருத்தியாடை நெய்தல், மணிகள் செய்தல், கட்டிடக்கலை போன்ற அனைத்து நிலைகளிலும் தம்மை உயர்த்திக் கொண்டனர்.

சுமார் *10* முதல் *15* டன் எடை கொண்ட கற்களைக் கொண்டு இப்பெருங்கற்படைச் சின்னங்கள் உருவாக்கப் பட்டதைப் பார்க்கும் பொழுது இவை ஒரு தனிமனிதனால் உருவாக்கப்படவில்லை என்பதும், ஒரு சமுதாயமே முழுமையாகத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருக்க வேண்டும் என்பதும் புலனாகிறது. இங்குத் தமிழ் மக்களின் சிறப்புகளுள் ஒன்றைக் குறிப்பிட வேண்டியுள்ளது. நீத்தோர் நினைவாக அனைவரும் வியக்கும் வண்ணம் தமது திறனை முழுமையாகப் பயன்படுத்தி இம்மாபெரும் சின்னங்களை உருவாக்கிய தமிழ் மக்கள் தாம் வாழ்வதற்கான வீடுகளை எளிமையானவையாக எழுப்பிக் கொண்டனர். கட்டிடக் கலையில் பல்வேறு நுணுக்கங்களை அறிந்திருந்த போதிலும் இவர்கள் தமக்கென ஆடம்பரமான மாளிகைகளை எழுப்பிக் கொள்ளவில்லை. இது சமகாலச் சமூகத்தின் பிரதிபலிப்பாக அல்லது எதிர்பார்ப்பாக இருக்கலாம். இந்நிலைதான் ஐநூறு ஆண்டுகள் முன்பு வரை தமிழகத்தில் நிலவியது எனலாம். மாபெரும் கோயில்களை உருவாக்கிய பிற்கால மன்னர்களான பல்லவர்களோ, பாண்டியர்களோ, சோழர்களோ இந்தியாவின் பிறபகுதிகளில் இருப்பது போலல்லாமல் தமக்கெனக் கல்லால் ஆன எவ்வித

அரண்மனையையும் உருவாக்கிக் கொள்ளவில்லை. எனவே, இப்பெரும் சின்னங்கள் அக்கால மக்கள் தமது மூத்தோரின் மீது வைத்திருந்த பற்றுதலையும் ஈடுபாட்டையும் காட்டுகின்றன.

இவை உயர்குடிமக்கள், சாதாரண மக்கள், ஆண், பெண் எனப் பல்திறத்தாருக்கும் எழுப்பப்பட்டதாகச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பிய போதிலும் அச்சின்னங்கள் அமைக்கப்பட்டவிதத்தினையும், அதனுள்ளே பெரும் படையலாக வைக்கப்பட்ட பொருள்களின் தன்மையினையும், அளவினையும் பார்க்கும்பொழுது உயர்குடி மக்களுக்கே பெரும்பாலும் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. இது சங்க காலத்தில் அதாவது பெருங்கற்படைப் பண்பாட்டின் இறுதிக் காலக்கட்டத்தில் நிகழ்ந்திருக்க வேண்டும். சங்கம் மருவிய காலம் வரை இவை தொடர்ந்து இருந்தன. இதனைப் புகார் நகரத்துச் சக்கரவாளக்கோட்டத்தில் நிலவிய பல்வேறு நீத்தோர் நினைவுக் கடனைச் சுட்டும் *மணிமேகலை* வரிகள் மூலம் உணரலாம்.

*சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுவோர்*
*தாழ்வயின் அடைப்போர் தாழியிற் கவிப்போர்*
*(மணிமேகலை 6.111.11.66-67)*

எனச் சுடுபவர்களையும் (cremation), இறந்தவர்களை ஓரிடத்தில் வைப்பதையும் (post-excarnation burial), குழியில் இடுவதையும் (pit burial), நிலத்திற்கடியில் கல்லறை அமைத்து வைப்பதையும் (rock chamber or cist burial) தாழிகள் இட்டு அதன் மேல் மூடி கொண்டு மூடுவதையும் (urn burial encapped with lid) தெளிவாகக் குறிப்பிடுகிறது. இதையே பாண்டியன் நம்பி நெடுஞ்செழியன் காலத்தில் வாழ்ந்த புலவர் பேரையில் முறுவலார் தமது புறநானூற்றுப் பாடலில்

*இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ*
*படு வழிப்படுக . . . .*
*(புறம் 239:20-21)*

எனக் குறிப்பிடுகிறார். இதில் 'இடுக' என்பது இறந்தவர்களை ஓர் இடத்தில் இடுவதையும் (exposure), 'சுடுக' என்பது எரியூட்டுதலையும், 'படுவழிப்படுக' என்பது இறந்தோரை நேரடியாக ஈமக்குழியில் வைப்பதையும் குறிக்கிறது. இம்மூன்று முறையும் வழக்கில் இருந்தமைக்கான சான்றுகள் அகழாய்வில் கிடைப்பதன்மூலம் இப்பாடல்களில் காணப்படும் குறிப்புகள்

மெய்ப்பிக்கப்படுகின்றன. சங்கப் பாடல்களில் வரும் முதுகாடு (*புறநானூறு 356*) மேற்கூறியவற்றையே சுட்டி நிற்கின்றது. தாம் பெற்ற மகள் உடன்போனதை எண்ணி வருந்திய தாய்

*மா இருந் தாழி கவிப்ப,*
*தா இன்று கழிக, ஏற் கொள்ளாக்-கூற்றே*

*(நற்றிணை 271:11-12)*

என்று பாடும்பொழுது, தாழிகள் மூடிகொண்டு மூடப்பட்டு உள்ளதைத் 'தாழிகவிப்ப' என்று பரணர் குறிப்பிடுகிறார். தமிழகத்தில் கிடைக்கும் பெரும்பான்மையான தாழிகள் கருப்பு சிவப்புப் பானை ஓடுகளால் வனையப்பட்ட மூடிகள் கொண்டு மூடப்பட்டிருப்பதைப் பல்வேறு அகழாய்வுச் சான்றுகள் தெளிவுபடுத்துகின்றன. இத்தகைய தாழிகள் மன்னர்களுக்கும் வைக்கப்பட்டன என்பதைப் பதிற்றுப்பத்துப் பாடலும் (44.11.22-23), குளமுற்றத்துத் துஞ்சிய சோழமன்னன் கிள்ளி வளவனைத் தாழியில் அடைப்பதற்காகப் பானை செய்யும் வினைஞரைப் பார்த்து அய்யூர் முடவனார் பாடும் பாடலும் இதை உறுதிப்படுத்துகின்றன (புறம் 228;1, 10-15). செந்நிறத் தாழிகள் புதைக்கப்பட்ட இடத்தின் மேல் குவியலாகப் பரல்கள் இட்டு மூடப்பட்டிருப்பதை (cairn packing entombing urns) பெருஞ்சித்திரனார் தமது புறப்பாடலில் "*கவி செந் தாழி-க்-குவிப்புறத்து இருந்த ........... காடு முன்னினனே*" எனத் தம் புரவலர் வெளிமானைப் பற்றிக் குறிப்பிட்டுக் காட்டுகிறார் (புறம் 238:1,5). பெண்களையும் தாழிகளில் இட்டுப் புதைத்தனர் என்பதைத் தும்பிசேர் கீரனார் தமது "*கலம் செய்கோவே கலம் செய்கோவே*" எனத் தொடங்கும் சிறப்புமிகு புறப்பாடலில் குறிப்பிடுகிறார் (புறம் 256:1-7).

முதுமக்கள் தாழி அடக்கத்தைப் பற்றிக் கூறுகின்ற மேற்குறிப்பிட்ட பாடல் சான்றுகள் அனைத்தும் அரசர் முதல் சாதாரண மக்கள் வரை இயற்கையாக இறந்துபட்டவர்களுக்காக எழுப்பப்பட்டவை என்பதை இங்கு மனத்தில் கொள்ள வேண்டும். ஆனால் இதற்கு மாறாகப் பெருங்கற்படைச் சின்னங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்ற பாடல்கள் பெரும்பாலும் தொறுப்பூசலில் ஈடுபட்டு இறந்த வீரர்களுக்கும், பிற உயர்குடி மக்களுக்கும் எழுப்பப்பட்டதாகக் குறிப்பிடுகின்றன. இது இருவேறுபட்ட நிலைப்பாட்டினைச் சுட்டி நிற்கின்றது. எனவேதான் இடுகாடு பற்றி வருகின்ற சங்கப் பாடல்கள்

காலத்தால் முந்தியதாகவும், சுடுகாடு குறித்து மட்டும் வருபவை காலத்தால் பிந்தியதாகவும் இருக்கவேண்டும் எனக் கருதவேண்டியுள்ளது. ஆனால் பண்பாட்டு வளர்ச்சி நிலையில் ஏற்பட்ட இம்மாற்றங்கள் பின்னர் வந்தவர்களால் உணர்ந்து கொள்ள இயலாது போயின. எடுத்துக்காட்டாக, ஒட்டக்கூத்தர் *தக்கயாகப்பரணியில்* (376) ஆசுவீகர்களின் அல்லது சமணர்களின் பற்றான வடக்கிருந்து உயிர் நீத்தல் பற்றி விமர்சிக்கின்ற பொழுது சங்க காலத்தில் சமணர்கள் வாழ்ந்த கற்குகைகளின் அருகாமையில் கிடைக்கின்ற பெருங்கற்படைச் சின்னங்களையும், முதுமக்கள் தாழிகளையும் சமணர்களாகக் கணக்கில் கொண்டு "*தாழியிற் பிணங்களும் தலைப்பட வெறும் தவப் பள்ளியில் பிணங்களும் புலப்பலப்படுத்தியே*" எனக் குறிப்பிடுகிறார். இவர் *விக்கிரம சோழன் உலாவிலும்* (11.14-16) *குலோத்துங்க சோழன் உலாவிலும்* (11.23-24), இறந்தோரை முதுமக்கள் தாழியில் வைத்துப் புதைத்ததாகக் கூறுகிறார்.

பின்னாளில் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் ஆசுவீகர்கள் இறக்கும்வரை தாழியில் இருந்து தவம் புரிந்தனர் என்பதைத் "தாழி கவிப்பத் தவம் செய்வார் மண்ணக வழி நோற்றன மால்வரையே" எனக் குறிப்பிடுகிறார். ஆனால் சமகாலச் சங்கப் பாடல்கள் தாழிகள் அனைத்தும் தவம் புரியும் ஆசீவகர்களுக்கு எழுப்பப்பட்டன எனக் குறிப்பிடாது அனைவருக்கும் எழுப்பப்பட்டதாகவே குறிக்கின்றன. மேற்குறிப்பிட்ட செய்திகள் அனைத்தும் கடற்கரையோரத்தில் குறிப்பாகக் காவிரிப்படுகையில் சோழநாட்டில் நடைபெற்ற நிகழ்வுகளாகவே வருவதை இங்குக் கருத்தில் கொள்ளவேண்டும். இலக்கியங்களில் தாழியெனவும், முதுமக்கள் தாழி எனவும், முதுமக்கள் சாடி எனவும் வருபவை இப்பொழுது மருவி மதமதக்கா சால், மதமதக்கா தாழி, பாண்டவர் குழி (மாண்டவர் குழி), கலசம், குலுக்கை எனப் பலவேறாக அழைக்கப்படுகின்றன.

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி வட்டம் திருக்கட்டளையில் அமைந்துள்ள சுந்தரேஸ்வரர் திருக்கோயிலின் தென் சுவரில் உள்ள சோழ மன்னனின் (பரகேசரி) கல்வெட்டு எல்லைகளை வரையறுக்கும்போது முதுமக்கள் தாழிகள் விரவிக் கிடக்கும் காட்டை '*கலசக்காடு*' என்றே குறிப்பிடுகிறது (*IPS* 38). அதேபோல் நகரத்தார்மலை(நார்த்தாமலை)யில் உள்ள 13ஆம் நூற்றாண்டுச் சார்ந்த பாண்டிய மன்னன் மாறவர்மன் சுந்தரபாண்டிய தேவரின் கல்வெட்டு தாயனூர் (தாயினிப்பட்டி)

குளத்தின் உள்வாயிலில் பெருங்கற்படைக் காலம் தொட்டு இன்றுவரை நிலைத்து நிற்கின்ற பெருங்கற்படைச் சின்னங்களை '*குரக்குப்படை*' என்று குறிப்பிடுகிறது (*IPS* 325). '*படை*' என்பது இறந்தோருக்காக வைக்கும் ஈமச்சின்னமும் '*குரக்கு*' என்பது '*இறக்குவது*' அதாவது நிலத்தினுள்ளே இறக்குவது என்ற பொருளிலும் இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது. இன்று இது மருவி இப்பெருங்கற்படைச் சின்னங்கள் குரங்குகளால் உருவாக்கப்பட்டவை என்ற கருத்தின் அடிப்படையில் 'குரங்குப் பட்டடை' என அவ்வூர் மக்களால் அழைக்கப்படுகின்றன. மேற்கூறிய பெயர் மாற்றங்களின் காரணமாக நமது பண்பாட்டுச் சின்னங்களின் உண்மை நிலையை அறிய இயலாது போகின்றது. பொதுவாகத் தமிழகத்தில் கிடைத்த முதுமக்கள் தாழிகளைப் பார்க்கும்பொழுது அவற்றின் உருவ அமைப்பில் மிகப்பெரிய மாறுதல்கள் காணப்படவில்லை. இத்தாழிகள் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழக மண்ணில் சங்க காலத்திற்கு முன்பாக நின்று நிலவியிருக்க வேண்டும். என்பது ஈமக்காடுகளின் அளவையும் அதில் கிடைக்கும் முதுமக்கள் தாழிகளின் எண்ணிக்கையையும் பார்த்துக் கூறலாம். எடுத்துக்காட்டாக, நடுவண் அரசின் தொல்லியல் அளவீட்டுத் துறையினரால் ஆதிச்சநல்லூரில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வில் 3600 சதுரமீட்டர் பரப்பளவில் மட்டுமே 25க்கும் மேற்பட்ட முதுமக்கள் தாழிகள் வெளிப்போந்தன. ஆதிச்சநல்லூரின் ஈமக்காட்டின் அளவைப் பார்க்கும் பொழுது அகழப்பட்டவை ஒரு சதவீதத்திற்கும் குறைவானவையே ஆகும். முதுமக்கள் தாழிகளின் உருவ அமைப்பில் பெருத்த மாற்றம் காணப்படாததால் அகழாய்வின் மூலம் தாழிகளுடன் கிடைக்கும் தொல்பொருட்களை வைத்தே அவற்றின் கால வரையறையைக் கணக்கிட இயலும். அத்தகைய காலவரையறை செய்வதற்குத் தேவையான அகழ்வுகள் தமிழகத்தில் இதுவரை மேற்கொள்ளப்படவில்லை என்பதை வருத்தத்துடன் ஏற்றுக் கொள்ளவேண்டியுள்ளது. இந்நிலைக்கு மாறாகப் பெருங்கற்களைக் கொண்டு நேர்த்தியாக உருவாக்கப்பட்ட சின்னங்களிடையே ஒரு வளர்ச்சித் தன்மை காணப்படுவதை நம்மால் அறிய இயலும். இவ்வளர்ச்சி நிலையைச் சங்கப் பாடல்களும் மறைமுகமாக நமக்கு உணர்த்துகின்றன. இதை ஆய்வு செய்வதன்மூலம் குறிஞ்சி மற்றும் முல்லை நில வாழ் மக்களின் குறிப்பாக வட தமிழ்நாட்டு மக்களின் பண்பாட்டு நிலை நமக்குப் புலப்படும்.

இந்தியாவில் பெருங்கற்படை மற்றும் நடுகல் தொடர்பான தெளிவான செய்திகள் முதன் முதலில் சங்க இலக்கியத்திலேயே காணப்படுகின்றன என்பது இவ்விலக்கியத்திற்குரிய சிறப்புத் தன்மையாகும். இருபத்தைந்திற்கும் மேற்பட்ட சங்கப் புலவர்கள் இந் நடுகல் குறித்துப் பல்வேறு செய்திகளைத் தந்துள்ளனர். தமிழகத்தில் கிடைத்த நடுகற்கள் பெரும்பாலும் வட்டெழுத்து வரிவடிவத்தில் காணப்படுகின்றன. இவை சங்க காலத்தைச் சார்ந்த நடுகற்களாக இருக்க வாய்ப்பில்லை. காரணம் சங்க கால ஊர்களான கொற்கை, மாங்குடி, உறையூர், அரிக்கமேடு, கரூர், கொடுமணல், அழகன்குளம் போன்ற இடங்களில் மேற் கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் கிடைத்த பானை ஓடுகளிலும் சமணத் துறவிகளுக்கு அளிக்கப்பட்ட கற்குகைகளில் காணப்படுகின்ற பாண்டிய மன்னன் நெடுஞ்செழியன், சேரமன்னன் செல்வக்கடுங்கோவாழியாதன், அதியமான் ஆகியோரின் கல்வெட்டுகளிலும், பாண்டியன் பெருவழுதி, சேர மன்னர்கள் மாக்கோதை, கொல்லிப்பொறை வெளியிட்ட காசுகளிலும் தமிழ்ப் பிராமி எழுத்து வரிவடிவமே காணப்படுகிறது. எனவே, சங்க காலத்தில் தமிழகத்தில் புழக்கத்தில் இருந்த வரிவடிவம் தமிழ்ப் பிராமி தான் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை.

சங்கம் மருவிய காலத்திலேயே குறிப்பாக கி.பி.4-5ஆம் நூற்றாண்டு வாக்கில் தமிழ்ப் பிராமி வரிவடிவம் வட்டெழுத்து வரிவடிவமாகத் திரிபுற்றுப் பின்னர் கிபி.6ஆம் நூற்றாண்டில் வட்டெழுத்து என்ற முழுமையான வரிவடிவத் தன்மையைத் தமிழகம் முழுவதும் அடைகிறது. அறச்சலூர், பூலாங்குறிச்சி, சித்தன்னவாசல், அரசலாபுரம், இந்தளூர் போன்ற இடங்களில் கிடைத்த கல்வெட்டுகள் தமிழ்ப் பிராமியிலிருந்து வட்டெழுத்தாக மாறுகின்ற தன்மையைத் தெள்ளென நமக்குப் புலப்படுத்துகின்றன. எனவே வட்டெழுத்துப் பொறிக்கப்பட்ட நடுகற்களை கி.பி.5-6ஆம் நூற்றாண்டுக்கு முன்பு எடுத்துச் செல்ல இயலாது. மேலும் இதுவரை வட்டெழுத்துப் பொறிக்கப்பட்ட நடுகற்கள் எவற்றிலும் சங்க மன்னர்கள் பற்றிய குறிப்பேதும் கிடைக்கவில்லை. சங்ககால ஊர்களில் கிடைத்த தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகளில் காணப்படுகின்ற பெயர்களும், கல்வெட்டுகள், காசுகளில் கிடைக்கின்ற ஆட்பெயர்களும், சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற பெயர்களாக இருக்கும்பொழுது வட்டெழுத்து

நடுகற்களில் காணப்படும் பெயர்கள் பிற்காலத்தைச் சார்ந்தவையாக உள்ளன. எனவே, சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பெறும் நடுகல் சார்ந்த செய்திகள் பிற்காலத்திய நடுகற்களைச் சுட்டுவனவாக இருக்க இயலாது. எந்தவொரு இலக்கியமும் சமகாலத்திய அல்லது அதற்கு முந்திய செய்திகளைத் தாங்கி நிற்கலாம் என எதிர்பார்க்கலாமே தவிர பிற்காலத்தில் நடைபெறவுள்ள செய்திகளைத் தாங்கி நிற்கும் என் எதிர்பார்க்க இயலாது. எனவே, இதுவரை கிடைத்த நடுகற்கள் அனைத்தும் சங்க காலத்திற்குப் பிற்பட்டவையாக இருத்தலால் சங்க இலக்கியம் குறிப்பிடும் நடுகல் எவை? என்பதை அறிவியல் நோக்கில் பார்க்க வேண்டியுள்ளது.




படம் 5 தமிழகத்தில் நடுகற்கள் காணப்படும் இடங்கள்

*அகநானூறு, புறநானூறு, மலைபடுகடாம், ஐங்குறுநூறு, பட்டினப்பாலை* ஆகிய இலக்கியங்களில் காணப்படும் குறிப்புகள் கி.மு.5-4ஆம் நூற்றாண்டிற்குரிய பெருங்கற்படைச் சின்னங்கள் எங்ஙனம் மெல்ல மெல்லத் தன் தன்மையிலிருந்து மாறி வீரக் கற்களாக (நடுகற்களாக-memorial stone) உருமாறின என்பதைத் தெளிவாக எடுத்தியம்புகின்றன. இதன் மூலம் சங்க இலக்கியம் பல நூற்றாண்டுகளின் தொகுப்பு என்பதை உணர முடிகிறது.

சங்கப்பாடல்களில் வரும் நடுகல் தொடர்பான செய்திகள் பெரும்பாலும் அதியமான் ஆட்சிபுரிந்த தகடூர்ப் பகுதி, நன்னன் ஆட்சிபுரிந்த செங்கம் பகுதி, மலையமான் திருமுடிக்காரி ஆட்சி புரிந்த கோவிலூர் பகுதி, பாலாறு ஆற்றின் நீர்ப்பிடிப்புப் பகுதிகளில் மட்டுமே கிடைப்பதாலும், பிற்காலத்திய வட்டெழுத்து நடுகற்கள் இப்பகுதியிலேயே நிறைந்து காணப்படுவதாலும் இச்சங்கப் பாடல்கள் பெரும்பாலும் இப்பகுதி குறித்துப் பாடப்பட்டவையாகவே கருதலாம் (படம் 5). தமிழகத்தில் கிடைத்த தொல்லியல் சான்றுகளின் அடிப்படையிலும் சங்கப் பாடல்களின் அடிப்படையிலும் பெருங்கற்படைச் சின்னங்கள் நடுகற்களாக மாறியதை நான்கு வளர்ச்சி நிலைகளில் பார்க்கலாம் (பார்க்க அட்டவணை-*1*).

அகப்பாடல்களில் வரும் '*அம்பின் விசை இட வீழ்ந்தோர் எண்ணு வரம்பு அறியா உவல் இடு பதுக்கை*' (*109*), '*வில் இட வீழ்ந்தோர் பதுக்கை*' (*157*), '*ஆள் அழித்து உயர்த்த அஞ்சுவரு பதுக்கை*' (*215*), '*படுகளத்து உயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை*' (*231*) போன்ற சொற்றொடர்கள் தெளிவாக இறந்துபட்ட வீரர்களுக்குப் பதுக்கை (cist) எழுப்பப்பட்டன என்பதைச் சுட்டுகின்றன. இப்பாடல்களில் நடுகற்களைப் பற்றிய குறிப்பு இல்லை. எனவே, இப்பாடல்கள் அனைத்தும் பெருங்கற்படைப் பண்பாட்டின் ஒரு அங்கமான கற்பதுக்கைகளையே குறிக்கின்றன என்பதை உணரலாம் (படம் *6*). நிலத்திற்கடியில் எழுப்பப்பட்ட ஏராளமான இத்தகைய கற்பதுக்கைகள் அகழாய்வுகளின் மூலம் வெளிக் கொணரப்பட்டுள்ளமை இப்பாடல்களுக்குச் சான்று பகர்வனவாக உள்ளன. இப்பாடல்களில் பாடியவர் பெயர் காணப்படுகிறது. ஆனால் பாடப்பட்டோர் பெயர் காணப்படாதது இக்காலக்கட்டத்தில் இப்பகுதியில் உருவாகியிருந்த சமூகச்

சூழலைப் பிரதிபலிப்பதாக உள்ளது. இதை முதல்நிலைப் பெருங் கற்படைச் சின்னங்கள் எனக் கொள்ளலாம். இதன் காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாக இருக்க வேண்டும்.



படம் 6 கற்பதுக்கை

இரண்டாம் நிலையில் பெருங்கற்படைச் சின்னமான கற்பதுக்கையைச் சுற்றி நெடுங்கற்கள் (menhir) நடப்பட்டன. இவை பெரும்பாலும் தொறுப்பூசலில் ஈடுபட்டு இறந்துபட்ட வீரர்களுக்காக எழுப்பப்பட்டவை என்பதைப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது. ஆனால் முதல்நிலைப் பெருங்கற்படைச் சின்னங்கள் பெரும்பாலும் வில்லில் இருந்து புறப்பட்ட அம்பால் இறந்துபட்டவர்களுக்காக எழுப்பப்பட்டவையாக உள்ளன.

*"நாணுடை மறவர் பெயரும் பீடும் எழுதி அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல் . . . . நிரை கண்டன்ன உவல் இடு பதுக்கை"* என்ற அகப்பாடலும் (67), *"பரலுடைமருங்கின் பதுக்கை சேர்த்தி . . . பெயர் பொறித்து இனி நட்டனரே, கல்லும் கன்றொடு கறவை தந்து பகைவர் ஒட்டிய நெடுந்தகை"* என்ற புறப்பாடலும் (264) தொறுப்பூசலில்

ஈடுபட்டு இறந்த மறவர்களுக்குக் கற்பதுக்கைகள் உருவாக்கி அதனுடன் நெடுங்கற்கள் நடப்பட்டன என்பதை உணர்த்துகின்றன (படம் 7).



**படம் 7 நெடுநிலை நடுகல்லுடன் கூடிய கற்பதுக்கை**

இத்தகைய சின்னங்கள் *கி.மு.3-1*ஆம் நூற்றாண்டிற்கு இடைப்பட்டவையாக இருக்க வேண்டும். இப்பாடலில் காணப்படும் '*பெயரும் பீடும் எழுதி*', '*பெயர் பொறித்தது*' என்ற சொற்றொடர்கள் வீரனின் உருவத்தை வண்ணமாகத் தீட்டப்பட்டதையும், பொறிக்கப்பட்டதையும் குறிக்கின்றனவே தவிர எழுத்து வரிவடிவத்தைக் குறிப்பிடவில்லை என்று கருத்தில் கொள்ள வேண்டும். '*பெயர் பொறித்து*' என்பது வீரனின் பெயர் பொறிக்கப்பட்டதாகக் கூறி வட்டெழுத்துப் பொறிப்புப் பெற்ற பிற்காலத்திய நடுகற்களைச் சுட்டிக்காட்டிச் சங்கப் பாடல்கள் கி.பி.5ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று கூறுவது கள ஆய்விலும், அகழாய்விலும் கிடைக்கும் சான்றுகளுக்கு மாறாக உள்ளது என்பதை இங்குப் பதிவு செய்ய வேண்டியுள்ளது.

மூன்றாம் நிலையில் பெருங்கற்படைச் சின்னத்தின் முக்கியக் கூறாக விளங்கிய கற்பதுக்கைகளைத் தவிர்த்து அப்பண்பாட்டின் இறுதிக் கூறாக விளங்கிய நெடுங்கல்லை

மட்டும் (menhir) தொறுப்பூசலில் ஈடுபட்டு இறந்த மறவர்களுக்கு எழுப்பினர். அகப்பாடல் குறிப்பிடும் (269) '*நட்டபோலும் நெடுங்கல்*' என்பது இதையே குறித்து நின்றது எனலாம் (படம் 8). இவை கி.பி.1-2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாக இருக்கலாம்.



**படம் 8 நெடுங்கல்**

நான்காம் நிலையில் இந்த "நெடுங்கற்கள்" அளவில் சிறுத்து "நடுகற்களாக" கி.பி.2-3ஆம் நூற்றாண்டுகளில் மாறி இருக்க வேண்டும் என்பதை *"எழுத்துடை நடுகல்"* (அகம் 53) *"முதிர் நடுகல்"* (அகம் 297), *"நடுகல் ஆயினன்"* (புறம் 221) போன்ற சொற்றொடர்கள் நமக்குத் தெளிவுபடுத்துகின்றன.

பெருங்கற்படைச்சின்னப் பண்பாட்டில் ஏற்பட்ட நான்கு நிலைகளிலான வளர்ச்சியை அண்மையில் வெளிக்கொணரப்பட்ட தொல்லியல் தரவுகள் மெய்ப்பிக்கின்றன. அதியமான் ஆட்சி புரிந்த தகடூர்ப் பகுதியிலும், நன்னன் செங்கண் மாத்துவேள் ஆட்சிபுரிந்த செங்கம் பகுதியிலும் ஆசிரியர் மேற்கொண்ட கள ஆய்வுகளில் பெருங்கற்படைச் சின்னங்கள் நிரம்பிக் கிடக்கின்ற பகுதியிலேயே நடுகற்களும் நடப்பட்டுள்ளமையைக் காண முடிந்தது. இதன் மூலம், அப்பகுதி ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தொடர்ந்து நீத்தோர் நினைவாக எழுப்பப்பட்ட சின்னங்களுக்காக ஒதுக்கப்பட்டு இருந்ததை அறியமுடிகிறது. சில இடங்களில் அவை இன்றும் பயன்பாட்டில் இருப்பதன் மூலம் இப்பண்பாடு மக்கள் மனத்தில் ஆழ வேரூன்றி இருப்பதைக் காண்கின்றோம் (Rajan 2000c).

பெருங்கற்படைச் சின்னங்கள் எழுப்பப்படும்பொழுது கடைப் பிடிக்கப்பட்ட சடங்கினைத் *தொல்காப்பியம்*

*காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்*
*சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்*

என வரிசைப்படுத்துகிறது (*தொல்காப்பியம்* பொருளதிகாரம் 2-5). இறந்தவரை அவரது சுற்றத்தார் கண்டு வணங்குதல் பொருட்டுக் காட்சிப்படுத்துவதைக் 'காட்சி' என்றும், இறந்தோரை ஒரு இடத்தில் வைத்துப் பஞ்ச பூதங்களும் அவற்றை எடுத்துக்கொள்ள அழைப்பதைக் 'கால்கோள்' என்றும், எஞ்சிய எலும்புகளை எடுத்து வந்து தூய்மைப்படுத்துவதை 'நீர்ப்படை' என்றும், பின் நீத்தோருக்காக எழுப்பப்படும் நினைவுச் சின்னத்தை 'நடுகல்' என்றும் இந்நினைவுச் சின்னத்தில் இறந்தவருக்காக வைக்கப்படுகின்ற பொருட்களைப் 'பெரும்படை' என்றும் பின்னர் இறந்துபட்டவரைப் பற்றிய அவரது நற் செயல்களை, பண்புகளை 'வாழ்த்துதல்' என்றும் பெருங்கற்படைச் சின்னம் உருவான விதத்தையும், கடைப் பிடிக்கப்பட்ட பல்வேறு சடங்குகளைப் பற்றியும் *தொல்காப்பியம்* தெளிவுற எடுத்து இயம்புகிறது. கொடுமணல் அகழாய்வில் காணப்பட்ட கற்பதுக்கைகளும் அக்கற்பதுக்கைக்கு உள்ளே கிடைத்த இறந்தவரின் எஞ்சிய எலும்புத் துண்டுகளும்,

கற்பதுக்கையைச் சுற்றிக் கிடைத்த ஆயிரத்திற்கும் மேற்பட்ட மட்பாண்டங்களும், சூதுபவள மணிகளும் (carnelian beads), எண்ணற்ற இரும்புப் பொருட்களும் *தொல்காப்பியம்* காட்டிய காட்சியை நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றன. இத்தகைய சடங்குகள் பற்றிய குறிப்புகள் அகப் பாடலிலும், புறப்பாடலிலும் விரவிக் கிடக்கின்றன (*அகம்* 35, 67, 131; *புறம்* 329). சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய *சிலப்பதிகாரமும்*, அதன் பின்னர் எழுந்த *புறப்பொருள் வெண்பாமாலை*, *வீரசோழிய உரை*, *இலக்கண விளக்கம்*, *சாமிநாதம்* போன்றவையும் தொல்காப்பியர் விளக்கத்தை ஒட்டியே நிற்கின்றன (பார்க்க அட்டவணை - 2).

தமிழகத்தின் பலதிறப்பட்ட இயற்கைச் சூழலின் காரணமாகவும், கிடைக்கும் கனிம வளத்தைச் சமூகத்திற்குப் பயன்படுத்தத்தக்க வகையில் பெற்ற தொழில்நுட்பத்தின் காரணமாகவும், வணிகத்தின் எழுச்சிக் காரணமாகவும் ஒரே சீரான வளர்ச்சியைத் தமிழகம் பெற்றது என எண்ண முடியாது. நீர்வளத்தின் காரணமாக ஏற்பட்ட விவசாய உற்பத்திப் பெருக்கம் உள்ள தாமிரபரணி, வைகை, காவிரி போன்ற ஆற்றுப் படுகைப் பகுதிகளும், இரும்புத்தாது, மணிக்கற்கள் அதிகமாகக் கிடைத்ததன் மூலம் அதைக் கொண்டு வெளிநாட்டு வணிகத்தின் மூலம் தம்மை மேம்படுத்திக்கொண்ட கொங்குப்பகுதியும், இயற்கை வளங்களைக் கொண்டு குறிப்பாக வாசனைத் திரவியங்கள் பெற்றுத் திகழும் மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதிகளும் பிற பகுதிகளைக் காட்டிலும் அப்பகுதி மக்கள் வாழ்க்கை நிலையில் சிறந்து விளங்கத் துணைபுரிந்தன. இருப்பினும் சங்க இலக்கியம் போன்ற மிகச் சிறந்த இலக்கியங்கள் உருவாவதற்கும், கிழவன், சீறூர் மன்னர், வேளிர், வேந்தர் என்ற அரசு படிநிலை ஏற்படவும், சமண, புத்த, வைதீக சமயங்களின் தாக்குதலுக்குத் தொடர்ந்து உட்பட்ட போதிலும் தமிழ்ச் சமூகம் தனது சமூகக் கட்டமைப்பைத் தொடர்ந்து கட்டிக் காக்கவும், தமிழகம் முழுவதும் சமச்சீரான எழுத்து வரிவடிவம் பெறுதற்கும் இப்பெருங்கற்படைப் பண்பாடு அடித்தளமாக விளங்கியது என்பதை மறுக்க இயலாது.

தமிழகத்தின் வரலாற்றை எழுத முனைபவர்கள் யாராக இருந்தாலும் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழகத்தில் நின்று நிலவிய திராவிடப் பண்பாட்டின் முக்கியக் கூறான நீத்தோர் நினைவுச் சின்னங்களை ஒதுக்கி விடமுடியாது. இப்பண்பாட்டுக் காலத்தை ஒது;க்கிவிட்டுத் தமிழகத்தின் வரலாற்றை மீள் உருவாக்கம் செய்ய இயலாது. இந்த

பெருங்கற்படைப் பண்பாடு தமிழக மக்களிடையே நன்கு வேரூன்றிவிட்டமையால்தான் கற்களைக் கொண்டு கோயில் எழுப்பும் பழக்கம் ஏற்படப் பல காலம் ஆகியது எனலாம்.

பல்லவ மன்னன் மகேந்திரவர்மனின் மண்டகப்பட்டுக் கல்வெட்டு அவன் உண்டாக்கிய கோயில் செங்கற்களின்றி, மரமின்றி, உலோகமின்றி, சுதையின்றிக் கல்லால் மட்டும் அமைந்ததை ஒரு விசித்திரமான செயலாகக் குறிப்பிடுகிறது. எனவேதான் பல்லவர்களுக்கு முன்பாகக் கற்களால் எழுப்பப் பட்ட கோயில்கள் தமிழகத்தில் கிடைக்கவில்லை போலும். ஐந்து டன் முதல் பத்து டன் எடை கொண்ட கற்களைக் கொண்டு எளிதாகப் பெருங்கற்படைச் சின்னத்தை உருவாக்கிய தமிழ் மக்கள் தாம் வாழும் இல்லத்திற்குச் சிறு கற்களைக்கூடப் பயன்படுத்தவில்லை என்பதை அகழாய்வுகள் தெரிவிக்கின்றன. அந்த அளவிற்கு இப்பண்பாட்டின் தாக்கம் மக்களிடையே ஊன்றிப் போய்விட்டது. இருப்பினும் முன்பு குறிப்பிட்டது போல வடக்கிலிருந்து தெற்காக நகர்ந்த இப்பெருங்கற்படைப் பண்பாட்டின் கூறுகள் ஒரே சீராகப் பரவவில்லை என்பதையும், தெற்கிலிருந்து வடக்காகவும், கிழக்கிலிருந்து மேற்காகவும் நகர்ந்த முதுமக்கள் தாழிகளைக் கொண்ட பண்பாட்டுக் கூறுகள் பெருங்கற்படைப் பண்பாட்டுக் காலத்தினும் முந்தியது என்பதையும் கணக்கில் கொண்டு இவ்விரு பண்பாட்டுக் கூறுகளும் இணைந்த பண்பாடே தமிழர் பண்பாடு என்பதை மனத்தில் நிறுத்திச் சங்க இலக்கியங்களில் காணப்படும் இவ்விரு பண்பாடுகளைப் பற்றிய குறிப்புக்களை நிலப் பாகுபாட்டின் அடிப்படையிலும், கால நிலையையும் ஆழ்ந்து நோக்கித் தமிழக வரலாற்றை மீள் உருவாக்கம் செய்யும் அரும்பணியில் ஈடுபடவேண்டும் என்பதை இங்குக் குறிப்பிட விழைகிறேன்.

பெருங்கற்படைப் பண்பாட்டின் இறுதிக் காலத்தில் தமிழகத்தில் பரவலாக எழுத்தறிவு பரவிவிட்டது என்பதைக் கொடுமணல் பெருங்கற்படையில் இருந்து கிடைத்த தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகளும், வாழ்விடத்தில் கிடைத்த எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகளும் காட்டுகின்றன. இம்மக்கள் சங்க காலத்திற்குள் நுழைந்துவிட்டனர் என்பதையும் இவை பறைசாற்றுகின்றன. எழுத்தறிவின் தாக்கம் மற்றும் அதனால் ஏற்பட்ட சமூக மாற்றங்கள் குறித்து இனிவரும் இயலில் பார்ப்போம்.

அட்டவணை - 1

**சங்கஇலக்கியத்தில் நினைவுக்கற்கள் பற்றிய குறிப்புகள்**

| இலக்கியம் | செய்யுள் | புலவர் | அரசன் | குறிப்பு |
|---|---|---|---|---|
| அகம். 109: 7-8 | அம்பின் விசை இட வீழ்ந்தோர் எண்ணு வரம்பு அறியா உவல் இடு பதுக்கை | கடுந்தொடை காவினார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் (cairn circle entombing cist) |
| அகம். 157:5 | வில் இட வீழ்ந்தோர் பதுக்கை | வேம்பற்றூர்க் குமரனார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| புறம். 3:21 | அம்புவிட, வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை | இரும்பிடர்த் தலையார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| அகம். 215:10 | அம்பின் ஏவல் ஆடவர் ஆள் அழித்து உயர்த்த அஞ்சுவரு பதுக்கை | இறங்கு குடிக்குன்ற நாடன் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |

| | | | | |
|---|---|---|---|---|
| அகம். 231:6 | படு களத்து உயர்த்த மயிர்த்தலைப் பதுக்கை | மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| அகம். 151:12 | பதுக்கைத்து | காவன் முல்லைப். பூதரத்தனார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| நற்றிணை 352:8 | பதுக்கை நீழல் ஒதுக்கு இடம் பெறாஅ | மதுரைப் பள்ளி மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| குறுந்தொகை. 372:5 | பதுக்கை | விற்றூற்று மூதெயினனார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| ஐங்குறுநூறு. 362:1 | பதுக்கைத்து ஆய ஒதுக்கு அருங்கவலை | ஓதலாந்தையார் | - | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| அகம் . 91:10 | பரல் உயர் பதுக்கை | மாமூலனார் | சேரலாதன் குட்டுவன் அதியன் மோரியர் | பரல் உயர் பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |

| | | | | |
|---|---|---|---|---|
| குறுந்தொகை. 77:3-4 | உலந்த வம்பலர் உவல் இடு பதுக்கை நெடுநல் யானைக்கு இடு நிழல் அரிய கானம் ஆகும் | மதுரை மருதன் இளநாகனார் | நன்மாறன் வழுதி | பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| அகம் . 289: 2-3 | உயர் பதுக்கு இவர்ந்த ததர் கொடி அதிரல் நெடுநிலை கல் | எயினந்தை மகன் இளங்கீரனார் | பொறையன் திதியன் | பதுக்கையுடன் கூடிய நடுநிலை நடுகல் (cist with menhir) |
| அகம். 35:8-9 | வில் ஏர் வாழ்க்கை விழுத்தொடை மறவர் வல் ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார் நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து, தோப்பிக்கள்ளொடு துரூஉப் பலிகொடுக்கும் | குடவாயிற் கீரத்தனார் | கங்கன் கட்டி நன்னன் | பதுக்கையுடன் கூடிய நெடுநிலை நடுகல் |
| புறம். 264: 8-13 | பரலுடை மருங்கின் பதுக்கை சேர்த்தி, மரல் வகுந்து தொடுத்து செம் பூங்கண்ணியொடு, அணி மயிற் பீலி சூட்டி, பெயர் பொறித்து இனி நட்டனரே | உறையூர் பொன் இளம்பொன் வாணிகனார் | - | பதுக்கையுடன் கூடிய பரல் உயர் இட்ட கல் வட்டம் இத்துடன் நடுகல் நடப்பட்டது |

| | | | | |
|---|---|---|---|---|
| | கல்லும் கன்றொடு கறவை தந்து பகைவர் ஒட்டிய நெடுந்தகை | | | இது தொறு மீட்டதற்காக எழுப்பப்பட்டது (Cairn circle with cist and having a menhir for a cattle retriever) |
| அகம். 67: 9-15 | பெயரும் பீடும் எழுதி அதர்தொறும் பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்.....நிரை கண்டன்ன உவல் இடு பதுக்கை | நோய்பாடியார் | | தொறு மீட்டதற்காக எழுப்பபட்ட கல் வட்டத்துடனான நெடுநிலை பதுக்கை |
| அகம். 269: 6-7 | நட்ட போலும் நடாஅ நெடுங்கல் | மருதன் இளநாகனார் | நன்மாறன் வழுதி | நெடுநிலை கல் |
| அகம். 53: 10-11 | விழுத்தொடை மறவர் வில் இட வீழ்ந்தோர் எழுத்துடை நடுகல் | சீத்தலைச் சாத்தனார் | நன்மாறன் வழுதி | ஓவியத்துடன் கூடிய நடுகல் |
| ஐங்குறுநூறு. 352:1-2 | எழுத்துடை நடுகல் | ஓதலாந்தையார் | - | ஓவியத்துடன் கூடிய நெடுநிலை கல் |

| | | | | |
|---|---|---|---|---|
| அகம். 297: 7-8 | பேஎம் முதிர் நடுகல், பெயர் பெயம் படரத்தோன்று குயில் எழுத்து | மருதன் இளநாகனார் | நன்மாறன் வழுதி | எழுத்துக்கீறலுடன் கூடியநெடுநிலை கல் (எழுத்துக்கீறல் மனித உருவம் ஆகஇருக்கலாம்.) |
| அகம். 343: 5-7 | தலை நடுகல்....கூர் உளி குயின்ற கோடு மாய் எழுத்து | மருதன் இளநாகனார் | நன்மாறன் வழுதி | எழுத்துக் கீறலுடன் கூடிய நெடுநிலை கல் |
| அகம். 365: 4-5 | அத்த நடுகல் ஆள் என உதைத்த கான யானை. | மருதன் இளநாகனார் | நன்மாறன் வழுதி | மனித உருவத்தை ஒத்த நெடுநிலை கல் (anthropomorphic) |
| அகம். 387: 14 | நிரை நிலை நடுகல் | மருதன் இளநாகனார் | நன்மாறன் வழுதி | தொறுமீட்டதற்காக எழுப்பப்பட்ட நடுகல் |
| புறம். 261: 15 | நிரை இவண், தந்து நடுகல் ஆகிய | ஆவூர் மூலங்கிழார் | கிள்ளி வளவன் வென் வேள் விடலை | தொறு மீட்டதற்காக எழுப்பப்பட்ட நெடுநிலை நடுகல் |

| | | | | |
|---|---|---|---|---|
| புறம். 232:3 | நடுகல் | ஔவையார் | அதியமான் நெடுமான் அஞ்சி | நெடுநிலை நடுகல்/ நடுகல் |
| புறம். 221:13 | நடுகல் ஆகிய .கண்ணும் | பொத்தியார் | கோப்பெருஞ் சோழன் | நெடுநிலை நடுகல்/ நடுகல் |
| புறம். 223:3 | நடுகல் ஆயினன் புரவலன் | பொத்தியார் | கோப்பெரு சோழன் | நெடுநிலை நடுகல்/ நடுகல் |
| புறம். 306:4 | நடுகல் கை தொழுது | அல்லூர் நன்முள்ளையார் | | நெடுநிலை நடுகல்/ நடுகல் |
| புறம். 314:3 | நடுகல் பிறங்கிய உவல் இடு பறந்தலை | அய்யூர் முடவனார் | கிள்ளிவள வன் ஆதன் எழினி | நெடுநிலை நடுகல்/ நடுகல் |
| புறம். 329:2 | புடை நடுகல்லின் நாட்பலி ஊட்டி | மதுரை அறுவை வணிகர் இளவேட்டனார் | பசும்பூண் பொறைய ன் பாரி | புடைப்புடன் கூடிய நெடுநிலை நடுகல்/ நடுகல் |
| மலைபடுகடாம். 388:2 | நாணுடை மறவர் செல்லா நல்லிசை பெயரொடு நட்ட கல் | பெருங் கவுசிகனார் | நன்னன் | புடைப்புடன் கூடிய நெடுநிலைகல் / நடுகல்/ ஓவியம் |

## அட்டவணை - 2

### நினைவுக்கற்கள் நடப்படும்பொழுது பின்பற்றப்படும் சடங்குகள்

| இலக்கியம் | புலவர் | காலம் | முதல் நிலை (காட்சி) | இரண்டாம் நிலை (கால்கோள்) | மூன்றாம் நிலை (நீர்ப்படை) | நான்காம் நிலை (நடுதல்) | ஐந்தாம் நிலை (பெரும் படை) | ஆறாம் நிலை (வாழ்த்துதல்) |
|---|---|---|---|---|---|---|---|---|
| தொல்காப்பியம் | தொல் காப்பியர் | கி.மு. 5 | காட்சி | கால்கோள் | நீர்ப்படை | நடுதல் | பெரும் படை | வாழ்த்துதல் |
| சிலப்பதிகாரம் | இளங்கோ வடிகள் | கி.பி. 2 | காட்சிக் காதை | கால்கோள் காதை | நீர்ப்படைக் காதை | நடுகல் காதை | --- | வாழ்த்துக் காதை |
| புறப் பொருள் வெண்பாமாலை | ஐயனா ரிதனார் | கி.பி. 10 | கற் காண்டல் | கற் கோள்நிலை | கல் நீர்ப் படுத்துதல் | கல் நடுதல் | இல் கொண்டு புகுதல் | கல்முறை பழிச்சல் |
| விரசோழிய உரை | பெருந் தேவனார் | கி.பி. 12 | கல் தேடுதல் | கல் பொறித்தல் | நீர் உட் தெளிப் பித்தல் | கல் நடுதல் | பெரும் படை | வாழ்த்துதல் |
| இலக்கணவிளக்கம் | வைத்தியநாத தேசிகர் | கி.பி. 17 | கல் கொண்டு இடுதல் | கற்கோள் நிலை | கல் நீர்ப் படுத்துதல் | கல் நாட்டுதல் | இல் கொண்டு புகுதல் | --- |
| சாமிநாதம் | சாமிநாத கவிராயர் | கி.பி. 19 | கற் காண்டல் | கற் கோள்நிலை | கல் நீர்ப் படுத்துதல் | கல் நடுதல் | இல் கொண்டு புகுதல் | கல் முறை பழிச்சல் |

# எழுத்தறிவு

இந்தியாவில் இதுவரை கிடைத்துள்ள வரிவடிவங்களில் காலத்தால் முந்தியவை சிந்துவெளி எழுத்துகள் ஆகும். இவ்வரிவடிவம் அனைவராலும் ஏற்றுக்கொள்ளத்தக்க வகையில் இன்றுவரை படித்துணரப்படவில்லை என்பதால் இந்தியாவில் வரலாற்றுக் காலத்தின் தொடக்கத்தைப் பின்னோக்கி எடுத்துச் செல்ல இயலவில்லை. சிந்துவெளி எழுத்துகளுக்கு அடுத்து இந்தியாவில் கிடைப்பவை குறியீடுகள் ஆகும். சிந்துவெளி எழுத்துகளைப் போன்றே இவையும் படித்துணரப்படவில்லை. ஆயினும் சிந்துவெளி எழுத்துகளைப் போன்றே இவையும் முத்திரைகள், மோதிரங்கள், பானைஓடுகள், கல்வெட்டுகள், நாணயங்கள் என்று பலநிலைகளில் கிடைப்பதால் இவையும் அக்கால மக்களின் கருத்தினைத் தாங்கி நிற்கின்ற எழுத்து வரிவடிவங்களாகவே இருக்க வேண்டும். இருப்பினும் தொல்லியல் வல்லுநர்களால் குறியீடுகள் என்று அழைக்கப் படுவதால் இவ்வகை வரிவடிவங்கள் இங்குக் குறியீடுகள் என்ற சொல்லாட்சியிலேயே பயன்படுத்தப்படுகின்றன.

இவற்றையடுத்து இந்தியாவில் புழக்கத்தில் இருந்த வரிவடிவம் 'பிராமி' ஆகும். இவ்வரிவடிவத்தில் இருந்தே அனைத்து வரிவடிவங்களும் தோன்றியமைக்கான சான்றுகள் கிடைப்பதால் இது தாய் வரிவடிவம் என்றழைக்கப்படுகிறது. ஆனால் இப்பிராமி வரிவடிவம் எதிலிருந்து தோன்றியது என்பதற்கான ஆய்வு இன்னும் முற்றுப்பெறாத நிலையிலேயே உள்ளது. இந்தியாவில் வழங்கி வந்த மேற்குறிப்பிட்ட மூன்று முக்கிய வரி வடிவங்களில் சிந்துவெளி வரிவடிவம் சிந்துநதிப் பள்ளத்தாக்கை ஒட்டி அமைந்துள்ள குஜராத், ராஜஸ்தான், பஞ்சாப், ஹரியானா மாநிலப் பகுதிகளில் பெரும்பாலும் கிடைக்கின்றது. அடுத்த நிலையில் உள்ள குறியீடுகள் இந்தியாவில் செப்புக்காலப் பண்பாட்டில் குறிப்பாகச் சிந்துவெளி நாகரிகத்தின் எல்லைப் பகுதிகளை ஒட்டித் திகழும் ராஜஸ்தான், மஹாராஷ்டிரா மற்றும் தென்னகத்திலும் கிடைக்கின்றன. இந்தியாவில் குறிப்பாகத் தென்னகத்தில்

கிடைக்கின்ற குறியீடுகளில் எழுபத்தைந்து விழுக்காட்டிற்கு மேலானவை தமிழகத்திலேயே கிடைக்கின்றன என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். இத்தகைய குறியீடுகள் இலங்கையிலும் கிடைக்கின்றன. மூன்றாம் நிலையில் காணப்படும் 'பிராமி' வரி வடிவம் இந்தியா மற்றும் இலங்கை முழுவதும் காணப்படு கின்றது. மேற்குறிப்பிட்ட குறியீடுகளுக்கும், சிந்துவெளி எழுத்துகளுக்கும் இடையே ஒற்றுமை காணப்படுவதால் இக்குறியீடுகள் சிந்துவெளி எழுத்துகளின் வளர்ச்சியே என்றும் இக் குறியீடுகளே பின்னர்ப் 'பிராமி' வரிவடிவமாக உருவாகின என்றும் அண்மைக்காலங்களில் கருதுகோள்கள் முன் வைக்கப்பட்டு அவை தீவிர ஆய்விற்கும் உட்படுத்தப்பட்டன.

தமிழகத்தைப் பொறுத்தவரை குறியீடுகளாக இருப்பினும், பிராமி வரிவடிவமாக இருப்பினும் இந்தியாவின் மற்ற பகுதிகளில் கிடைக்கும் ஒட்டு மொத்த சான்றுகளுக்கு மேலாக அதிக அளவில் இவை கிடைப்பதால் இக் குறியீடுகளைப் பற்றியும் 'தமிழ்ப் பிராமி' வரிவடிவங்களைப் பற்றியும் சமுதாயத்தில் அவை பெற்றிருந்த நிலைப்பாட்டையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

## குறியீடுகள்

சிந்து சமவெளிப் பண்பாட்டு எழுத்துகளின் மறைவிற்கும் பிராமி எழுத்துகளின் தோற்றத்திற்கும் இடைப் பட்ட சுமார் *1200* ஆண்டுகள் இந்தியாவில் வழக்கில் இருந்த ஒருவகை வரிவடிவமே இக்குறியீடுகள் ஆகும். இக்குறியீடுகள் பற்றிய ஆய்வு பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் தொடங்கிவிட்டபோதிலும் இக்குறியீடுகள் கருத்துப் பரிமாற்றத் திற்குரிய வரிவடிவங்களாக இருப்பதற்கு வாய்ப்பில்லை என்ற கருத்தின் அடிப்படையில் அகழாய்வுகளில் கிடைத்த இக்குறியீடு களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப் படவில்லை. ஆனால் இக் குறியீடுகளின் எண்ணிக்கையும், தன்மையும் எதிர்பார்த்ததைவிட அதிகமாக இருப்பதால் அண்மைக்காலத்தில் இதன் மீதான ஆய்வுகள் முக்கியத்துவம் பெற்று வருகின்றன. இந்தியாவின் பிற பகுதிகளில் கிடைப்பதைவிட தமிழகத்தில் இக்குறியீடுகள் அதிக அளவில் கிடைப்பதால் இதன் முக்கியத்துவத்தை உணர்வது அவசியமாகிறது. சங்க இலக்கியம் குறிப்பிடும் பெரும்பாலான ஊர்களிலும் இக்குறியீடுகள் தனித்தோ அல்லது தமிழ்ப் பிராமியுடன் இணைந்தோ காணப்படுகின்றன. இக்குறியீடுகள் பெரும்பாலும் பானை

ஓடுகளின் மீது காணப்பட்டாலும் மோதிரங்கள், முத்திரைகள், நாணயங்கள், கல்வெட்டுகள் போன்றவற்றிலும் கணிசமான அளவு காணப்படுகின்றன. சங்க காலத்தைச் சார்ந்த ஊர்களில் கிடைக்கும் பானை ஓடுகளில் காணப்படும் தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புகள் பானை சுட்டபின் கீறப்பட்டவையாகும். பானையின் வெளிப்புறத்தில் கழுத்துக்குக் கீழ்ப்பகுதியில் பெரும்பாலும் எழுதப்பட்டுள்ளன. இதுபோன்றே குறியீடுகளின் நிலையும் பானைகளில் காணப்படுவதால் இதன் முக்கியத்துவம் மேலும் வலுப் பெறுகிறது.

இக்குறியீடுகளின் ஆய்வினை 1881இல் பிரான்பில் (Branfil 1881:1-12) என்ற அறிஞர் தொடங்கி வைத்தார். அன்று முதல் இ.எச். ஹண்ட் (Hant 1929:140-150), ஜி.யஸ்தானி (Yazdani 1917:56-79), பி.கே.தாபர் (Thapar 1957: 4-142), எஸ்.ஆர்.ராவ் (Rao 1990:92), எஸ்.எச்.ரித்தி, பி.பி.லால் (Lal 1962:4-24), எஸ்.குருமூர்த்தி (1999) ஆகியோர் இக்குறியீடுகளின் தோற்றம், வளர்ச்சி, தொடர்பு ஆகியவற்றைப் பண்பாட்டின் அடிப்படையிலும், கால நிலையிலும் ஆய்வுகள் மேற்கொண்டு சில முக்கிய முடிவுகளை வெளியிட்டுள்ளனர். பெருங்கற்படைச் சின்னங்களில் கிடைத்த 131 குறியீடுகளைத் தொகுத்து 1917இல் யஸ்தானி வெளியிட்டார் (Yazdani 1917:56-79). இதையொட்டி 1960களில் பி.பி.லால் மேற்கொண்ட ஆய்வில், சிந்துவெளிப் பண்பாட்டில் காணப்படும் எழுத்துகளுக்கும் பெருங்கற்படைப் பண்பாட்டில் கிடைக்கும் இக் குறியீடுகளுக்கும் இடையே காணப்பட்ட ஒற்றுமையை ஒப்பு நோக்கி இவ்விரண்டிற்கும் இடையே காணப்படும் பண்பாட்டுத் தாக்கத்தினை வெளிக் கொணர்ந்தார் (Lal 1962:4-24). பி.பி.லால் மேற்கூறிய 131 குறியீடுகளை 61 குறியீடுகளாக வகைப்படுத்தி அவற்றில் 47 குறியீடுகள் சிந்து சமவெளிப் பண்பாட்டிலும், பெருங்கற்படைப் பண்பாட்டிலும் காணப்படுவதாகக் கூறுகிறார். மேலும் இவர் தன் கருத்தை வலியுறுத்தும்போது எந்த ஒரு குறியீடும் ஒரு குறிப்பிட்ட பெருங்கற்படைச் சின்னத்தைச் சார்ந்ததன்று எனக் குறிப்பிட்டுள்ளார்.

கர்நாடக மாநிலத்தில் காவிரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள டி.நரசிப்பூர் என்ற இடத்தில் அகழாய்வு செய்த சேஷாத்திரி 186 குறியீடுகளை வெளிக்கொணர்ந்தார் (Sheshadri 1984:56). இக்குறியீடுகளை ஆய்வு செய்த எ.சுந்தரா இவை சிந்து சமவெளிப் பண்பாட்டிலிருந்து, மத்திய செப்புக் காலப் பண்பாட்டில் ஊடுருவிப் பின்னர்ப் பெருங்கற்காலப்

பண்பாட்டிற்குள் ஊடுருவியிருக்க வேண்டும் என்று கருதுகிறார் (Sundara 1975:171-173). இங்கு இக்கருத்து மனங்கொள்ளத்தக்கது. சிந்துவெளி எழுத்துகளே கால நிலையில் வளர்ச்சி பெற்றுச் செப்புக்காலப் பண்பாட்டின் ஊடாக, பெருங்கற்காலப் பண்பாட்டை அடைந்தன என்பதையும், இவை வடக்கிலிருந்து தெற்காக வந்தன என்பதையும், சிந்துவெளி மக்களின் இடப் பெயர்ச்சியைக் காட்டுவதாக உள்ளன. பெருங்கற்படைப் பண்பாட்டிற்கே உரித்தான கருப்பு சிவப்புப் பானை ஓடுகள் சிந்துவெளிப் பண்பாட்டு ஊர்களில் கிடைப்பதும் அவை சிந்துவெளிப் பண்பாட்டுக் காலத்திற்கும் முந்தியது என்பதும் இங்கு மனங்கொள்ளத்தக்கது. குறிப்பாகச் சிந்துசமவெளி நாகரிகத்தின் தென் பகுதியில் அகழப்பட்ட ஊர்களில் இவை கிடைத்துள்ளன என்பதை எண்ணிப்பார்க்கும் பொழுது இக்கூற்று முக்கியத்துவம் பெறுகிறது. கருப்பு சிவப்புப் பானை ஓட்டிற்குச் சொந்தக்காரர்களே தமிழகத்தின் எழுச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளனர் என ஆர்.செண்பகலட்சுமி கருதுகிறார். எஸ்.ஆர்.ராவ், எஸ்.எச். ரித்தி போன்றோர் பிராமி எழுத்து வரிவடிவம் சிந்துசமவெளி எழுத்து வரிவடிவத்தின் வளர்ச்சியே எனக் கருத்துத் தெரிவிக்கின்றனர். எனவே தமிழகத்தில் பிராமி வரிவடிவங்களுக்கும், முன்பாகக் கிடைக்கும் எண்ணற்ற குறியீடுகள் சமகால மக்களின் எண்ணங்களைப் பிரதிபலிப் பவையாகவே எடுத்துக் கொள்ள வேண்டும். கடந்த 50 ஆண்டு களுக்கும் மேலாகத் தமிழகத்தில் வெளிக் கொணரப்பட்டுள்ள எண்ணற்ற குறியீடுகளைத் தொகுத்து ஆய்வு செய்து இவை சிந்துசமவெளி எழுத்துகளின் வளர்ச்சியே என்ற கருத்தை எஸ்.குருமூர்த்தி அண்மையில் வெளியிட்டுள்ளார் (Gurumurthy 2000). ஆர்.செண்பகலட்சுமி கூறுவதுபோல் இக்குறியீடுகளின் எழுச்சி கருப்பு- சிவப்புப் பானைகளின் தோற்றத்துடனேயே காணப்படுகிறது.

தமிழகம் மட்டுமல்லாது இலங்கையிலும் தமிழகத்தை ஒத்த ஏராளமான குறியீடுகள் கிடைத்துள்ளன என்பது கொடுமணல் மற்றும் இலங்கையின் தென்கோடியில் அமைந்து உள்ள ரிதியகாமா ஆகிய இடங்களில் கிடைத்துள்ள குறியீடுகளை ஒப்புநோக்கும்பொழுது அறிய முடிகிறது (Rajan and Osmund 2002:97-105). இலங்கை தவிர, இந்தியத் துணைக் கண்டத்தில் தமிழகத்தில் மட்டுமே குறியீடுகள் பரந்த அளவில் கிடைக்கின்றன என்பதை இங்குக் கருத்தில் கொள்ள வேண்டும். பண்பாட்டுப் பரவல்களின் அடிப்படையில் இவ்விரு

பகுதிகளுக்கும் இவை எவ்வாறு வந்தன என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. எவ்வாறாயினும், இக்குறியீடுகளைச் சாதாரணக் கீறல்கள் என ஒதுக்கிவிட முடியாது என்பதையே இவ்வாய்வுகள் உணர்த்துகின்றன.

தமிழகத்தில் அகழ்ந்த தொல்லியல் அகழாய்வுகள் பலவற்றில் இவை மிகுதியாகக் கிடைத்துள்ளன. குறிப்பாகக் திருகாம்புலியூர், உறையூர், கரூர், கொடுமணல், அழகன்குளம், மாங்குளம், தேரிருவேலி, பேரூர், வல்லம், சானூர், ஆதிச்சநல்லூர், கொற்கை போன்ற இடங்களில் மேற் கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் கிடைத்த குறியீடுகள் ஒன்றோடொன்று ஒத்துக் காணப்படுகின்றன. இக்குறியீடுகள் தமிழ்ப் பிராமி வரிவடிவம் தமிழகத்தில் தோன்றுவதற்கு முன்பாகவே மக்களின் எண்ணங்களை ஒலிவடிவமாகவோ, கருத்து வடிவமாகவோ வெளிப்படுத்தக்கூடிய கருவியாக விளங்கியிருக்க வேண்டும் என்பதும், இவை பரந்த அளவில் கிடைப்பதால் இக்குறியீடுகளின் மூலம் பண்பாட்டுப் பரவல்கூட நிகழ்ந்திருக்கலாம் எனவும் எண்ண வேண்டியுள்ளது. இக் குறியீடுகளிலிருந்து பிராமி வரிவடிவம் தோன்றியிருந்தால் இவ்வரிவடிவ உருவாக்கத்திற்குச் சொந்தக்காரர்கள் உரிமை உள்ளவர்கள் யார் என்பதைக் கண்டு கொள்ளவும் குறியீடுகளின் ஆய்வு பெரிதும் பயன்படும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

குறியீடுகள் இத்துணை முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருந்தும்கூட மேற்கூறிய ஆய்வுகள் அனைத்துமே ஒரு முடிவுக்கு வரமுடியாமைக்குக் காரணம் பண்பாடுகளிடையே காணப்படும் தொடர்பற்ற நிலை, பண்பாட்டுப் பரவலின் தாக்கம், புரிந்து கொள்வதில் இருக்கின்ற இடர்ப்பாடுகள், குறியீடுகளின் எண்ணிக்கை, அவை கிடைத்த இடம், சூழல் ஆகியவற்றைப் பதிவு செய்வதில் காணப்பட்ட சுணக்கம், முக்கியத்துவம் உணராமை, புள்ளியியல் அளவிலான ஆய்வு செய்வதற்குரிய போதிய சான்றுகள் இல்லாமை போன்றவை ஆகும். ஆயினும் தமிழகப் பண்பாட்டு வளர்ச்சிக்கும், இலக்கிய எழுச்சிக்கும் இவை பெரும் பங்காற்றியுள்ளன என்பதை அண்மைக்காலமாக ஆய்வாளர்கள் நன்கு உணர்ந்துள்ளமையால் அகழாய்வுகளிலும், கள ஆய்வுகளிலும் கிடைக்கும் இக் குறியீடுகளை முறைப்படி பதிவுசெய்ய ஆரம்பித்துள்ளனர். இதன் காரணமாக எதிர்காலத்தில் இக்குறியீடு தொடர்பான ஆய்வு

முழுமையடைந்து தமிழகத்தின் வரலாற்றின் தொன்மை மேலும் வலுப்படுத்தப்படும் என்பதில் ஐயமில்லை.

இக்குறியீடுகளின் தனித்தன்மையையும், அவை வெளிப்படுத்தும் பண்பாட்டுக்கூறுகளையும் உணர்ந்த தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையினர் தாம் மேற்கொண்ட வல்லம், கொடுமணல் அகழாய்வுகளில் கிடைத்த குறியீடுகளைப் பதிவு செய்துள்ளனர். இக்குறியீடுகளை ஆய்வுக்குட்படுத்திய இந்நூல் ஆசிரியர் அத்தரவுகளின் அடிப்படையில் சில முடிவுகளைத் தந்துள்ளார்.

வல்லம் அகழாய்வில் அகழ்ந்த குழிகளில் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகள் கீழ் அடுக்குகளிலும், தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறித்தவை மேல் அடுக்குகளிலும் கிடைத்தன. தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் கிடைக்கத் தொடங்கியவுடன் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகளின் எண்ணிக்கை குறையத் தொடங்கியது என்பது இவ்வகழாய்வில் காணப்படும் ஓர் சிறப்பம்சமாகும் (Subbarayalu 1985). இந்நிகழ்வு தமிழ்ப் பிராமி எழுத்துக் குறியீடினின்று வளர்ச்சியுற்றதா அல்லது செய்திப் பரிமாற்றத்திற்குக் குறியீட்டினைவிடச் சிறந்த கருவியாகத் தமிழ்ப் பிராமி வரிவடிவம் உருவானதால் இவை வழக்கில் இருந்து மங்கி விட்டனவா என்ற கேள்விகளை எழுப்பியுள்ளது. தமிழ்ப் பிராமி தோன்றியவுடன் இவற்றின் பயன்பாடு குறையத் தொடங்கிவிட்டதால் இவை மக்களின் எண்ணத்தை வெளிப்படுத்தும் கருவிகளாகத் தமிழ்ப் பிராமி வடிவத்திற்கு முன்பு இவை விளங்கியிருக்க வேண்டும் என்பதை இவ்வகழாய்வு நமக்கு உணர்த்துகிறது.

கொடுமணலில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் இக்குறியிடு தொடர்பான பல செய்திகளை வெளிக்கொணர்ந்தன. இக்குறியீடுகள் வாழ்விடத்திலிருந்தும், பெருங்கற்படைச் சின்னத்திலிருந்தும் வெளிக் கொணரப்பட்டன. வாழ்விடத்தில் கிடைத்த குறியீடுகளுக்கும் பெருங் கற்படைச் சின்னத்திலிருந்து கிடைத்த குறியீடுகளுக்கும் இடையே ஒற்றுமை காணப்பட்ட போதிலும் பெருங்கற்படைச் சின்னங்களிலிருந்து கிடைத்தவை நான்கு வகைக் குறியீடுகளாக இருக்கும் பொழுது வாழ்விடத்தில் கிடைப்பவை பலவகைகளைச் சார்ந்தவையாக உள்ளன. இவ்வாழ்விடம் கி.மு.3ஆம் நூற்றாண்டில் அரிய கல்மணிகளைக் கொண்டு மணிகள் செய்யும் தொழிற் கூடமாகவும், இரும்புத் தாதுவிலிருந்து இரும்பை உருக்கி எ∴கு உருவாக்கும் உலைக்

கலங்களைக் கொண்ட தொழிற்கூடமாகவும், ரோம நாட்டுடனும், இலங்கையுடன் இந்தியாவின் பிற பகுதிகளுடனான வாணிபத் தொடர்பைக் கொண்ட ஊராகவும், கல்வியறிவு பெற்ற ஊராகவும் சிறப்புற்று விளங்கியுள்ளது (Rajan 1994). இத்தகைய சிறப்புப் பெற்ற மக்களாலேயே இக்குறியிடுகள் கீறப்பட்டுள்ளன என்பதால் இதைச் சாதாரணக் கீறல்கள் என யாராலும் ஒதுக்கி விடமுடியாது. இக்குறியீடுகள் எந்தவகையான கருத்துகளின் பிரதிபலிப்பாக விளங்கின என்பதை அறிய இயலவில்லை. ஆயினும் இதற்கு முன்பு இக்குறியீடுகள் தொடர்பாக ஆய்வினை மேற்கொண்ட ஆய்வாளர்கள் முன்வைத்த கருதுகோள்களை ஏற்கவும், மறுக்கவும், சிலவற்றிற்கு வலுவூட்டவும் கொடுமணலில் கிடைத்த குறியீடுகள் பயன்படுகின்றன.

அண்மைக்காலம் வரை இக்குறியீடு தொடர்பாக ஆய்வு செய்த ஆய்வாளர்கள் பானை செய்வோரின் குறியீடு, பானை உரிமையாளரின் குறியீடு, குலக்குறியீடு, பண்டைத் தமிழ் வரிவடிவங்களே என்ற கருதுகோள்களை முன்வைத்துள்ளனர். இக்கருதுகோள்களை உரசிப்பார்ப்பது மூலம் சில முடிவுகளை நோக்கி முன்னேற இயலும் என்பதால் இவை ஒன்றன்பின் ஒன்றாக இங்கு விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

ஒரு குறிப்பிட்ட அகழாய்வில் மட்டும் நூற்றுக்கும் மேற்பட்ட குறியீடுகள் கிடைத்துள்ளன. காட்டாக, கொடுமணலிலும் மாங்குடியிலும் கிடைத்த எண்ணற்ற குறியீடுகளைக் குறிப்பிடலாம் (Shetty 2003:41-50). இவை பானை செய்வோரின் குறியீடாக இருந்தால் ஒரு குறிப்பிட்ட ஊர் இருக்கைப் பகுதியில் ஒரே காலகட்டத்தில் இத்துணைப் பானை வினைவோர் இருக்க வாய்ப்பில்லை. பல மைல்கள் இடைவெளியில் இருக்கின்ற ஊர்களில் கிடைக்கின்ற குறியீடுகளுக்கு இடையே காணப்படுகின்ற ஒற்றுமை இதை மேலும் உறுதிசெய்கிறது. எடுத்துக்காட்டாக, கொடுமணலில் கிடைக்கும் குறியீட்டிற்கும், இலங்கையின் தென் கோடியில் அமைந்துள்ள ரிதியகாமா என்ற இடத்தில் கிடைக்கும் குறியீட்டிற்கும் இடையே ஒற்றுமை காணப்படுகிறது (Rajan and Osmund 2002:97-105). மேலும், இவையனைத்தும் பானை சுட்டபின் கீறப்பட்டவை என்பது இங்கு மனங்கொள்ளத்தக்கது. பானை செய்வோரின் குறியீடுகளாக இருந்தால் இவர்கள் பானை சுடுவதற்கு முன்பே எளிதாகக் கீறியிருக்கலாம். மேலும் குறியீடுகளின் எண்ணிக்கை, தன்மை. அவை கிடைக்கும் இடங்கள் ஆகியவற்றைப் பார்க்கும்பொழுது இவை பானை

செய்வோரின் குறியீடாக இருக்க வாய்ப்பில்லை என்பதை எளிதில் உணரலாம்.

பானை உரிமையாளரின் குறியீடாக இருந்தால் ஒரு உரிமையாளருக்கு ஒரு குறியீடு அல்லது குறியீட்டுத் தொடர்தான் இருக்கமுடியும். ஆனால் இக்குறியீடுகள் தொடர்ந்து பல நூற்றாண்டுகள் ஒரே இடத்தில் புழக்கத்தில் இருந்துள்ளன, பல்வேறு இடங்களில் ஒன்று போலவே கிடைக்கின்றன. ஒரு குறியீட்டுத் தொடரில் உள்ள பல்வேறு குறியீடுகள் தம்மில் இடம் மாறியும் கலந்தும் வந்துள்ளன. இவை பானை உரிமையாளரின் குறியீடாக இருந்தால் கால நிலையிலும், நிலவியல் நிலையிலும் ஒரு பானை உரிமையாளரே தொடர்ந்து இருக்க வாய்ப்பில்லை. மேலும் ஒன்றுக்கும் மேற்பட்ட எலும்புக்கூடுகள் கிடைக்கின்ற பெருங்கற்படைச் சின்னத்தில் ஒரு குறியீடு மட்டுமே கிடைத்துள்ளது. பானை உரிமையாளரின் குறியீடாக இருந்தால் ஒன்றுக்கும் மேற்பட்ட எலும்புக்கூடுகள் கிடைக்கும் பெருங்கற்படைச் சின்னத்தில் ஒன்றுக்கும் மேற்பட்ட குறியீடுகள் கிடைத்திருக்க வேண்டும். எனவே, இவை பானை உரிமையாளரின் குறியீடாக இருக்க வாய்ப்பில்லை.

அடுத்ததாக இவற்றைக் குலக்குறியீடுகள் என்று எடுத்துக்கொண்டால் சிலவற்றை ஏற்கவும், சிலவற்றை மறுக்கவும் வேண்டியதாக உள்ளது. குலக்குறியீடு என எடுத்துக் கொண்டால் இக்குறியீடுகளை இரு நிலைகளில் வைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. அதாவது ஊர் இருக்கைப் பகுதிகளில் கிடைப்பனவற்றை ஒருபுறமும், பெருங்கற்படைச்சின்னங்களில் கிடைப்பனவற்றை மறு புறமும் வைத்து ஆய்வினை மேற்கொள்ள வேண்டியுள்ளது. காரணம் இவ்விரண்டு நிலைகளுக்கும் இடையே காணப்படுகின்ற ஒற்றுமை வேற்றுமைகளே ஆகும்.

ஈமச் சின்னங்களில் காணப்படும் குறியீடுகளை ஒரு குடும்பத்தின் குறியீடுகளாக வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம். ஆயினும் ஒரு குடும்பம் என்பதைவிட ஒரு கூட்டத்தின் குறியீடாக எடுத்துக் கொண்டால் மிகவும் ஏற்புடையதாக இருக்கும். ஏனெனில் ஒரே வகையான குறியீடு குறுகிய காலக்கட்டத்தில் பல ஈமச்சின்னங்களில் கிடைக்கின்றது. எடுத்துக்காட்டாகக் கொடுமணலில் இரு குறியீடுகள் மட்டுமே ஆறு ஈமச் சின்னங்களில் வருவதைப் பார்க்கலாம் (படம் 9).

 பெருங்கற்படைச் சின்னங்கள் III, VII, VIII, X

 பெருங்கற்படைச் சின்னங்கள் V, IX

**படம் 9 ஈமச் சின்னங்களில் காணப்படும் குறியீடுகள்**

ஒரு குறுகிய காலக்கட்டத்தில் ஒரே குடும்பம் அத்துணை சின்னங்களை எழுப்புவதற்கு வாய்ப்பு மிகவும் குறைவு எனலாம். எனவே, ஈமச்சின்னங்களில் காணப்படும் குறியீடுகளை வேண்டுமானால் குலக்குறியீடாக எடுத்துக் கொள்ளலாம். ஆனால் ஊர் இருக்கைப் பகுதியில் கிடைக்கும் குறியீடுகளைக் குலக்குறியீடுகளாக மட்டுமே எடுத்துக் கொள்ள வாய்ப்பில்லை. காரணம் ஓர் ஊர் இருக்கைப் பகுதியில் மட்டுமே நூற்றுக்கும் மேற்பட்ட குறியீட்டு வகைகள் தென்படுகின்றன. எனவே, ஓர் ஊரில் அத்துணை குலமரபினர் வாழ்வதற்குச் சாத்தியக் கூறுகள் இல்லை. மானிடவியல் அடிப்படையிலும் இது ஏற்புடைத்தன்று. ஊர் இருக்கைப் பகுதியில் கிடைக்கும் எண்ணற்ற குறியீடுகளைச் சித்திரக் குறியீடுகளாகக் கொள்வதா, கருத்துக் குறியீடுகளாகக் கொள்வதா, ஒலிக்குறியீடுகளாகக் கொள்வதா அல்லது வரி வடிவங்களாகவே எடுத்துக் கொள்வதா என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இருப்பினும், அண்மையில் தமிழகத்தில் கிடைத்த குறியீடுகளை அட்டவணைப்படுத்துவதன் மூலம் அவற்றின் உண்மைத் தன்மையை ஓரளவு ஊகிக்க முடியும் (படம் 10). அட்டவணை 1இல் உள்ள குறியீடுகள் ஓர் அடிப்படைக் குறியீட்டினைக் (முதல் குறியீடு) கொண்டு வளர்ச்சியுறுவதைக் காணலாம். இக்குறியீடு பிற குறியீடுகளுடன் இணைந்து வருகின்றபொழுது அடிப்படைக் குறியீட்டு வடிவத்துடன் மட்டுமே இணைந்து வருவதையும் இங்குக் காணலாம்.

அட்டவணை 2இல் உள்ள குறியீடு தனித்தும் பிறவற்றுடன் இணைந்தும் வருகின்றது. பிற குறியீடுகளுடன் இணைந்து வருகின்றபொழுது, குறியீட்டுத் தொடரின் இறுதியிலும் வருவதை இங்குப் பார்க்கலாம்.




**படம் 10 குறியீடுகள்**

அட்டவணை 3இல் உள்ள குறியீடும் பல வடிவமாற்றங்களைப் பெற்றுத் திகழ்கிறது. அட்டவணை 4இல் காணப்படும் குறியீடு பல அகழாய்வுகளில் கிடைத்துள்ளது. குறிப்பாகக் கொற்கையில் கிடைத்தவை பெரும்பாலும் இவ்வகையைச் சார்ந்தவையாகும். இது பின்னாளில் தமிழ்ப் பிராமி வடிவத்தில் 'ம' என்ற எழுத்து வரிவடிவத்தைப் பெறுவதற்கு முன்னோடியாகத் திகழ்ந்திருக்க வேண்டும்.

அட்டவணை 5இல் அம்பு-வில் வடிவமும், அத்துடன் கூடிய ஏணி வடிவக் குறியீடும் காணப்படுகிறது (படம் 11). அதில் ஏணி வடிவக் குறியீடு பல இடங்களில் தனித்தும் வந்துள்ளது. ஆனால் பிற குறியீட்டுடன் இணைந்து வருகின்ற பொழுது தொடரின் இறுதியில் பெரும்பாலும் வருவதை ஊன்றிப் பார்க்க வேண்டியுள்ளது.




படம் 11 குறியீடுகள்

அட்டவணை 6இல் உள்ள அடிப்படைக் குறியீடு பல வளர்ச்சி நிலைகளைப் பெற்றுத்திகழ்கிறது. இக்குறியீடு (முதல் குறியீடு) கேரளத்தில் எடக்கல் என்ற இடத்தில் கிடைத்த சேர மன்னனின் "கடுமிபுத சேர" என்ற தமிழ்ப் பிராமிக் கல்வெட்டின் இறுதியில் வருவதாலும் (Mahadevan 2003:433), யாழ்ப்பாண தீபகற்பத்தில் ஆணைக்கோட்டை என்ற இடத்தில் அண்மையில் நடைபெற்ற அகழாய்வில் கிடைத்த புகழ் வாய்ந்த முத்திரையின் வரியில் 'கோ' என்ற பொருள்படும் வகையில் இடப்பட்டு உள்ளதாலும் இக்குறியீட்டின் முக்கியத்துவத்தை உணர முடிகிறது (Raghupathy 1987:199).

அட்டவணை 7இல் காட்டப்பட்டுள்ள முதல் குறியீடு 'கோவே' என்ற தமிழ்ப் பிராமி எழுத்துகளின் இறுதியில் வருவதைப் பார்க்கலாம். இக் 'கோவே' என்ற சொல் ஒரு தலைவனைக் குறிப்பதாக எடுத்துக் கொண்டால் இக்குறியீடு இங்கு முக்கியத்துவம் பெறுகிறது. காரணம் கொடுமணலில் அகழப்பட்ட பெருங்கற்படைச் சின்னங்களில் இவை கிடைத்துள்ளன. இச்சின்னங்களிலிருந்து மிகவும் இன்றியமையாத தொல்பொருட்கள் பெறப்பட்டுள்ளன. சமூகத்தில் உயர்நிலையில் வாழ்ந்தவர்களால் மட்டுமே இத்தகைய பொருட்களைப் பெற்றிருக்கமுடியும் என்பதால் இக்குறியீடு ஒரு சிறப்புத் தன்மை பெறுகிறது.

அட்டவணை 8இல் உள்ள குறியீடுகளில் பெரும் பான்மையானவை தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புடன் கூடிய ஆட்பெயர்களின் இறுதியில் இணைந்து வருவதைப் பார்க்கலாம். காட்டாக, குவிரன் ஆதன், ஸந்தாதன், கோன் போன்ற பெயர்களின் இறுதியில் குறியீடுகள் வருவதால் இரண்டு செய்திகளை இக்குறியீடுகள் தெளிவுபடுத்துகின்றன. முதலாவது, இக்குறியீடுகளுக்கும் அப்பெயர்களுக்கும் இடையே உள்ள தொடர்பு வெளிப்படுகிறது. இரண்டாவது, இக்குறியீடுகளில் காணப்படும் வெவ்வேறு கீறல்கள் ஒன்றன்மீது ஒன்றாகக் கீறப்பட்ட நிகழ்வை வைத்துப் பார்க்கும்போது இவை தமிழ்ப் பிராமி போன்று இடமிருந்து வலமாகவே எழுப்பப்பட்டுள்ளதை உணரமுடிகிறது.

அட்டவணை 9இல் காணப்படும் குறியீடு ஒரு குறியீட்டுத் தொடர் ஆகும். இதில் காணப்படும் குறியீடுகள் தனித்தும், பிற குறியீடுகளுடன் இணைந்தும் வருகின்றன. ஆயினும் முதல் குறியீடு தொடரின் முதலிலும், மூன்றாவது

குறியீடு சொல்லின் இறுதியிலும் மட்டுமே வருவதைப் பார்க்கலாம். இக்குறியீட்டுத் தொடரின் நடுவில் காணப்படும் குறியீடு நீங்கலாகப் பிற குறியீடுகள் கொங்கர் புளியங்குளம், அழகர்மலை தமிழ்ப் பிராமிக் கல்வெட்டின் இறுதியில் வருவதால் இதன் பயன்பாடு முக்கியத்துவம் பெறுகிறது (அட்டவணை *10, 11*). அட்டவணை 12இல் காணப்படும் குறியீடு வெள்ளி முத்திரை நாணயங்களிலும், பிற நாணயங்களிலும் பரவலாகக் கிடைப்பதால் இக் குறியீட்டிற்கும் வணிகத்திற்கும் ஏதோ ஒரு வகையில் தொடர்பு இருப்பதை உணரமுடிகிறது.

அட்டவணை 13இல் காணப்படுபவை கொடுமணலில் கிடைத்த பிற குறியீடுகளின் வடிவங்கள் ஆகும். இவை குறியீடுகளின் எண்ணிக்கையையும், அளவையும் காட்டுவனவாக உள்ளன. இலங்கை யாழ்ப்பாணத் தீபகற்பத்தில் ஆனைக் கோட்டையில் அகழ்ந்த பெருங்கற்படைச் சின்னத்தில் கிடைத்த முத்திரையில் மூன்று குறியீடுகளைக் கொண்ட தொடர் மேல் வரிசையிலும் அதனடியில் கீழ்வரிசையில் 'கோவேத' என்ற தமிழ்ப் பிராமி எழுத்தும் காணப்படுவதால் இது குறியீடு தொடர்பான ஆய்வில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியது எனலாம் (அட்டவணை 14). 'கோவேத' என்ற இச்சொல் அரசனைக் குறிப்பதாக எடுத்துக்கொண்டு மேல் வரிசையில் காணப்படும் குறியீடுகள் இதற்கு ஒத்த மன்னன் அல்லது தலைவன் என்ற கருத்தினையே வெளிப்படுத்துவதாக கே.இந்திரபாலா மற்றும் கே.வி.ரமேஷ் ஆகியோர் கருதுகின்றனர். இதே வடிவம் சேர மன்னனின் எடக்கல் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டின் இறுதியிலும் வருவதால் இக்குறியீடு ஒலி வடிவமோ அல்லது கருத்து வடிவமே பெற்றுத் திகழ்ந்திருக்க வேண்டும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை (அட்டவணை 15). இக்குறியீடு முத்திரையில் இடம்பெறுவது இக்கருத்துக்கு மேலும் வலு சேர்க்கிறது.

மேற்கூறிய கருத்துகளின் அடிப்படையிலும், குறியீடுகளின் தன்மை, அளவு, வடிவம் ஆகியவற்றின் அடிப்படையிலும், இக்குறியீடுகள் தென்னகம் முழுவதும் பரவி இருப்பதாலும், குறிப்பாகத் தமிழகத்தில் அகழாய்வு செய்யப்பட்ட அனைத்து இடங்களிலும் இவை கிடைப்பதாலும், தமிழ்ப் பிராமி வரிவடிவங்களைப் போன்றே இவையும் இடமிருந்து வலமாக எழுதப்பட்டுள்ளதாலும், தமிழ்ப் பிராமி வரிவடிவத்திற்குரிய முக்கியத்துவத்தை இக்குறியீடுகளும்

பெற்றுத் திகழ்வதாலும், குறிப்பிட்ட சில குறியீடுகள் மட்டும் ஈமச்சின்னங்களில் கிடைப்பதாலும், அத்தகைய ஈமச் சின்னங்களில் எண்ணற்ற மதிப்புமிக்க தொல்பொருட்கள் கிடைப்பதாலும், தமிழ்ப் பிராமி வரிவடிவம் வழக்கில் வந்தவுடன் இக்குறியீடுகளின் பயன்பாடு குறைந்துவிடுவதாலும், பானை ஓடுகள், நாணயங்கள், கல்வெட்டுகள் மற்றும் மோதிரங்கள் என எண்ணற்ற ஊடகங்களின் வாயிலாக இவை வெளிப்படுவதாலும், சங்க காலத்திற்கு முன்பிருந்தே அதாவது சிந்து சமவெளிப் பண்பாடு தொட்டுச் சில வடிவ மாற்றங்களுடன் தொடர்ந்து இவை இருந்துவந்துள்ளதாலும் இக்குறியீடுகளைச் சாதாரணக் கீறல்கள் என எந்தவொரு ஆய்வாளராலும் ஒதுக்கிவிட இயலாது. எனவே, தமிழ்ப் பிராமி வரிவடிவம் தமிழகத்தில் பயன்பாட்டிற்கு வருவதற்கு முன்பாகவே இக்குறியீடுகளும் சமகால மக்களின் எண்ணம் அல்லது கருத்துப் பரிமாற்றத்திற்குப் பயன்படுத்தப்பட்ட ஒருவகை வரிவடிவமே என இதை எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது. தமிழகத்தில் இக்குறியீடுகள் பரவலாகக் கிடைப்பதால் இந்நிலையை இவை அடையப் பல்லாண்டு காலம் ஆகியிருக்க வேண்டும் என்பதும் புலனாகிறது. இவற்றைப் படித்து அதன்மூலம் தமிழக வரலாற்றை வளப்படுத்த இயலும் என்பதால் இனிவரும் காலங்களில் ஆய்வாளர்கள் இக்குறியீடுகளுக்கு முக்கியத்துவம் அளித்து முறைப்படி பதிவு செய்து வந்தால் இக்குறியீடு தொடர்பான செய்திகள் மேலும் வலுப்பெறும்.

## தமிழ்ப் பிராமி

இந்தியாவில் கிடைத்த வரிவடிவங்களில் நன்கு படித்துணரப்பட்ட வரிவடிவம் பிராமி வரிவடிவம் ஆகும். பிற வரிவடிவங்களான சிந்துவெளி எழுத்துகள், குறியீடுகள் போன்றவை இன்னும் முழுமையாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் படித்துணரப்படவில்லை.

'பிராமி' என்ற வரிவடிவம் புத்தமத நூலான *லலிதவிஸ்தாரம்*, சமண நூலான *பன்னவனசுதா* போன்றவற்றில் குறிக்கப்பட்ட வரிவடிவங்களில் ஒன்றாகக் இது காணப் படுகிறது. புத்தமத ஜாதகக் கதைகள் பிராமியைத் தோற்றுவித்தவர் புத்தர் என்று கூறிக்கொள்ள, சமணர்கள் அவர்களது முதல் தீர்த்தங்கரரான ரிஷபதேவர் தமது மகள் பிராதமி பெயரில் உருவாக்கியதே பிராமி என்று அழைக்க,

இந்துக்களோ கடவுள் பிரம்மா தோற்றுவித்ததால் பிராமி எனப்பெயர் பெற்றது என்று கூறிக் கொள்கின்றனர். இந்தியாவின் முக்கிய மூன்று சமயத்தவரும் இதைத் தாம் உருவாக்கியதாகக் கூறிக் கொள்வதால் இம் மூன்று சமயத்தையும் சாராத மக்களின் பண்பாட்டு வளர்ச்சியாக இது உருவாகியிருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது. இந்தப் 'பிராமி' வரிவடிவம் வழக்கில் இருக்கும் பொழுதே தமிழி, திரமிழி, திராவிடி என்று அழைக்கப்படுகின்ற வரிவடிவம் தென்னகத்தில் வழக்கில் இருந்தது என்பதைப் பண்டைய நூல்கள் குறிப்பிடுகின்றன.

தமிழகத்தைப் பொறுத்தவரை குறியீடுகளுக்கு அடுத்துக் கிடைக்கும் வரிவடிவம் தமிழ்ப் பிராமி வரிவடிவம் ஆகும். தமிழகத்தில் கிடைத்த இவ் வரிவடிவத்தைத் தமிழ்ப் பிராமி என்றழைப்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. இந்தியாவில் குறிப்பாக அசோக மன்னனால் வெளியிடப்பட்ட ஆணைகளில் இவ்வரிவடிவம் காணப் படுவதால் இது அசோகர்-பிராமி என்றும், மௌரிய-பிராமி என்றும் அழைக்கப்பட்டது. பின்னர்த் தென்னகத்தில் குறிப்பாக ஆந்திர மாநிலத்தில் உள்ள பட்டிப்புரோலு என்ற இடத்தில் கிடைத்தவையும், தமிழகத்தில் கிடைத்தவையும் வரிவடிவத்தில் சில மாற்று வடிவங்களைப் பெற்றுத் திகழ்வதின் அடிப்படையில் இவை தென் பிராமி என்றும், வட இந்தியாவில் கிடைப்பவை வடபிராமி என்றும் அழைக்கப்படுகின்றன. தமிழகத்தில் கிடைக்கும் இவ்வரிவடிவங்கள் தமிழ்மொழியில் எழுதப்பட்டிருக்க வட வேங்கடத்திற்கு அப்பால் உள்ள பிராமிக் கல்வெட்டுகளில் பிராகிருத மொழி பயன்படுத்தப்பட்டுள்ளது. தமிழ்ப் பிராமி என்பது தமிழ்மொழியில் எழுதப்பட்ட பிராமி வரிவடிவங்கள் என்று பொருள்படும். ஆனால் இந்தியாவில் பிற இடங்களில் கிடைப்பவை பிராகிருத மொழியில் எழுதப்பட்ட பிராமி வரிவடிவங்களே என்பதால் இவற்றை அசோகர்-பிராமி என்றழைக்காமல் பிராகிருத-பிராமி என்றழைப்பதே சரியான பதமாக இருக்கும் என்று நடன.காசிநாதன் கருதுகின்றார். அதேபோன்று, இலங்கையில் கிடைக்கும் சமகாலத்திய கல்வெட்டுகள் பிராகிருத மொழியில் எழுதப்பட்டிருப்பதால் அவற்றையும் பிராகிருத-பிராமி என்றழைப்பதே சிறந்தது எனப் பரமு. புஸ்பரட்ணம் போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால், ஐராவதம் மகாதேவன் அவர்களால் அவை சிங்கள-பிராமி என்றழைக்கப்பட்டுள்ளதால் இக்காலக்கட்டத்திலேயே

சிங்கள மொழி தோன்றி இலங்கையில் நன்கு வேருன்றிவிட்டது என்ற தவறான எண்ணத்தை ஏற்படுத்துகிறது. தமிழ்மொழியிலிருந்து மலையாளம் தோன்றியதுபோல் பிராகிருத மொழியில் இருந்து சிங்களமொழி தோன்றியது என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. இருப்பினும் கேரளத்தில் கிடைத்த பிராமிக் கல்வெட்டுகள் தமிழ்மொழியில் எழுதப்பட்டுள்ளதால் இவை தமிழ்ப் பிராமி என்றே அழைக்கப்படுகின்றன. குறிப்பாக, மலையாள-பிராமி என்று அழைக்கப்படுவதில்லை. அதேபோல் அசோகர் கல்வெட்டுகளும், தமிழகத்தில் கிடைக்கும் கல்வெட்டுகளும் சமகாலத்தவையாக இருப்பதால் இவ்வரிவடிவம் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி வந்ததா? அல்லது தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் சென்றதா? என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. அண்மைக் காலமாக இலங்கையில் உள்ள ஆய்வாளர்கள் இவை இலங்கையில் அசோகர் காலத்திற்கு முன்பே தோன்றின எனவும் இலங்கையிலிருந்தே இந்தியாவிற்குத் தமிழகத்தின் ஊடாகச் சென்றன எனவும் சில கருதுகோள்களை முன்வைத்துள்ளனர்.

மேற்கூறிய முரண்பாடுகள் அனைத்தும் இந்தியா, இலங்கை முழுவதும் ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் இவ்வரிவடிவம் பரவி விட்டபடியால் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் ஆகும். காலத்தால் முந்திய கல்வெட்டுகள் இவைதான் என இனங்கண்டு அறுதியிட்டுக் கூறமுடியாத அளவிற்குத் தரவுகள் இப்பொழுதுள்ளன. இப்பிராமி கல்வெட்டுகள் கிடைக்கும் இடம், தன்மை, அளவு, வரிவடிவங்களுக்கிடையே காணப்படும் ஒற்றுமை, வேற்றுமை, மொழியின் கட்டமைப்பு, கல்வெட்டுகளில் காணப்படும் சமூகக் கட்டமைப்பு, வரலாற்றுச் செய்திகள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே இவற்றின் காலம் கணிக்கப்பட்டுள்ளதால் இவற்றை உள்வாங்கிக் கொள்வதிலும், இவற்றிற்கும் தொல்லியல் மற்றும் இலக்கியத் தரவுகளுக்கும் இடையே காணப்படுகின்ற தொடர்பினைப் புரிந்துகொள்வதிலும் காணப்படுகின்ற இடர்ப்பாடுகள் காரணமாகத் தமிழகத்தில் காணப்படும் சங்ககாலக் கல்வெட்டுகளுக்கு அறிஞர்கள் கொடுக்கும் காலக்கணிப்பில் முரண்பாடு காணப்படுகிறது. இவ் வரிவடிவம் தமிழகத்திலிருந்தே பிற பகுதிகளுக்குச் சென்றுள்ளது என்ற கருதுகோளை முன்வைத்து ஆய்வு செய்பவர்கள் இவ் வரிவடிவங்கள் தமிழுக்கே உரித்தானவை என்றும், தமிழ் மொழியை எழுதப் பயன்படுத்திய பழந்தமிழ் வரிவடிவமே

இவை என்பதாலும் இவற்றைத் தமிழ்ப் பிராமி என்றழைக்காமல் தமிழி அல்லது பழந்தமிழ் என்றே அழைக்க வேண்டும் எனவும் தமது கருத்துகளை முன்வைத்துள்ளனர். இக்காலக்கணிப்பில் ஏற்பட்டுள்ள கருத்து வேறுபாடுகளின் காரணமாகத் தமிழக வரலாற்றை, குறிப்பாகச் சங்க காலத்தை, உணர்ந்து கொள்வதில் பல இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. இவற்றை மனத்தில் நிறுத்தி தொல்லியல் தரவுகளுக்கும் பிற தரவுகளுக்கும் இடையே காணப்படும் கருத்து ஒற்றுமை வேற்றுமைகளை ஆய்வது அவசியமாகும்.

தமிழகத்தில் கல்வெட்டுகள், நாணயங்கள், முத்திரைகள், ஆபரணங்கள் மற்றும் பானை ஓடுகளில் தமிழ்ப் பிரா்மி வரிவடிவங்கள் கிடைத்துள்ளன. இவை தமிழகம் முழுவதும் பரவலாக, குறிப்பாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்ற அனைத்து முக்கியமான தலைநகரங்களிலும், துறைமுகப் பட்டினங்களிலும், வணிக மையங்களிலும் மற்றும் மிகச் சிறிய ஊர்களிலும் கிடைத்துள்ளன. அதனால் இவ்வரிவடிவம் சங்க காலத்தில் வழக்கத்தில் இருந்தது என்பதை ஏற்றுக் கொள்வதில் இடர்ப்பாடுகள் இல்லை. ஆனால் இவற்றின் பயன்பாட்டுத் தன்மையினால் இவை வெளிப்படுத்தும் பண்பாட்டுக்கூறுகள் சிறிது மாறுபடுகின்றன. எடுத்துக் காட்டாக, தமிழகக் குகைகளில் காணப்படும் கல்வெட்டுகள் அனைத்தும் சமண சமயத்துடன் தொடர்புடையவையாக இருப்பதால் அவை காட்டும் மொழியின் தன்மை பிற தரவுகளிலிருந்து மாறுபட்டு இருப்பதில் வியப்பில்லை. எடுத்துக்காட்டாக, 'தம்மம்' போன்ற பல பிராகிருத சொற்கள் அதிக அளவில் பயன்படுத்தப் பட்டுள்ளன. அதே சமயம் இவை பிற தரவுகளில் அருகிக் காணப்படுகின்றன.

இக் கல்வெட்டுகளின் தன்மை, மொழியியல் அமைப்பு, எழுத்தமைப்பு போன்றவற்றைப் பல்லாண்டுக் காலம் நுணுகி ஆராய்ந்த ஐராவதம் மகாதேவன் அண்மையில் Early Tamil Epigraphy : from the earliest times to the sixth century AD என்ற நூலை வெளியிட்டுள்ளார். இந்நூல் மூலம் சங்க காலப் பண்பாட்டின் பல்வேறு கூறுகள் மேலும் வெளிச்சத்துக்கு வந்துள்ளன என்றால் அது மிகையாகாது. இவர் அளித்துள்ள தரவுகளில் காணப்படுகின்ற மொழியியல், சமுகவியல், வரலாற்று இயல், படித்துள்ள சொற்கள் ஆகியவற்றில் காணப்படுகின்ற நிறை குறைகளை அறிஞர்கள் சுட்டிக்காட்டி வருகின்றனர். இந்நிலையில் சங்ககாலக் கல்வெட்டுகளுக்கு இவர்

அளித்துள்ள கால வரையறை மட்டுமே இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இவர் தமிழ்ப் பிராமி கல்வெட்டுகளை முதல், இடை, கடை என மூன்று பிரிவுகளாகப் பிரித்துக்கொண்டு முதல் காலக்கட்டத்தை கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு இரு நூற்றாண்டுகளுக்கும், இடைக்காலத்தைக் கிறிஸ்து பிறந்ததற்குப் பின்பு இரு நூற்றாண்டுகளுக்கும், கடைசிக் காலத்தை கி.பி.*3-4* நூற்றாண்டுக்குள்ளும் அடக்குகிறார் (Early Period 2-1 Century B.C; Middle Period 1-2 Century AD; Late Period 3-4 Century AD). எனவே, இக்காலப் பகுப்பின் மூலம் இதுவரை தமிழகத்தில் கிடைத்தவற்றில் காலத்தால் முந்தியவை கி.மு. இரண்டாம் நூற்றாண்டு என வரையறுத்து இருக்கிறார். இதை மேலும் வரலாற்றுக் காலக் கணக்கில் குறிப்பிட்டால் கி.மு. *199*க்கும் *100*க்கும் இடைப்பட்ட காலம் எனக் கொள்ளலாம். ஆய்வாளர்கள் தமக்குக் கிடைக்கும் தரவுகளின் அடிப்படையில் காலத்தால் முந்தியதாக கி.மு.*199* என்றோ அல்லது கி.மு. *100* என்றோ வைத்துக் கொள்ளலாம். ஐராவதம் மகாதேவன் அவர்கள் அளித்துள்ள காலத்தால் முந்திய காலக்கணிப்பான கி.மு.*199* என ஏற்றுக்கொண்டாலும் கூட, தொல்லியல் ஆய்வில் சில இடர்ப்பாடுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. தொல்லியல் ஆய்வில் ஏற்படுகின்ற, எதிர்கொள்ள வேண்டிய இடர்ப்பாடுகளை அறிஞர்களின் முன் எடுத்து வைப்பது இங்கு அவசியமாகும்.

தொல்லியல் அகழாய்வில் கிடைக்கும் எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகள் அனைத்தும் ஒரு குறிப்பிட்ட பண்பாட்டை வெளிப்படுத்தும் மண் அடுக்குகளில் கிடைக்கின்றன. ஓர் அகழாய்வில் அல்லது அகழாய்வுக் குழியில் பொதுவாகப் பல மண் அடுக்குகள் கிடைக்கும். இம்மண் அடுக்குகளில் கிடைக்கும் பண்பாட்டுக் கூறுகளின் அடிப்படையில் கால வரையறை செய்யப்படுகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட மண்ணடுக்குகளுக்கு இடையே காணப்படும் பண்பாட்டுத் தரவுகளின் அடிப்படையிலும், அதன் அமைவிடம் ஆகியவற்றின் அடிப்படையிலும் காலம் கணிக்கப்படுகிறது. பொதுவாக மனிதரால் தாம் வாழும் இடத்தில் மேற் கொள்ளப்படுகின்ற பல்வேறு பண்பாட்டு நடவடிக்கைகளின் காரணமாகவும், இயற்கை அவ்வப்போது வெளிப்படுத்தும் தாக்கத்தின் காரணமாகவும் மண் அடுக்குகள் உருவாவதால் இம்மண்ணடுக்குகளை ஆய்வுக்கு உட்படுத்தப்படும்பொழுது மேலிருந்து கீழாகச் செல்லச் செல்ல காலமும் பின்னோக்கிச்

செல்கிறது. கதிரியக்கக் கரிம காலக்கணிப்பு (Radiocarbon dating), தொல்காந்தப்புல காலக்கணிப்பு (Archaeomagnetism), வெப்பவொள்ளெறி முறைக் காலக்கணிப்பு (Thermoluminescence), மரவளையக் காலக்கணிப்பு (Dendrochronology) போன்ற எண்ணற்ற அறிவியல் சார்ந்த காலக்கணிப்பு முறைகள் நடைமுறைக்கு வந்துவிட்டாலும் இம்மண் அடுக்குமுறை ஆய்வு உலகம் முழுவதும் இன்றும் பயன்படுத்தப்பட்டு வருவது இதன் நம்பகத்தன்மையை நமக்கு உணர்த்துவதாக உள்ளது. எனவே, கொடுமணலில் எடுக்கப்பட்ட தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகள் கிடைத்த மண் அடுக்குகளின் தன்மை குறித்து இங்குப் பேசுவது தகும்.

தமிழகத்தில் கிடைத்த தமிழ்ப் பிராமி பொறிப்புப் பெற்ற கல்வெட்டுகள், நாணயங்கள், பிற ஆபரணங்கள் அனைத்தும் எழுதப்பட்ட முறை, மொழியின் அமைப்பு ஆகியவற்றின் அடிப்படையிலேயே காலக் கணிப்புச் செய்யப் பட்டுள்ளது. ஆனால் அகழாய்வில் மேற்குறிப்பிட்ட தரவுகளுடன் அவை எந்த மண் அடுக்குகளில் கிடைத்தன, அதனுடன் கூடிய பிற பண்பாட்டுக் கூறுகள் என்ன என்பது போன்ற கூடுதல் தரவுகள் கிடைப்பதால் மண் அடுக்குகளை ஆராய்வது இங்கு முக்கியத்துவம் பெறுகிறது.

ஏறக்குறைய முந்நூறுக்கும் மேற்பட்ட தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகள் 16க்கும் மேற்பட்ட சங்ககால ஊர்களில் கிடைத்துள்ளன. இவற்றில் கொடுமணல் அகழாய்வில் மட்டுமே 204 எழுத்துப்பொறிப்புக் கொண்ட பானை ஓடுகள் (அதாவது 65 சதவீதத்திற்கும் மேலாக) கிடைத்துள்ளன. *பதிற்றுப்பத்தில்* இவ்வூர் கொடுமணம் என்று குறிக்கப்படுவதாலும், இதுவரை தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் பரந்த அளவில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வு என்பதாலும், இவ்வூரின் வாழ்விடத்தில் கிடைக்கும் மண் அடுக்குகள் சிதைவுறாமல் இருப்பதாலும் இவை இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

ஐராவதம் மகாதேவன் தமிழ்ப் பிராமி கல்வெட்டுகளின் வரிவடிவத்தில் காணப்படுகின்ற அகரமேறிய மெய்யைக் குறிப்பிடுவதற்கு இடப்படும் ஒலிக் குறியீட்டின் அடிப்படையிலும், மெய்யெழுத்திற்கு இடப்படும் 'புள்ளி' புழக்கத்தில் வந்த காலத்தைக் கணக்கில் கொண்டும் தமிழ்ப்

பிராமி I, தமிழ்ப் பிராமி II மற்றும் தமிழ்ப் பிராமி III எனப் பகுத்துள்ளார். தமிழ்ப் பிராமி Iஇல் அகரமேறிய மெய்யைக் குறிக்கவும், ஆகாரமேறிய மெய்யைக் குறிக்கவும் எழுத்தின் மேல் வலப்புறம் ஒலிக் குறியீடாக ஒரு படுக்கைக்கோடு இடப்பட்டது (எ.கா. சாத்தன்  ). தமிழ் மொழி நன்கு கற்றவர்கள் குறிலுக்கும், நெடிலுக்கும் இடையே காணப்படும் பாகுபாட்டை உணர்ந்து படித்துக் கொள்வர்.

ஒரு சொல்லில் வரும் அகரமேறிய அல்லது ஆகாரமேறிய மெய்யைக் குறிக்கும் இவ்வொலிக் குறியீடு குறிலாக மட்டுமன்றி நெடிலாகவும் பொருள் தருபவையாக அமைந்துவிடுமானால் அச்சொல்லின் உண்மைப் பொருளைப் புரிந்துகொள்வதில் மொழி அறிந்தவர்களுக்கும் கூடச் சிக்கல் ஏற்பட்டுவிடும். எடுத்துக்காட்டாக,  என்பதைக் 'கல்' என்றும், 'கால்' என்றும் தமிழ்ப் பிராமி Iஇன் படி படிக்கலாம். எனவே, இச்சிக்கலைத் தவிர்க்கும் பொருட்டுத் தமிழ்ப் பிராமி IIஇல் இவ்வொலிக் குறியீடு ஆகாரமேறிய மெய்யைக் குறிக்க மட்டும் பயன்படுத்தப்பட்டது. அதாவது  (சாத்தன்) என்று தமிழ்ப் பிராமி Iஇல் எழுதப்பட்டது  (சாத்தன்) என்று தமிழ்ப் பிராமி IIஇல் எழுதப்பட்டது. இம்முறையில் சாத்தனில் வரும் 'த' எழுத்தின்மேல் படுக்கைக்கோடு இடப்படவில்லை. எனவே, தமிழ்ப் பிராமிIIஇல் ஓர் அடிப்படைக் குறியீட்டை உயிர்மெய்க் குறிலாகவோ அல்லது மெய்யாகவோ எடுத்துக் கொள்ளலாம். இம்முறையில் தமிழ்ப் பிராமி Iஇல் காணப்படும் சிக்கல் ஓரளவு குறைக்கப்பட்டது எனலாம். ஆயினும் மெய்யிற்கும், உயிர்மெய்க் குறிலுக்கும் வரிவடிவத்தில் எவ்விதப் பாகுபாடும் காட்டப்படவில்லை. இது ஒரு குறை எனலாம். எனினும், இக்குறையை முழுவதுமாகக் களையத் தமிழ்ப் பிராமி IIIஇல் மெய்யைக் குறிக்க அடிப்படைக் குறியீட்டின் மேல் புள்ளியிடப்பட்டது. எனவே, தமிழ்ப் பிராமி I எழுத்துமுறை காலத்தால் முந்தியது எனவும், தமிழ்ப் பிராமி II எழுத்துமுறை காலத்தால் சிறிது பிந்தியது எனவும் தமிழ்ப் பிராமி III எழுத்துமுறை அதாவது புள்ளி வைத்து எழுதும் முறை தொல்காப்பியரின் எழுத்துச் சீர்திருத்தத்தினால் ஏற்பட்டது என்ற கருத்தும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. ஆயினும், பல்வேறு தரவுகளை நுணுகிப் பார்க்கும் பொழுது தமிழ்ப் பிராமி Iம் மற்றும் IIம் கலந்தே தொடக்க காலம் முதலே தமிழகத்தில் கிடைப்பதாக இப்பொழுது கருதவேண்டியுள்ளது. ஆயினும், புள்ளியியல் அடிப்படையில் ஆய்வினை மேற்கொண்ட

ஐராவதம் மகாதேவன் அவர்கள் தமிழ்ப் பிராமி I கி.மு. 2ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் அதிகமாகவும் பின்னர்க் குறைந்து கி.மு. முதலாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் வழக்கில் இருந்து மறைந்து விடுவதாகவும், தமிழ்ப் பிராமி II கி.மு. முதலாம் நூற்றாண்டு தொட்டுக் கிடைப்பதாகவும், மெய்யிற்குப் புள்ளியிடும் தமிழ்ப் பிராமி III முறை கி.பி.2ஆம் நூற்றாண்டில் வழக்கிற்கு வந்ததாகவும் கணித்துள்ளார் (Mahadevan 2003:232-233).

மேற்கூறிய முதல் இரண்டு வகை எழுத்துமுறையும் இணையாக இருந்த போதிலும் அசோகர் காலக் கல்வெட்டுகளில் காணப்படுபவை தமிழ்ப் பிராமி II வகையாகவே காணப் படுகின்றன. அசோகர்-பிராமியிலிருந்து தமிழ்ப் பிராமி எழுத்து வரிவடிவம் தோன்றியது என்றால் நேரடியாக எளிதான தமிழ்ப் பிராமி II வரிவடிவமே தமிழகத்தில் புழக்கத்திற்கு வந்திருக்க வேண்டும். ஆனால், அதற்கு மாறாகப் புதியதொரு சிக்கலான எழுத்து வரிவடிவமுறையை இங்குப் பயன்படுத்தவேண்டிய தேவையில்லை. மேலும் அசோகர்-பிராமியில் வழக்கத்தில் இல்லாத தமிழ்ப் பிராமி I எழுத்துமுறை கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலும், அசோகர்-பிராமி முறையில் காணப்படும் தமிழ்ப் பிராமி II கி.மு. முதலாம் நூற்றாண்டிலும் எவ்வாறு வந்தன என்பதற்கான வழிமுறைகள் கூறப்படவில்லை. அசோகர்-பிராமியிலிருந்து தமிழ்ப் பிராமி II வந்திருந்தால் தமிழ்ப் பிராமி I எங்கிருந்து வந்தது என்பதை நாம் குறிப்பிட வேண்டும். இவ்வகை எழுத்துமுறை தமிழகத்திற்கு அப்பால் இல்லையெனில் தமிழ்நாட்டிற்கே உரித்தானதாகக் கொள்ள வேண்டியுள்ளது. கொடுமணலில் தமிழ்ப் பிராமி I எழுத்துமுறை வாழ்விடப் பகுதியில் தோண்டப்பட்ட *1.80*செ.மீ பண்பாட்டு மண்ணடுக்கு முழுவதும் கிடைக்கின்றது (படம் *12, 13*). ஐராவதம் மகாதேவன் கூறும் கருத்தை ஏற்றுக்கொண்டால் கொடுமணல் காலத்தைக் கி.மு.*2*க்கும் கி.மு.*1*க்கும் இடைப்பட்ட காலமாக எடுத்துக்கொள்ளவேண்டும். கொடுமணல் வாழ்விடத்தில் கிடைத்த குறியீடுகள், தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புகள், செம்பழுப்புப் பூச்சுப் பெற்ற வெள்ளை வண்ணம் தீட்டப்பட்ட பானை ஓடுகள், கார்னீலியன் மணிகள், இரும்புப் பொருட்கள் போன்றவை வாழ்விடத்தை ஒட்டியுள்ள பெருங்கற்படைச் சின்னத்திலும் கிடைப்பதால் வாழ்விடத்திற்கும் பெருங்கற்படைச் சின்னத்திற்கும் இடையே காணப்படும் நெருங்கிய தொடர்பு புலப்படுகிறது. இதனால் கொடுமணலில் நூறு ஏக்கர்

பரப்பளவில் 150க்கும் மேற்பட்ட சின்னங்கள் காணப்படுகின்றன. இச்சின்னங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பின்பும் எஞ்சி நிற்பவை என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். மேலும் இச்சின்னங்கள் வாழ்விடத்தில் வாழ்ந்து இறந்துபட்ட அனைவருக்கும் எழுப்பப்படவில்லை என்பது அங்கு வாழ்விடத்தில் கிடைத்த எலும்புக்கூடுகளும், சின்னங்களுக்கு இடையே காணப்படும் முதுமக்கள் தாழிகளும் புலப்படுத்துகின்றன. இச்சின்னங்களின் அளவும், அமைக்கப்பட்ட நேர்த்தியும், வைக்கப்பட்ட பொருட்களின் தன்மையும் இவை சமூகத்தில் ஓரளவு உயர்ந்த நிலையில் வாழ்ந்த மக்களுக்காக உருவாக்கப்பட்டவையெனத் தெரிகிறது. இன்று எஞ்சியுள்ள சின்னங்களைக் கணக்கில் எடுத்துக்கொண்டால் கூட நூறு அல்லது இருநூறு ஆண்டுகளுக்கு உட்பட்ட காலத்தில் அத்துணைப் பெரியவர்கள் வாழ்ந்து மடிந்திருக்க வாய்ப்பிலை எனலாம்.



படம் 12 கொடுமணல் - தமிழ்ப் பிராமி பொறிப்புக் கொண்ட பானை ஓடுகள்





படம் 13 கொடுமணல் - தமிழ்ப் பிராமி பொறிப்புக் கொண்ட பானை ஓடுகள்

கொடுமணல் அகழாய்வுக் குழிகளில் 8 வாழ்விட (வீட்டு) மண் தரைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பொதுவாக ஒரு வீட்டுத் தரையின் பயன்பாட்டின் காலம் குறைந்தது ஐம்பது ஆண்டுகள் என எடுத்துக்கொண்டால் எட்டு வீட்டுத் தரைகள் நானூறு ஆண்டுகளில் உருவாகியிருக்க வேண்டும். இவற்றின் காலத்தை மேல் மண்ணடுக்கிலிருந்து கீழ் நோக்கியோ, கன்னிமண் மேல் உள்ள மண்ணடுக்கு முதல் மேல் நோக்கியோ காலத்தைக் கணிக்கலாம். அவ்வாறு பார்க்கும் பொழுது கொடுமணலில் கன்னி மண் மேல் கிடைக்கும் தமிழ்ப் பிராமி I, II வகையைச் சார்ந்த வரிவடிவங்களின் காலத்தைக் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு என்று எடுத்துக் கொண்டால் இவற்றின் காலம் கி.மு.இரண்டிற்கும் கி.பி.நான்காம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தைச் சார்ந்தவை எனக் காலக் கணிப்புச் செய்ய வேண்டியுள்ளது. ஆனால், கொடுமணலின் இறுதிக் காலத்தில் (அதாவது மேல் மண்ணடுக்கில்) கிடைத்த தமிழ்ப் பிராமி வரிவடிவத்தில் எவ்வித மாற்றமும் இல்லை. எனவே, வரிவடிவ வளர்ச்சியில் பெருத்த மாற்றம் பெறாததும், புள்ளியில்லா வரிவடிவம் மட்டுமே கிடைப்பதாலும் ஐராவதம் மகாதேவன் காலக் கணிப்புப்படி இவற்றின் காலத்தைக் கி.மு. முதல் நூற்றாண்டிற்குப் பின்பு கொண்டு செல்ல இயலாது. ஐராவதம் மகாதேவன் காலக்கணிப்பு மேல் மண்ணடுக்கில் கிடைக்கும் வரிவடிவத்தைக் கி.மு. முதலாம் நூற்றாண்டு என எடுத்துக் கொண்டு ஒரு வீட்டுத் தரையின் காலம் ஐம்பது ஆண்டுகள் எனக் கொண்டு 8 வீட்டுத் தரைக்கு நானூறு ஆண்டுகள் எனக் கொள்ள வேண்டியுள்ளது. எனவே, மேல் மண்ணடுக்கின் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு எனக் கொண்டால் கீழ் மண்ணடுக்கின் காலம் கி.மு.நானூறு என்று ஆகிறது. கொடுமணலில் கிடைக்கும் தமிழ்ப் பிராமி வரிவடிவத்தின் காலம் கி.மு.400 வரை பின்னோக்கிச் செல்வதை உணரலாம். இக்காலமே ஏற்புடையதாகத் தெரிகிறது.

மேலும் கொடுமணல் வாழ்விடத்தில் 2மீ ஆழத்தில் கிடைத்த செம்பழுப்புப் பூச்சுப் பெற்று வெள்ளை வண்ணம் தீட்டப்பட்ட பானை ஓடுகளை ஐராவதம் மகாதேவன் குறிப்பிடும் கால எல்லைக்குள் கொண்டு வருவதிலும் இடர்ப்பாடு உள்ளது. காவிரி ஆற்றின் கரையிலும் அதன் துணை ஆறுகளான நொய்யல், அமராவதி ஆற்றின் கரைகளிலும் அமைந்துள்ள சங்ககால ஊர்களான கரூர், கொடுமணல், கணியாம்பூண்டி, சூலூர், பேரூர்,

போளுவாம்பட்டி போன்ற ஊர்களில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் கிடைத்த மட்பாண்டங்களை அவை எந்தப் பண்பாட்டுக்குரிய மண்ணடுக்கில் கிடைத்தன என்பதைக் கொண்டு அவற்றை ஐந்து பண்பாட்டுக் கூறுகளாகப் (cultural phases) பிரிக்கலாம். பண்பாட்டுக் கூறு 1இல் மெலிதான கருப்பு சிவப்பு மட்பாண்டங்களும், பண்பாட்டுக் கூறு 2இல் கருப்பு சிவப்பு மட்பாண்டங்களுடன் செம்பழுப்புப் பூச்சுப் பெற்ற மட்பாண்டங்களும் தோன்ற ஆரம்பித்தன. பண்பாட்டுக் கூறு 3இல் செம்பழுப்புப் பூச்சுப் பெற்ற மட்பாண்டங்கள் மறைந்து தடித்த கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள் மட்டுமே நிலைத்தன. பண்பாட்டுக் கூறு 4இல் கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள் மறைந்து சாம்பல் நிற மட்பாண்டங்களும், கோதுமை நிறப் (Brown slIpped ware) பூச்சுப் பெற்ற வழவழப்பான மட்பாண்டங்களும் தோன்றின. பண்பாட்டுக்கூறு 5இல் அனைத்துவகை மட்பாண்டங்களும் மறைந்து சிவப்பு நிற மட்பாண்டங்கள் மட்டும் தொடர்ந்து நிலைத்தன.

மேற்கூறிய பண்பாட்டுக்கூறுகள் மண்ணடுக்குகளின் அடிப்படையிலும், இவற்றுடன் கிடைக்கும் மற்ற பண்பாட்டுப் பொருட்களின் அடிப்படையிலும், தமிழ்ப் பிராமி எந்தவகை மட்பாண்டங்களின் மேல் கீறப்பட்டன என்பதன் அடிப்படையிலும், பெருங்கற்படைச் சின்னங்களில் எவ்வகை மட்பாண்டங்கள் கிடைத்துள்ளன என்பதன் அடிப்படையிலும் காலத்தால் முந்தியவையாகப் பண்பாட்டுக் கூறு ஒன்று காணப்படுகிறது. கொடுமணல் அகழாய்வில் மேற்கூறிய பண்பாட்டுக் கூறுகளில் ஒன்று, நான்கு மற்றும் ஐந்து கிடைக்கவில்லை. அண்மையில் தமிழ்நாடு தொல்லியல் ஆய்வுத் துறையால் பேரூரில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் மேற்கூறிய ஐந்து கூறுகளும் கிடைத்தன (Shetty 2003:12-15). பேரூரில் 5.20மீ ஆழத்திற்குப் பண்பாட்டுக் கூறுகள் வெளிப்போந்தன. இவை இரு கால எல்லைக்குள் வைக்கப்பட்டுள்ளன. முதல் காலத்தில் மெலிதான கருப்பு சிவப்பு மட்பாண்டங்களும், செம்பழுப்புப் பூச்சுப் பெற்று வெள்ளை வண்ணம் தீட்டப்பட்ட மட்பாண்டங்களும் கிடைத்தன. கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள் முதலில் அதிகமாகவும் பிறகு குறைவாகவும் செம்பழுப்புப் பூச்சுப் பெற்று வெள்ளை வண்ணம் தீட்டப்பட்ட மட்பாண்டங்கள் முதலில் குறைவாகவும் பிறகு அதிகமாகவும் காணப்படுகின்றன. இக்காலக்கட்டத்தின் மத்தியில் இவை இரண்டும் ஒரே அளவில்

கிடைத்துள்ளன. மேற்கூறிய இடங்களில் மேற் கொள்ளப்பட்ட அகழாய்வுகளின் அடிப்படையில் காலத்தால் முந்தியவையாக மெலிதான கருப்பு சிவப்பு மட்பாண்டங்களை ஏற்றுக் கொள்ளலாம். கிருஷ்ணகிரி மாவட்டம் தொகரப்பள்ளிக்கு அருகில் மயிலாடும்பாறையில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் கருப்பு சிவப்பு மட்பாண்டத்திற்கு அதாவது பெருங்கற்படைச் சின்னப் பண்பாட்டிற்கு முந்தியதாகப் புதிய கற்காலப் பண்பாடும், சங்கப்புலவர் மாங்குடி மருதனார் வாழ்ந்து மறைந்த ஊராகக் கருதப்படும் மாங்குடியிலும், தேரிருவேலியிலும் மேற்கொண்ட அகழாய்வில் கருப்பு சிவப்பு மட்பாண்டம் பயன்படுத்தும் பண்பாட்டினைத் தாங்கி நிற்பவர்களுக்கு முன்பாக நுண்கருவிக்காலப் பண்பாடும் கிடைத்துள்ளன (Rajan 2003:120-126; Shetty 2003:60-61).

மாங்குடி, கொடுமணல், கரூர், மயிலாடும்பாறை, உறையூர், வல்லம், கொற்கை, அழகன்குளம், அரிக்கமேடு என அனைத்துச் சங்க கால ஊர்களிலும் கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள் கிடைப்பதுடன் இவற்றின் மேல் தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புகளும் காணப்படுகின்றன. ஐராவதம் மகாதேவன் கொடுக்கும் காலக் கணிப்பினை எடுத்துக் கொண்டால் இவற்றின் காலத்தைக் கி.மு.இரண்டு எனக் கொள்ளவேண்டும். மேலும் கி.மு இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பாக மக்கள் தமிழகத்தின் வட பகுதியில் புதிய கற்காலப் பண்பாட்டிலும், தென் பகுதியில் நுண்கற்கருவிக் காலப் பண்பாட்டிலும் வாழ்ந்ததாகக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். இது தொல்லியல் அகழாய்வு நெறிமுறைகளுக்கு மாறாக உள்ளது. ஒருவாதத்திற்காக மேற்கூறிய காலத்தை ஏற்றுக்கொண்டாலும்கூடப் புதிய கற்காலப் பண்பாட்டிலும், நுண்கற்கருவிக் காலப் பண்பாட்டிலும் வாழ்ந்த மக்கள் எங்ஙனம் மொழி, எழுத்து, இரும்பு, எஃகு தயாரித்தல், மணிகள் செய்தல், நாவாய் கட்டுதல், வணிகம் போன்ற அனைத்துத் துறைகளிலும் சிறந்து விளங்கியிருக்க முடியும் என்பதற்கான காரணத்தை விளக்க வேண்டியுள்ளது. தொழில்நுட்பத்திலும், கல்வியறிவிலும் சிறக்க எத்துணைக் காலம் ஆகியிருக்க வேண்டும் என்பதையும், தமிழ்நாடு முழுவதும் ஒரே மாதிரியான மொழி, இலக்கணம், வரிவடிவம் என உருவாக எத்துணைக் காலம் ஆகும் என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது.

எனவே, தொல்லியல் சான்றுகளை உற்று நோக்கும்பொழுது ஐராவதம் மகாதேவன் அவர்கள் தமிழகத்தில்

கிடைக்கும் தமிழ்ப் பிராமி வரிவடிவங்களுக்கு அளித்துள்ள கி.மு. இரண்டாம் நூற்றாண்டு என்ற காலக்கணிப்பை ஏற்றுக் கொள்வதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. எடுத்துக்காட்டாகப் பலவற்றைச் சுட்டிக்காட்டலாம். கொடுமணல் அகழாய்வில் இரண்டுமீட்டர் ஆழத்தில் கன்னிமண்ணின் மீது எ∴கு செய்யும் தொழிற்கூடமும், கார்னீலியன் மணி செய்யும் தொழிற்கூடமும், நன்கு கெட்டிப்படுத்தப்பட்ட வீட்டுத் தரைகளும் கிடைத்துள்ளன. இவற்றுடன் தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகள் கிடைத்துள்ளன. எனவே, இவற்றின் காலத்தை ஐராவதம் மகாதேவன் காலக்கணிப்புப்படி கி.மு. இரண்டு எனக் கொள்ளல் வேண்டும். மேல் மண்ணடுக்கிலும் மேற்கூறிய வகையைச் சார்ந்த தமிழ்ப் பிராமி எழுத்து வரிவடிவங்கள் கிடைத்துள்ளன. இவையனைத்தும் ஐராவதம் மகாதேவனின் தமிழ்ப் பிராமி வகை I, II களில் அடங்கும். கொடுமணலில் இவர் வரையறுத்துள்ள கி.பி.முதலாம் நூற்றாண்டைச் சார்ந்த வரிவடிவங்கள் கிடைக்கவில்லை. எனவே, மொத்தமுள்ள இரண்டு மீட்டர் ஆழமுள்ள பண்பாட்டு எச்சங்களைக் கி.மு. 2க்கும் 1க்கும் இடையே வைக்க வேண்டியுள்ளது. மேலும் தமிழுக்கே உரித்தான ழ, ற, ள, ன போன்ற வரிவடிவங்களும், அசோகர் கல்வெட்டுகளில் காணப்படும் 'ம' எழுத்துக்குரிய வடிவத்திற்கு மாறான வரிவடிவமும் இங்குக் கிடைக்கின்றன. இது அசோகர் காலத்திற்குப் பின் தமிழகத்திற்கு வந்ததாகக் கணக்கில் கொண்டால், தமிழகத்தில் உருவானதாக எடுத்துக் கொண்டால் ஐராவதம் மகாதேவன் காலக்கணிப்பின்படி, கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்குமுன் தமிழகத்தில் மக்கள் வாழ்ந்ததற்கான எச்சங்களே இல்லை எனக் கொள்ள வேண்டும். கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பு சங்ககால ஊர்களின் வாழ்விடங்களே இல்லாதபோது அசோக மன்னன் தமது கல்வெட்டுகளில் குறிப்பிடும் சங்க கால மன்னர்கள் யார்? அவர்கள் எங்கு வாழ்ந்தனர் என்பன போன்ற கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டியுள்ளது. மேலும் பாண்டிய மன்னன் நுண்கற்கருவிக்காலப் பண்பாட்டிலும், அதியமான் புதிய கற்காலப் பண்பாட்டு நிலையிலும் இருந்தான் என்ற சமூக வளர்ச்சி நிலைக்கு மாறான ஒரு நிலைப்பாட்டை நாம் ஏற்க வேண்டும். எனவே, ஐராவதம் மகாதேவன் அளித்துள்ள காலக்கணிப்பை ஏற்றுக்கொள்ள இயலாது என்பதை மேற்சுட்டிய தரவுகள் உணர்த்துகின்றன. மேலும் மிக முக்கியமான ஒன்றை இங்கு நினைவு கொள்ளல் வேண்டும். அசோகர்-

பிராமியிலிருந்தே தமிழ்ப் பிராமி தோன்றியது என்ற கருத்தின் அடிப்படையிலும், ஐராவதம் மகாதேவன் போன்றோர் இவற்றிற்கு 1960களில் அளித்த மூன்றாம் நூற்றாண்டு என்ற காலக்கணிப்பின் அடிப்படையிலும் தமிழகத்தில் சுதந்திரத்திற்குப் பின் மேற்கொள்ளப்பட்ட அனைத்து அகழாய்வுகளிலும் கிடைத்த தமிழ்ப் பிராமிப் பொறிப்புகள் காலக்கணிப்புச் செய்யப்பட்டுள்ளன. இவற்றின் அடிப்படையிலேயே தமிழகத்தின் அனைத்து ஊர்களும் கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் தோன்றுவதாகக் காலவரையறை செய்யப்பட்டுள்ளது. எடுத்துக் காட்டாக, கொடுமணலின் காலம் இதனடிப்படையிலேயே காலக் கணிப்புச் செய்யப்பட்டது. தற்பொழுது ஐராவதம் மகாதேவன் அவர்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டு என்பதைத் தவிர்த்துக் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு என்று கூறுவதால் மேற்கூறிய ஊர்களின் காலத்தை மேலும் நூறு ஆண்டுகள் குறைக்க வேண்டியுள்ளது. இது இந்தியத் துணைக்கண்டத்தில் காணப்படுகின்ற பண்பாட்டு வளர்ச்சியின் நிகழ்வுகளுக்கு மாறாக உள்ளது. எனவே, தொல்லியலாளர் தாம் அளித்துள்ள காலக்கணிப்பைச் சீர்தூக்கிப்பார்த்துத் தமிழகத்துப் பண்பாட்டுக் கூறுகளைத் தெளிவான காலவரையறைக்குள் அதாவது பிற பண்பாட்டுக் கூறுகளுக்கும், வரலாற்றுக்கும் முரண்படாது வைக்க வேண்டியுள்ளது.

அசோகர்-பிராமியிலிருந்தே தமிழ்ப் பிராமி தோன்றியது என்ற ஐராவதம் மகாதேவனின் கருதுகோள்களுக்கு மாறாக கே.வி.ரமேஷ், கே.வி.ராமன், நடன.காசிநாதன், சு. இராஜவேல் போன்றோர் தமது கருத்துகளை ஏற்கெனவே நன்கு பதிவு செய்துள்ளனர். அசோகர்-பிராமியிலிருந்து தமிழ்ப் பிராமி தோன்றியது என்பதை ஆய்விற்கு எடுத்துக் கொள்பவர்கள் அசோகர் எங்கிருந்து அவற்றை எடுத்துக்கொண்டார் என்பதற்கான விளக்கத்தினைத் தரவில்லை. அசோகர் காலத்தில் நன்கு புழக்கத்திற்கு வந்துவிட்ட இவ்வரிவடிவம் அதற்கு முன்பாக இந்தியாவில் இருந்திருக்க வேண்டும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. ஆனால் அதற்கான போதிய சான்றுகள் வட இந்தியாவில் கிடைக்கவில்லை. பிப்ரவா, மகஸ்தான் போன்ற இடங்களில் கிடைத்த சான்றுகள் அசோகர் காலத்திற்குச் சிறிது முற்பட்டவை எனக் கருதுகின்றனர். மேலும் வட இந்தியாவில் அசோகர் கல்வெட்டுகள் நீங்கலாகப் பார்த்தால் அங்குக் கிடைக்கும் சான்றுகள் மிகமிகக் குறைவு. தமிழகத்தைத் தவிர்த்து இந்தியாவில் கிடைக்கும் அனைத்துக் கல்வெட்டுகளும்

மன்னனின் ஆணையின் பேரில் உருவாக்கப்பட்டவை. அதாவது கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் பெரும்பாலும் இவை அரசின் ஆவணமாகத் திகழ்ந்துள்ளன. சமூகத்தின் பிற படிநிலைகளில் வாழும் சாதாரண மக்களின் பயன்பாட்டில் இவை எத்துணை தூரம் பரவியிருந்தன என்பதற்குப் போதிய சான்றுகள் வட இந்தியாவில் இல்லை. இந்தியா முழுவதும் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் கிடைத்த பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகளின் மொத்த எண்ணிக்கை தமிழகத்தில் கொடுமணலில் கிடைத்த எண்ணிக்கைக்கு ஈடாகாது. கொடுமணலில் மட்டும் இருநூற்றுக்கும் மேற்பட்ட தமிழ்ப் பிராமிப் பொறிப்புப் பெற்ற மட்பாண்டங்கள் கிடைத்துள்ளன. இவை ஒரு சதவீதத்திற்கும் குறைவான அளவில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் கிடைத்தவை. கொடுமணல் முழுவதையும் அகழ்ந்து பார்த்தால் மீதமுள்ள 99% எழுத்துப் பொறிப்புகள் வெளிப்படும். இவை அங்கு வாழ்ந்த மக்களின் கல்வியறிவை அறிவதுடன் சமூகத்தின் பல்வேறு கூறுகளை அறியப் பெரிதும் உதவும் என்பது திண்ணம். மேலும் இந்தியாவின் பிற பகுதிகளில் இவை பெரும்பாலும் கல்வெட்டு களிலேயே காணப்படுகின்றன. அங்ஙனம் கல்வெட்டுகளில் மட்டுமல்லாது பரவலாகத் தமிழகத்தில் காலத்தால் அழியாத பிறபொருட்களான நாணயங்களிலும், ஆபரணங்களிலும், பானை ஓடுகளிலும் இவை பொறிக்கப்பட்டுள்ளன. பொறிக்கப் பட்ட கல்வெட்டுகளில் கூடப் பெரும்பான்மையானவை மன்னர்களால் உருவாக்கப்படவில்லை என்பதை இங்கு நினைவில் கொள்ளவேண்டும். இதைத் தவிர எளிதில் அழிந்து போகக் கூடிய ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டிருக்க வேண்டும். எனவே, காலக்கணிப்புச் செய்யும்பொழுது அக்காலத்தில் காணப் பட்ட தகவல் தொழில்நுட்ப வளர்ச்சியின் மூலம் எழுத்தறிவுப் பரவலுக்கு ஆகும் காலம் ஆகியவற்றையும் கணக்கில் கொள்ள வேண்டியுள்ளது. இவ்வகைப் பிராமி வரிவடிவங்கள் அண்டை நாடான இலங்கையில் அதிக அளவில் கிடைப்பதாலும் இவ் வரிவடிவம் அந்நாட்டிலேயே முதன்முதலில் தோன்றிப் பின்னர், இந்தியாவிற்குள் பரவியது என்ற கருதுகோளை இலங்கை வாழ் அறிஞர்கள் முன்வைத்துள்ளதால் அவற்றையும் ஓரளவு தமிழகத்துடன் இணைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. அசோகர் கல்வெட்டுகளில் தம்மபாணி என்றழைக்கப்படுவது இலங்கைத் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுகளில் ஈழம் என்றழைக்கப்படுகிறது. இவ்விரண்டும் இலங்கை முழுவதையும் குறிக்கிறதா? அல்லது தம்மபாணி என்பது தென்இலங்கையையும், ஈழம் என்பது

யாழ்வளைகுடாப் பகுதியையும் குறிக்கிறதா? என்பதைப் பார்க்க வேண்டியுள்ளது. காரணம் இலங்கையின் தென் பகுதியில் புத்தமதத்தைச் சார்ந்த பிராகிருத மொழி பயன்படுத்தப்பட்ட ஆயிரத்திற்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் கிடைக்கின்றன. ஆனால், யாழ்ப் பகுதியில் இவை கிடைக்கவில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது. யாழ்ப் பகுதியில் தமிழ்மொழி பேசும் மக்கள் வாழ்ந்தனரா? அல்லது புத்தமதக் கருத்துகள் இப்பகுதியில் வேரூன்றப்படாததால் இங்குக் கல்வெட்டுகள் கிடைக்கவில்லையா? என்பதை எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது. ஆணைக்கோட்டையில் கிடைத்த முத்திரையும், யாழ்ப் பல்கலைக்கழக வரலாற்றாசிரியர் புஷ்பரட்ணம் வெளிக்கொணர்ந்த தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஓடுகளும் இங்குத் தமிழ் புழக்கத்தில் இருந்தன என்பதைக் காட்டுகின்றன. தென்இலங்கையில் தமிழர் வாழ்ந்ததை அங்குக் கிடைக்கும் பிராகிருதக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. ஆயிரத்திற்கும் மேற்பட்ட பிராகிருத மொழி கொண்ட கல்வெட்டுகள் இலங்கையில் காணப்படும்பொழுது இலங்கைக்கு மிக அருகில் அமைந்துள்ள தமிழ்நாட்டில் ஒன்றுகூடக் கிடைக்காததும், அதேபோல் தமிழ்மொழி கொண்ட கல்வெட்டுகள் நூற்றுக்கணக்கில் தமிழகத்தில் கிடைக்கும்பொழுது ஒரு தமிழ்க் கல்வெட்டுக்கூட இலங்கையில் கிடைக்காததும் இவ்விரு நாட்டிலும் அவ்வம்மொழிகள் சிறப்புற்று விளங்கியிருக்க வேண்டும் எனத் தெரிவிக்கின்றன. பிராகிருத மொழியுடைய எழுத்துப் பொறிப்புகள் யாழ் பகுதியில் கிடைக்காது தமிழ்மொழி கொண்ட எழுத்துப் பொறிப்புகள் கிடைப்பதால் யாழ்வளைகுடாப் பகுதியில் தமிழ்மொழி வாழ்ந்திருக்க வேண்டும் என்பதை உணரலாம். மேலும் அப்பகுதி மக்கள் புத்த அல்லது சமண மதத்தைச் சாராதிருந்ததால் அங்குக் குகைகளில் துறவிகளுக்குக் கற்படுக்கை அமைத்துக் கல்வெட்டுப் பொறிக்க வேண்டிய அவசியமில்லாது போய்விட்டது என்று கருதலாம். இவ்வரலாற்றுப் பின்புலத்தின் கீழ் இலங்கையில் கிடைத்த எழுத்துப் பொறிப்புகளை அணுக வேண்டியுள்ளது.

இலங்கைப் பிராமிக் கல்வெட்டுகளின் தந்தை எனக் கருதப்படும் பரன்விதான இலங்கையில் கிடைக்கும் கல்வெட்டுகள் சில அசோகர் காலத்திற்கும் முந்தியவை எனக் கணித்துள்ளார் (Paranavùtana 1970:xxiii). ஆனால், முன்பே குறிப்பிட்டது போல இத்தகைய இலங்கைப் பிராகிருதக்

கல்வெட்டுகள் தமிழகத்தில் கிடைக்கவில்லை என்பதையும், தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுகள் இலங்கையில் கிடைக்கவில்லை என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும் இருப்பினும் இவ்விரு மொழிகளும் தத்தம் நாட்டில் சிறப்புற்று விளங்கின எனக் கொள்ளலாமே தவிர இரு நாட்டிற்குமிடையே தொடர்பு இல்லை எனக் கொள்ள இயலாது. அரிக்கமேடு, அழகன்குளம், கொடுமணல் போன்ற ஊர்களில் இலங்கைப் பிராமிக்கே உரித்தான வரிவடிவங்கள் கிடைப்பதும், ஈழக்குடும்பிகன் எனத் திருப்பரங்குன்றம் கல்வெட்டில் வருவதும், ஈழத்துணவு என்று *பட்டினப்பாலையில்* வருவதும், இலங்கையில் உள்ள காசுகளிலும், கல்வெட்டுகளிலும் தமிழ்ப் பெயர்கள் வருவதும் இருநாட்டிற்கு இடையேயான பண்பாட்டுத் தொடர்பினை வெளிப்படுத்துகின்றன. அண்மையில் அநுராதபுரத்தில் மேற்கொண்ட அகழாய்வின் அடிப்படையில் தரணியகலா (Deraniyagala 1990:149-168), கோனிங்காம் (Coningham 1990:23-48; 1996: 73-97) போன்றோர் அசோகர் காலத்திற்கு முன்பே வணிகர்கள் மூலமாகப் பிராகிருதமும், பிராமி வரிவடிவமும் இலங்கைக்கு வந்துவிட்டன எனவும், இன்னும் சில அறிஞர்கள் பிராமி வரிவடிவம் இலங்கையிலேயே முதலில் தோன்றியது எனவும், பின்னர் இவை இந்தியாவிற்குச் சென்றதாகவும் வாதிடுகின்றனர். இக் கருதுகோளுக்கு மேலும் ஆணித்தரமான தரவுகள் தேவைப்பட்டாலும் இதனை எளிதாக ஒதுக்கிவிட முடியாத அளவிற்குப் பல்வேறு ஊடகங்களின் வழியே தரவுகள் வெளிவந்தவண்ணம் உள்ளன. எனவே, எதிர்காலத்தில் இக்கருதுகோளையும் உன்னிப்பாகப் பார்க்க வேண்டியுள்ளது.

மேற்கூறிய கருத்துகளைப் பார்க்கும்பொழுது சங்க காலத்தில் வழக்கில் இருந்த வரிவடிவத்தின் தோற்றம் குறித்து ஒரு முடிவுக்கு வரவேண்டுமானால் எவ்வித ஐயப்பாட்டிற்கும் இடமளிக்காத திடமான காலவரையறையுடன் கூடிய எழுத்துப் பொறிப்புகள் கிடைக்க வேண்டும் என்பது தெரிகிறது. இருப்பினும் ஐராவதம் மகாதேவன் தமிழ்ப் பிராமிக்கு அளித்துள்ள கி.மு. இரண்டாம் நூற்றாண்டு என்ற கால வரையறையைத் இப்பொழுது கிடைக்கும் தொல்லியல், கல்வெட்டியல், மொழியியல், நாணயவியல் போன்ற தரவுகளின் அடிப்படையில் ஏற்றுக்கொள்ள இயலாத நிலை உள்ளது என்பதையும், கொடுமணலில் கிடைத்த தரவுகளின் அடிப்படையில் இவற்றின் காலத்தை அசோகருக்கும் முன்பாக எடுத்துச் செல்ல வேண்டியுள்ளது என்பதையும் இங்குச் சுட்டிக்

காட்ட வேண்டியுள்ளது. கி.மு.ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழகத்தின் தென்பகுதியில் வாழ்ந்த மக்கள் நுண் கற்கருவிகளைப் பயன்படுத்தும் பண்பாட்டிலும், தமிழகத்தின் வடபகுதியில் வாழ்ந்த மக்கள் புதிய கற்காலப் பண்பாட்டிலும் வாழ்ந்துள்ளனர். இவ்விரு பண்பாடுகளும் இரும்பின் பயன்பாடு காரணமாகக் கி.மு. ஆயிரம் வாக்கில் தமிழகத்தில் ஒரு மிகப் பெரிய பண்பாட்டுப் புரட்சிக்கு வித்திட்டன என்றால் அது மிகையாகாது. இரும்புடன் கருப்பு சிவப்புப் பானை ஓடுகளும், பெருங்கற்படைச் சின்னங்களும், முதுமக்கள் தாழிகளும் தமிழகத்தில் தோன்றிப் பன்முகப் பண்பாட்டு வளர்ச்சிக்கு வித்திட்டன. தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் கள ஆய்வுகள், அகழாய்வுகளில் இருந்து மேற்கூறிய இரும்பு, கருப்பு சிவப்புப் (படம் 14, 15) பானை ஓடுகள், பெருங்கற்படைச் சின்னங்கள், தாழிகள் போன்றவற்றில் எது முதலில் தமிழகத்தில் வேரூன்றியது என்பதை அறியமுடியவில்லை. ஆயினும் இப்பண்பாட்டு எச்சங்களுடன் கிடைக்கும் பானை ஓடுகளில் குறியீடுகள் கிடைப்பதன் மூலம் அக்காலத் தமிழ் மக்கள் சுமார் கி.மு.ஆயிரம் ஆண்டு வாக்கிலேயே ஒருவகையான எழுத்துப் பொறிப்புகளை அல்லது வரிவடிவத்தைத் தமது கருத்துப் பரிமாற்றத்திற்குப் பயன்படுத்தினர் எனலாம் (படம் 16, 17).



படம் 14 கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள்



படம் 15 கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள்



படம் 16 குறியீட்டுடன் கூடிய தாங்கி



படம் 17 குறியீட்டுடன் கூடிய நான்கு கால்கள் கொண்ட சாடிகள்

இம்மக்களே இனக்குழு தோன்றவும், தொழில்நுட்பம் பெருகவும், அதன் மூலம் வெளிநாட்டுடனான வாணிகத் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளவும், தமிழகத்தில் எழுத்தறிவு எழவும், அதன் மூலம் சங்க இலக்கியங்கள் உருவாகவும், இறுதியாக அரசு தோன்றவும் வழிவகை செய்தனர் என்றால் அது மிகையாகாது. சங்க கால எழுச்சிக்கு வித்திட்டவர்கள் அதற்கு முன்பு வாழ்ந்த இம்மக்களே ஆவர்.

இவர்கள் சமண மதம், புத்த மதம், வைதீக மதம் போன்ற உயர் சமய நெறிகளின் தாக்குதலுக்குத் தமது இறுதிக்காலத்தில் அதாவது சுமார் கி.மு.4-5ஆம் நூற்றாண்டில் உள்ளாகினர். இவர்கள் இச்சமய நெறிகளுக்கு உட்பட்ட போதிலும் ,தமது தனித்துவத்தையும் நிலைநிறுத்திக் கொண்டனர். பல்வேறு வகைப்பட்ட பண்பாட்டினை இவர்கள் கடைப்பிடித்த போதிலும் ஒரே வகையான மொழி, வரிவடிவம் என்ற

கட்டமைப்பை உருவாக்கி அதன் மூலம் தமிழ்ச் சமுதாயம் என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொண்டனர். பெருங்கற்படைச் சின்னங்களையும், முதுமக்கள் தாழிகளையும், கருப்பு சிவப்புப் பானை ஓடுகளையும், இரும்பையும் பயன்படுத்திய இம்மக்களே பழந்தமிழ் வரிவடிவத்தின் எழுச்சிக்கும் பரவலுக்கும் காரணமாக இருந்தனர்.

தமிழகத்தில் சுமார் ஐநூறு ஆண்டுகளுக்கும் மேலாக வழக்கில் இருந்த ஒரு வரிவடிவம் அசோகர் காலத்திற்குப் பின்பு சமணர்களால் அல்லது சமண வணிகர்களால் தமிழகத்தில் புகுத்தப்பட்டது போன்ற கருதுகோள்களை உரசிப் பார்க்க வேண்டியுள்ளது. இந்தியாவில் தமிழகத்தில் மட்டுமே காலத்தால் முந்திய சமணக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன என்பதை இங்குக் கூர்ந்து நோக்க வேண்டும். கர்நாடகத்தில் சமணர்களின் சமய மையமாகத் திகழும் சிரவணபெலகோலாவில் ஒரு பிராமிச் சமணக் கல்வெட்டுக்கூடக் கிடைக்கவில்லை என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். கர்நாடகத்திலிருந்து தமிழகத்திற்கு வருகை புரிந்த சமணர்கள் தமிழகத்தில் பிராமி வரிவடிவத்தைக் கொண்டு வந்தனர் எனில் கர்நாடகப் பகுதியில் ஏன் இவர்கள் கல்வெட்டுகளைப் பொறிக்கவில்லை என்பதற்கான காரணத்தை ஆராய வேண்டியுள்ளது. தமிழகத்தில் கிடைக்கும் குகைக் கல்வெட்டுகள்கூடச் சமண சமயத்தின் தத்துவங்களை, அறநெறிகளைப் போதிக்கும் சமணக் கல்வெட்டுகள் அல்ல என்பதும், இக்கல்வெட்டுகள் சமணர்களுக்காக அப்பகுதியில் வாழ்ந்த உயர்குடியினர் அளித்த இடக்கொடை பற்றிய கல்வெட்டுகளே என்பதும் ஈண்டுக் கருத்தில் கொள்ள வேண்டும்.

தமிழகத்தில் கிடைக்கும் தொல்லியல், கல்வெட்டியல், நாணயவியல், மொழியியல் தரவுகளின் அடிப்படையிலும், மண்ணடுக்காய்வின் அடிப்படையிலும், தமிழகத்தில் கிடைக்கின்ற பல்வேறு வகைப்பட்ட பண்பாட்டுக் கூறுகளின் தோற்றம், வளர்ச்சி, பரவல் ஆகியவற்றின் அடிப்படையிலும், குறியீடுகளின் அமைப்பு, எழுதும்முறை, எண்ணிக்கை, பரவல் ஆகியவற்றின் அடிப்படையிலும் தமிழகத்திற்கும் பிற பகுதிகளுக்கும் இடையே காணப்படுகின்ற பண்பாட்டு உறவுகளின் அடிப்படையிலும் தமிழகத்தில் கிடைக்கும் பழந்தமிழ் வரிவடிவங்களான தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுகள் அசோகர் காலத்திற்கும் முற்பட்டவை என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை.

தமிழகத்தில் இதுவரை மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வுகளின் அடிப்படையிலும், கரூர், கொற்கை, அழகன்குளம், உறையூர், அரிக்கமேடு, வல்லம், கொடுமணல், பேரூர், மயிலாடும்பாறை, மாங்குடி, தேரிருவேலி ஆகிய சங்ககால ஊர்களில் மேற்கொண்ட அகழாய்வில் கிடைத்த மண்ணடுக்கு ஆய்வின் அடிப்படையிலும், தமிழகத்தில் காணப்படும் பண்டைய தமிழ்ப் பிராமி வடிவங்களை இன்றைய தரவுகளின் அடிப்படையில் கி.மு.4ஆம் நூற்றாண்டிற்கு முன் எடுத்துச் செல்லலாம். தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்திலும், இலங்கையிலும் அரசு உருவாக்கத்திற்கும், இலக்கியம் செழிப்புறவும், தொழில் நுட்பத்தின் மூலம் சமுதாயம் மேன்மை பெறவும், வெளிநாட்டுடனான உறவுகள் மூலம் வளம் பெருகவும் காரணமாக இருந்த பெருங்கற்படைச் சின்னங்கள் மற்றும் முதுமக்கள் தாழிகள் காணப்படும் இடங்களைத் தெரிவு செய்து பரந்த அளவில் அகழாய்வினை மேற்கொண்டால் அறிஞர்களிடையே இவ்வரிவடிவத்தின் தோற்றம், பரவல் மற்றும் காலம் தொடர்பான கருத்து மோதல்கள் நீக்கப்பட்டுத் தமிழ்ச் சமுதாயம் தொடர்பான கண்ணோட்டம் உலகளவில் மேலும் தெளிவு பெறும்.

# வணிகம்

ஒரு நாட்டின் வளர்ச்சி என்பது அந்நாட்டு மக்களிடையே காணப்படுகின்ற தொழில்நுட்ப ஆற்றல், இயற்கை வளங்களைக் கண்டறிந்து முறையாகப் பயன் படுத்துதல்; கல்வி, வணிகத் தொடர்பு மூலம் பெறப்படுகின்ற பொருளாதார வளர்ச்சி, சமூகக் கட்டமைப்பு, தகவல் தொடர்பு, இணக்கமான சமூகச் சூழல், இயற்கை மாற்றத்திற்குத் தக்கவாறு தம்மை மாற்றிக்கொள்வதில் காட்டும் திறன் போன்ற பல்வேறுபட்ட பண்பாட்டுக் கூறுகளின் அடிப்படையிலேயே அமையும். இத்தகையதொரு வளர்ச்சி நிலையினைச் சங்க காலத்தில் தமிழகம் அடைந்தது என்றால் அது மிகையாகாது. இவ்வுன்னத நிலையை அடைவதற்குக் காரணமாக விளங்கிய பல்வேறு காரணிகளில் சிலவற்றை எடுத்து ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும். தமிழகம் அடைந்த உள்நாட்டு வெளிநாட்டு வணிக வளர்ச்சிக்குப் பல்வேறு தொழில் நுட்பங்களின் தோற்றமும் வளர்ச்சியும் உறுதுணையாக இருந்த போதிலும் அவற்றில் சில மட்டுமே இங்கு ஆய்விற்காக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

சங்க காலத்திற்கு முன்பிருந்த தமிழ் மக்களின் பண்பாட்டு வளர்ச்சியின் வெளிப்பாடாகவே தமிழகம் ஒரு மொழி பேசும் ஒத்த பண்பாட்டுத் தன்மை கொண்ட பண்பாட்டு நிலமாக உருவெடுத்தது என்பதை முந்தைய இயலில் கண்டோம். பண்டைத் தமிழகம் நீண்ட கடற்கரையையும், எண்ணற்ற இயற்கை வளத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்கியதால், அம்மக்கள் வணிகத்திலும் தொழில்நுட்பத்திலும் சிறந்து விளங்கினர் என்பதை அண்மைக் காலத் தொல்லியல், கல்வெட்டியல், நாணயவியல் சான்றுகள் உணர்த்துகின்றன. ஆனால் இவ்வளர்ச்சி நிலையைச் சங்க இலக்கியங்கள் முழுமையாக வெளிப்படுத்தவில்லை. எடுத்துக் காட்டாக, இந்தியாவிலேயே அதிகமான ரோம நாணயங்கள் தமிழகத்தில் குறிப்பாகச் சேரநாட்டில் தான் கிடைத்துள்ளன. ஆனால் சேரர்களின் அரச மரபை எடுத்தியம்பும் *பதிற்றுப்பத்தோ*

அல்லது பிற சங்க இலக்கியங்களோ இதுகுறித்துப் பேசாதது வியப்பளிக்கிறது. யவனர்கள் தமிழகத்திற்குப் பொன் கொண்டு வந்து மிளகு ஏற்றிச் சென்றதைப் '*பொன்னொடு வந்து கறியொடு பெயரும்*' என வியந்து பேசும் இலக்கியம் தமிழர்கள் ரோம நாட்டிற்குச் சென்று தங்கி வணிகம் புரிந்ததைப் பற்றிக் குறிப்பிடுவதில்லை. மேலும் கீழை நாடான தாய்லாந்திற்கும், இலங்கைக்கும் சென்று தங்கி வணிகம் புரிந்தமைக்கான சான்றுகள் அண்மையில் வெளிவந்துள்ளன. இது சங்க இலக்கியம் தொகுக்கப்பட்ட தன்மையின் விளைவால் உருவானது என எண்ண வேண்டியுள்ளது. அதேபோன்று *பதிற்றுப்பத்துக்* குறிப்பிடும் கொடுமணம் என்ற சங்க கால ஊரில் மட்டும் இதுவரை எந்தப் பகுதியிலும் கிடைக்காத அளவிற்குப் பண்டைத் தமிழ் வரிவடிவப் பொறிப்புப் பெற்ற எண்ணற்ற பானை ஓடுகள் கிடைத்துள்ளன. தமிழர்களின் கல்வியறிவைப் பறைசாற்றும் இத்தகைய தரவுகளைச் சங்க இலக்கியம் குறிப்பிடவில்லை. அதேபோல், சங்க காலச் சேரரின் இரண்டாவது தலைநகரமான கரூர் வஞ்சியில் எண்ணற்ற தொல்பொருட்கள் கிடைத்துள்ளன. ரோம நாட்டு வணிகம் குறித்து மிகச் சொற்ப அளவிலேயே செய்திகள் உள்ளன. தமிழ் மன்னர்கள் வெளியிட்டுள்ள நாணயங்கள் பல கிடைத்துள்ள போதிலும் அது குறித்துச் சங்க இலக்கியத்தில் செய்திகள் இல்லை. எனவேதான் சங்க காலத் தமிழகத்தைச் சங்க இலக்கியத்தின் அடிப்படையில் மட்டும் ஆய்வு செய்யாது பல்துறைகளிலும் கிடைக்கும் முதன்மைச் சான்றுகளையும் ஒருமுகப்படுத்தி இங்கு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

சங்கத் தமிழர்கள் இரும்பு மற்றும் எஃகு செய்தல், முத்துக்குளித்தல், அரிய கற்களைக் கொண்டு மணிகள் செய்தல், ஏலக்காய் மற்றும் மிளகு போன்ற வாசனைப் பொருட்களை உற்பத்தி செய்தல் போன்ற தொழில்வள மேம்பாட்டின் காரணமாகவே சங்க காலத் தமிழகத்தின் பொருளாதார நிலை மேம்பட்டது. பண்டைத் துறைமுகங்கள், வணிக மையங்கள் பல நூற்றாண்டுக் காலம் நிலைத்து நின்று தமது பணியைச் செய்துள்ளன என்பதை இவ்விடங்களில் மேற்கொண்ட அகழாய்வுகள் புலப்படுத்துகின்றன. மேலும் இவை பன்னாட்டளவில் ஒருங்கிணைந்த மையங்களாக இயங்கி உள்ளமையும் தெரிகிறது. துறைமுகங்கள், தலைநகரங்கள், வணிக மையங்கள் ஆகியவற்றின் நிலவியல் அமைவிடத்தை நோக்கும்பொழுது அக்காலக்கட்டத்தில் மிகச் சிறந்த வணிகப் பெருவழிகள்

உருவாகிவிட்டன என்பது புலனாகிறது (படம் 18). ஆப்கானிஸ்தான் நாட்டில் மட்டுமே கிடைக்கும் வைடூரியங்களும், குஜராத் மற்றும் மகாராட்டிர மாநிலத்தில் மட்டுமே கிடைக்கும் சூதுபவளங்களும், பிராகிருத மொழிக்குரிய சொற்களைத் தாங்கி நிற்கின்ற பானை ஓடுகளும், வடநாட்டிற்கே உரித்தான வெள்ளி முத்திரை நாணயங்களும், மெருகேற்றப்பட்ட வட இந்தியக் கருப்புப் பானை ஓடுகளும், ரோம நாணயங்களும், ஆபரணங்களும் தமிழகத்தில் பரவலாகக் கிடைப்பது இவர்கள் இந்தியாவின் பிற பகுதிகளுடனும் ரோமநாட்டுடனும், கீழை நாடான தாய்லாந்துடனும், இலங்கையுடனும் மேற்கொண்ட பன்னாட்டளவிலான வணிகத்தைப் புலப்படுத்துகின்றன.




படம் 18 சங்ககாலத் துறைமுகங்களும் நகரங்களும்

பொதுவாக வணிகம் அரசு உருவாக்கத்திற்கு ஒரு காரணியாக விளங்கியது. அதேபோன்று வணிக வளர்ச்சியும் நிலையான ஆதரவான அரசின் மூலமே ஏற்படுகிறது என்பதையும் மறுக்க இயலாது. சங்க காலத்தில் தமிழகம் பன்னாட்டு அளவில் மேற்கொண்டிருந்த வணிகத்தை முதலில் பார்ப்போம்.

## மேலைநாட்டுடனான வணிகம்

தமிழகத்திற்கும் மத்திய தரைக்கடல் பகுதிகளுக்கும் இடையேயான வணிகத் தொடர்பு அகஸ்டஸ் காலத்திற்கு முன்பிருந்தே தொடங்கிவிட்டது என்பதை இலட்சத்தீவிலும் (Sastri 1992:79), கோவைக்கு அருகில் உள்ள கள்ளக்கிணறு (Raman 1992:21) என்ற இடத்திலும், திருப்பூரிலும் கிடைத்த ரோம குடியரசு நாணயங்கள் வெளிப்படுத்துகின்றன. தமிழகத்தில் மேலைக் கடற்கரையில் அமைந்துள்ள முசிறி, தொண்டி, நீர்க்குன்றம் (Nelcynda), வைக்கரை (Bakare) போன்ற துறைமுகங்களின் வழி மத்தியதரைக்கடல் நாடுகளுக்கு முத்துகளும், அரிய கல்மணிகளும், எஃகும், அகில், ஏலக்காய், மிளகு போன்ற வாசனைப் பொருட்களும், மலைவளப் பொருட்களான தேக்கு, சந்தனம், தந்தம் போன்றவையும் ஏற்றுமதி செய்யப்பட்டன. இவை பெரும்பாலும் சேர நாட்டிலிருந்தே ஏற்றுமதி செய்யப்பட்டன என்பதை முன்பே குறிப்பிட்டதுபோல் இந்தியாவில் கிடைக்கும் மொத்த ரோம நாணயங்களில் 90 விழுக்காட்டிற்கும் மேலான நாணயங்கள் இப்பகுதியிலேயே கிடைக்கின்றன என்பதைக் கொண்டு உய்த்துணரலாம். குறிப்பாகச் சேரரின் வணிக நகரமான கொடுமணலைச் சுற்றியுள்ள (காங்கயம்) பகுதிகளில் ஏராளமான மணிக்கற்கள் கிடைக்கின்றன.

கொடுமணலுக்கு 5 கல் தொலைவில் காங்கேயத்தில் இருந்து திருப்பூர் செல்லும் சாலையில் அமைந்துள்ள படியூரில் விளைந்த பச்சைக்கல் (Beryl) ரோம நாட்டினரால் பெரிதும் விரும்பப்பட்டது என்பதைத் தாலமி கூற்றின் மூலம் உணரலாம். பச்சை நிறத்தில் காணப்படும் அரிய மணிக்கல்லைக் குறிக்கும் பெரில் என்ற ஆங்கிலச் சொல் எங்ஙனம் தமிழ் மொழியிலிருந்து உருவானது என்பதைப் பிஸ்வாஸ் அவர்கள் தமது நூலில் அழகுபட உரைத்துள்ளார்கள் (Biswas 1994:139-154). கி.மு.5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பாணினி தமது

அஷ்டாத்தியாயத்தில் இந்த அரிய மணிக்கல் விதுரா நாட்டிலிருந்து வந்ததாகக் குறிப்பிடுகிறார். அதனால் இக்கல் வைடூரியம் அல்லது விதுரத்ஷா என்று அழைக்கப்பட்டது. பாணினிக்குப் பின்னர் வந்த பதஞ்சலி தமது *பாஷ்யத்தில்* (உரையில்) விதுரா என்பது மணிகள் செய்யும் இடத்தைக் குறிப்பதாகவும், அரிய மணிக்கற்கள் வலவய (Valavaya) என்ற மலையிலிருந்து கிடைப்பதாகவும் கூறுகிறார். இவ்வகைக் கற்கள் இந்தியாவில் தமிழகத்தில் மட்டுமே அதுவும் குறிப்பாகத் திருப்பூருக்கும் கரூருக்கும் இடையில் அமைந்துள்ள கொடுமணல், படியூர், காங்கயம் ஆகியவற்றின் சுற்றுப் பகுதிகளில் மட்டுமே கிடைப்பதால் பாணினி, பதஞ்சலியின் குறிப்புகள் இப்பகுதியைச் சுட்டுவதாகவே பிஸ்வாஸ் அவர்கள் எண்ணுகிறார். புத்ததத்தர் இந்தப் பச்சைக்கல் (Beryl) கொங்காவளி காசி மந்த என்ற மலைப்பகுதியில் கிடைப்பதாகக் குறிப்பிடுகிறார். இது கொங்குப் பகுதியைக் குறிக்கிறது என்பதில் எவ்வித ஐயமுமில்லை. ஆகவேதான் பாலி மொழியில் இக்கல்லைக் குறிக்கப் பயன்படுத்தும் சொல்லான *வேளூரியா* என்பது திராவிடச் சொல் என்றும், இது வேள் ஆட்சி புரியும் ஊரிலிருந்து வந்ததால் *வேளூரியா* எனப் பெயர் பெற்றிருக்க வேண்டும் என ஆல்பெர்ட் மாஸ்டர் கருதுகிறார். இந்தியாவில் கிடைக்கும் அரிய மணிக்கற்கள் தொடர்பாக ஆய்வு மேற்கொண்ட பிஸ்வாஸ் அவர்கள் பாலி மொழியில் சரியாக வேளூரியா என்றழைக்கப்பட்ட சொல் சமஸ்கிருதத்தில் வைடூரியமாக மாறிக் கிரேக்கத்தில் பெரில்லோஸ் (Beryllos) என்றும், லத்தீன் மொழியில் பெரில்லஸ் (Beryllus) என்றும் பெயர் பெற்று இறுதியில் பெரில் (Beryl) என ஆங்கிலத்தில் இறுதி வடிவம் பெற்றதாகப் பிஸ்வாஸ் தமது ஆய்வில் குறிப்பிட்டுள்ளார் (Biswas 1994:139-154). இச்சொல் தோற்றத்தின் தொடர்பான ஆய்வு இவ்வரிய மணிக்கல் எவ்வளவு தூரம் மேலை நாட்டுடனான வணிகத்தில் தாக்கத்தை ஏற்படுத்தி யிருந்தது என்பதைப் புலப்படுத்துகிறது.

கொங்கு நாட்டுப் பகுதியில் குறிப்பாக வெள்ளலூர், கொடுமணல், கரூர் போன்ற பகுதிகளில் கிடைத்த ரோம நாணயங்கள், ஆபரணங்கள், சுடுமண் பொம்மைகள், ரௌலெட்டெட் (rouletted) என்றழைக்கப்படும் ரோம நாட்டுப் பானை ஓடுகள் குறித்து எண்ணற்ற செய்திகள் வந்துள்ளன. இவற்றில் அண்மையில் தமிழகத்திற்கு அப்பால் செங்கடலில் அமைந்துள்ள குவாசிர்-அல்-காதிம், பெர்னிகே ஆகிய இரு

இடங்களில் கிடைத்த சான்றுகளும், வியன்னா அருங்காட்சியகத்தில் கிடைத்த வணிக ஒப்பந்தம் தொடர்பான தாள் ஆவணமும் மட்டுமே இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளன. வியன்னா அருங்காட்சியகத்தில் உள்ள வணிக ஒப்பந்தம் தமிழகம் மேலை நாடுகளுடன் கொண்ட வணிகத்தின் தன்மையையும், ஆழத்தையும் புலப்படுத்துவதால் அதற்கு அதிக முக்கியத்துவம் இங்கு அளிக்கப்படுகிறது.



(அ)



(ஆ)



(இ)

படம் 19 அ, ஆ குவாசிர்-அல்-காதிம் இ. பெரனிகே

குவாசிர்-அல்-காதிம் என்ற இடத்தில் கிடைத்த பானை ஒன்றில் தமிழ்ப் பிராமி வரிவடிவத்தில் கணன் (கண்ணன்), சாதன் (சாத்தன்) என்ற இரு தமிழ்ப் பெயர்கள் பொறித்த பானை ஓடுகள் கிடைத்தன. பெர்னிகே துறைமுகத்தில் கோற்பூமான் எனப் பெயர் பொறித்த பானை ஓடு கிடைத்துள்ளது (படம் 19). இப்பெயருக்கு அடுத்து ஒரு குறியீடு இருப்பது ஒரு சிறப்பு அம்சமாகும். இப்பானை ஓடு கி.பி.40ஆம் ஆண்டுக்குரியது என்று காலக்கணிப்புச் செய்யப்பட்டுள்ளதால் இது மேலும் முக்கியத்துவம் பெறுகிறது. மேலும் அண்மையில் தமிழ்ப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறைக்கு வருகைபுரிந்த ரோபர்ட் தோமரா அவர்கள் பெர்னிகே துறைமுகத்தில் பானைகளில் சேமித்து வைக்கப்படிருந்த கருப்பு மிளகு தொடர்பான செய்திகளைத் தந்துதவினார். இவர் அங்கு நடைபெற்ற ஆய்வில் கலந்து கொண்டவர் என்பதைக் குறிப்பிட வேண்டும். மேற்கூறிய சான்றுகள் அனைத்தும் தமிழர்களே நேரடியாக ரோம நாட்டுடனான வணிகத்தில் ஈடுபட்டிருந்தனர் என்பதையும் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அங்குச் சென்று வணிகம் புரிந்துள்ளனர் என்பதையும் உணர்த்துகின்றன. ஆயினும் வணிகத்தின் அளவினையும், தன்மையினையும் உணர்ந்துகொள்ள இத்தரவுகள் போதுமானதாக இல்லை. இவற்றை நிறைவு செய்யும் வகையில் கிடைத்த மிகப் பெருஞ் சான்றே முசிறி-அலெக்ஸாண்டிரியா வணிக ஒப்பந்தம் ஆகும்.

## முசிறி-அலெக்ஸாண்டிரியா வணிக ஒப்பந்தம்

ஆஸ்டிரியா நாட்டுத் தலைநகரமான வியன்னாவில் அமைந்துள்ள அருங்காட்சியகத்தில் பேபிரஸ் (papyrus) தாளில் எழுதப்பட்ட அரிய கையெழுத்துச் சுவடி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது (Harraur and Sijpesteiju 1985:124-155; Sidebotham 1989:195-233; Casson 2001:228-243). இச் சுவடி பேரியாற்று முகத்துவாரத்தில் அமைந்துள்ள சேரநாட்டுத் துறைமுகமான முசிறியில் வாழ்ந்த தமிழ் வணிகன் ஒருவனுக்கும் எகிப்து நாட்டில் நைல் நதி ஆற்றின் முகத்துவாரத்தில் அமைந்துள்ள அலெக்ஸாண்டிரியா எனப்படும் ரோம நாட்டுத் துறைமுகத்தில் வாழ்ந்த கிரேக்க வணிகன் ஒருவனுக்கும் கி.பி.2ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் (கி.பி.150) ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட வணிக ஒப்பந்தத்தை விவரிக்கிறது (படம் 20, 21).




படம் 20 முசிறி - அலெக்ஸாண்டிரியா வணிக ஒப்பந்தம்

1 → . . . ο μένων σου ἑτέρων ἐπ[ι]τρόπων ἢ φροντιστῶν καὶ στήσας
2 [δώσω τ]ῷ σῷ καμηλείτηι ἄλλα (τάλαντα) ρο (δραχμὰς) ν πρὸς
ἐπίθεσιν τῆς εἰς Κόπτον
3 [εἰσόδο]υ καὶ ἀνοίσω διὰ τοῦ ὄρους μετὰ παραφυλακῆς καὶ ἀσφαλείας
4 [εἰς τὰ]ς ἐπὶ Κόπτου δημοσίας παραλημπτικὰς ἀποθήκας καὶ ποι-
5 [ήσω ὑ]πὸ τὴν σὴν ἢ τῶν σῶν ἐπιτρόπων ἢ τοῦ παρόντος αὐτῶν
6 [ἐξουσία]ν καὶ σφραγεῖδα μέχρι ποταμοῦ ἐμβολῆς καὶ ἐμβαλοῦμαι
7 [τῶι δέ]οντι καιρῶι εἰς ποταμὸν ἀσφαλὲς πλοῖον καὶ κατοίσω εἰς τὴν
8 [ἐν Ἀλεξ]ανδρείᾳ τῆς τετάρτης παραλημπτικὴν ἀποθήκην καὶ ὁ-
9 [μοίω]ς ποιήσω ὑπὸ τὴν σὴν ἢ τῶν σῶν ἐξουσίαν καὶ σφραγεῖδα. ταῖς
10 [τοῦ πλο]ίου ἀπὸ τοῦ νῦν μέχρι τεταρτολογίας δαπάναις πάσαις καὶ φο-
11 [ρέτρου] ὄρους καὶ ναύλων ποταμίταις καὶ τῶν ἄλλων κατὰ μέρος
ἀνα-
12 [λωμά]των πρὸς <τῶν — — — ὄντων. — — — πρὸς> τὸ ἐνστάντος τοῦ ἐν
ταῖς κατὰ Μουζεῖριν τοῦ δα-
13 [νείου σ]υνγραφαῖς τῆς ἀποδόσεως ὡρισμένου χρόνου ἐὰν μὴ δικαί-
14 [ως τότ]ε χρεολυτῶ τὸ προκείμενον ἐν ἐμοὶ δάνειον τότε εἶναι
15 [πρὸς σ]ὲ καὶ τοὺς σοὺς ἐπιτρόπους ἢ φροντιστὰς τὴν ἐγλογὴν καὶ
ὁλο-
16 [σχερῆ] ἐξουσίαν ὡς ἐὰν αἱρῆσθε ποιήσασθαι τὰ τῆς πράξεως χωρὶς
17 [προσβ]ολῆς καὶ προσκρίσεως κρατεῖν τε καὶ κυριεύειν τὴν προκ[ει-]
18 [μένη]ν ὑποθήκην καὶ τεταρτολογεῖν καὶ τὰ λοιπὰ ἐσόμενα μέρη
19 [τρία μ]εταφέρειν οὗ ἐὰν αἱρῆσθε καὶ πωλεῖν καὶ μεθυποτίθεσθαι
20 [καὶ] ἑτ[έ]ρωι παραχωρεῖν ὡς ἐὰν αἱρῆσθε καὶ τὰ καθ' ἑαυτὴν
διοικονο-
21 [με]ῖσθαι καθ' ὃν ἐὰν βούλησθε τρόπον καὶ ἑαυτῶι ὠνεῖσθαι τῆς
ἐπὶ 'τοῦ'
22 καιροῦ φανησομένης τιμῆς καὶ ἐκπρού[σ]ν καὶ ἐνλογεῖν τὰ πεσούμενα
23 [τοῦ προγεγραμμέν]ου δανείου. τῆς πίστεως τῶν πεσουμένων
24 [οὔσης π]ερὶ σὲ καὶ τοὺς ἐπιτρόπους ἢ φροντιστάς, ὄντων ἡμῶν
ἀσυκοφαν-
25 [τήτ]ων κατὰ πάντα τρόπον. τοῦ δὲ περὶ τὴν ἐνθήκην ἐνλείμματός
26 [τ]ε καὶ πλεονάσματος πρὸς ἐμὲ τὸν δεδανεισμένον καὶ ὑποτιθει-

படம் 21 முசிறி - அலெக்ஸாண்ட்ரியா வணிக ஒப்பந்தம்

இச்சுவடி கிரேக்க மொழியில் இருபுறமும் எழுதப்பட்டுள்ளது. இதில் தமிழகத்தைச் சார்ந்த வணிகன் கையெழுத்திட்டுள்ளதால் அவ்வணிகன் கிரேக்க மொழியை அறிந்திருக்க வேண்டும் என்பதை ஊகிக்க முடிகிறது. வணிகரின் பெயர் வரும் இடம் சிதைந்து போய்விட்டமை மிகவும் துரதிர்ஷ்ட வசமானது. பெயர்கள் கிடைத்திருந்தால் அக்கால வணிகச் சமூகத்தை மீள் உருவாக்கம் செய்ய ஏதுவாக இருந்திருக்கும். இந்த அரிய ஆவணத்தை ஆராய்ந்த எச். ஹராவர் (H.Harvauer), சிஜ்பெஸ்தேஜின் (P.Sijpesteijn), தூர் (G.Thur), கேஸன் (L.Casson) போன்றோர் இவை இரண்டு ஆவணங்களாக இருந்திருக்க வேண்டும் எனவும் அதில் தற்பொழுது ஓர் ஆவணம் மட்டுமே கிடைத்துள்ளது எனக் கருதுகின்றனர். முதல் ஆவணம் அநேகமாகத் தமிழ் வணிகனுக்கும், கப்பல் சொந்தக்காரனுக்கும் இடையே முசிறித் துறைமுகத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும் எனவும், இதில் கப்பல் சொந்தக்காரர் வணிகனுடன் ஏற்றுமதிப் பொருட்களைக் காப்பீட்டாக வைத்துச் செய்து கொண்ட கடன் ஒப்பந்தமாக இருக்க வேண்டும் எனவும் கேஸன் கருதுகிறார் (Casson 2001:228-243). இந்தக் கடன் ஒப்பந்தத்தின்படி, க்ப்பலின் சொந்தக்காரர் ஏற்றுமதிப் பொருட்கள் அலெக்ஸாண்டிரியாவை அடையும் வரை வணிகனின் முத்திரையைப் பயன்படுத்திக் கொள்ளும் உரிமையைப் பெறுகிறார்.

இப்பொழுது கிடைத்துள்ள இரண்டாவது ஆவணம் செங்கடலில் அமைந்துள்ள பெர்னிகே அல்லது மயோஸ் கார்மோஸ் (Myos Hormas) என்ற துறைமுகப் பகுதியில் ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும். இந்த ஆவணம் ஏற்றுமதிப் பொருட்கள் மத்தியதரைக்கடல் பகுதியில் நைல் நதி முகத்துவாரத்தில் அமைந்துள்ள அலெக்ஸாண்டிரியா நகரை அடைவது வரை ஏற்றுமதிப் பொருட்களுக்கு அளிக்கப்பட வேண்டிய பாதுகாப்புக் குறித்து முன்பக்கத்திலும், அப்பொருட்களின் அளவு குறித்துப் பின்பக்கத்திலும் எழுதப்பட்டுள்ளது. இந்த ஆவணம் ஏற்றுமதிப் பொருட்கள் செங்கடல் துறைமுகத்தில் வந்திறங்கியவுடன் ஏற்படுத்தப் பட்டிருக்க வேண்டும் எனக் கேஸன் கருதுகிறார். காரணம், இவ்வொப்பந்தப் பொருட்கள் செங்கடல் துறைமுகத்திலிருந்து கழுதையின் மேல் ஏற்றப்பட்டுக் கிழக்குச் சஹாரா பாலைவனத்தின் வழியாக நைல் நதிக்கரையில் அமைந்துள்ள பண்டைய கோபடஸ் (Ancient Copotos) துறைமுகத்தை

அடைவதையும், பின்னர் அவை படகுகளில் ஏற்றப்பட்டு நைல் நதி வழியே அந்நதியின் முகத்துவாரத்தில் அமைந்துள்ள அலெக்ஸாண்டிரியா துறைமுகத்தை அடைவதையும் பின்னர் அங்குச் சுங்கவரி செலுத்தப்பட்டவுடன் இப்பொருட்களின் பாதுகாப்புக் குறித்த ஒப்பந்தம் முடிவுக்கு வருவதாக இவ்வொப்பந்தம் தெரிவிக்கிறது. அலெக்ஸாண்டிரியாவில் இருந்து மத்தியதரைக்கடல் வழியாக ரோமநாட்டை இப்பொருட்கள் அடைவதற்கு மேற்கொள்ள வேண்டிய நடைமுறைகளுக்காக வேறொரு ஒப்பந்தம் ஏற்பட்டு இருக்க வேண்டும். பொருட்கள் முசிறியிலிருந்து செங்கடல் துறைமுகத்தை நாற்பது நாட்களுக்குள் அடைந்துவிடும். இதற்கு அரேபியக் கடலில் அடிக்கும் பருவக்காற்றே பெரிதும் உதவி புரிந்துள்ளது என்பதைப் பல கடலியல் நிபுணர்கள் ஏற்கெனவே கருத்துத் தெரிவித்துள்ளனர். ஆண்டுதோறும் ஐப்பசி மாதத்தில் தொடங்கி வைகாசி மாதத்தில் முடிவுக்கு வரும் இவ்வணிகம் தமிழகத்திற்குப் பெரும் பொருளை ஈட்டித்தந்தது என்றால் மிகையாகாது.

இந்த ஆவணத்தின் பின்பக்கத்தில் ஏற்றுமதி செய்யப்பட்ட ஆறு பொதிகளைப் பற்றிக் குறிப்பு இருந்தாலும் மூன்று பொதிகளில் காணப்படும் பொருட்களின் தன்மை குறித்தே செய்திகள் கிடைக்கின்றன. மற்ற மூன்று பொதிகள் குறித்த தகவல்கள் சிதைந்து போயின. இப்பொருட்கள் ஹெர்மபோலன் (Hermapollon) என்று பெயரிடப்பட்ட கப்பலில் ஏற்றப்பட்டுள்ளன. இந்த ஆறு பொதிகளின் எடை *1154* தோலனும் (talents) *2852* திரமமும் (drachmas) ஆகும். இந்தப் பொருட்களின் மதிப்பானது அலெக்ஸாண்டிரியாவில் ஒரு நீர்வழிச் சாலையை (aqueduct) அமைப்பதற்கு ஈடானது என்ற குறிப்பு வருவதால் இதன் மதிப்பு ஏழு மில்லியன் *திரமம்* எனக் கணக்கிடப்பட்டுள்ளது. காரணம், இத்தகையதொரு நீர்வழிச் சாலையை அமைக்க ஹைரோடஸ் அதிகஸ் (Herodes Atticus) *4* மில்லியன் திரமங்களும் ஹட்ரியன் (Hadrian) *3* மில்லியன் திரமங்களும் அளித்துள்ளமை மூலம் புலனாகிறது.

ஒரு திரமம் (drachmas) என்பது *65* குன்றிமணி (grains) களுக்கு ஈடானது. ஒரு குன்றிமணி என்பது *0.0648* கிராம் வெள்ளிக்கு ஈடானது. எனவே *1* திரமம் என்பது *4.212* கிராம் ஆகும். 7 மில்லியன் திரமம் என்றால் *29484000* கிராம் வெள்ளியின் எடைக்கு ஈடானது *(7,000,000X4.212=29484000).* வெள்ளியின் விலை ரூ.*10* எனக் கொண்டால் ஒரு கிராம் வெள்ளியின் விலை ரூ.*10* எனக் கொண்டால்

இவற்றின் மதிப்பு ரூ.294,840,000 ஆக உருவெடுக்கிறது. அதாவது ஏறக்குறைய தற்போதைய நிலவரப்படி 30 கோடி ரூபாய்க்கு ஈடானது. இது ஹெர்மபோலன் என்ற சாதாரணக் கப்பலில் ஏற்றப்பட்ட பொருட்களின் மதிப்பாகும். இதைவிடப் பெரிய ரோமானியக் கப்பல்கள் இங்கு வந்து போயுள்ளன. மேலும் மேற்கூறிய தொகையானது ஒரு கப்பலில் ஒரு வணிகனுக்குச் சொந்தமான பொருட்களுக்குரியதாகும். இதுபோல் பல வணிகர்களுக்குரிய பொருட்கள் ஒரு கப்பலில் ஏற்றப்படும். ஒரு கப்பலில் ஏற்றப்படும் அனைத்து வணிகர்களின் ஒட்டு மொத்தப் பொருட்களின் மதிப்பைக் கணக்கிட்டுப் பார்க்கும் பொழுது மலைப்பாக உள்ளது.

இத்துணைப் பொருட்கள் சேர நாட்டில் இருந்து ரோம நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட போதிலும் இதற்கு ஈடான பொருட்கள் ரோம நாட்டிலிருந்து தமிழகத்திற்கு வரவில்லை என்பதையே பிளினியின் குறிப்பும், டைபீரியஸின் இயலாமையால் வெளிப்பட்ட சொற்களும் குறிப்பிடுகின்றன. பிளினி ஒரு ஆண்டில் மட்டும் 100 மில்லியன் செஸஸ்டரசஸ்க்கு (Sesterces) மேலான தொகையை இந்தியர், சேரர், அரேபியர்கள் விழுங்கி விடுவதாகக் குறிப்பிடுகிறார் (Pliny XII-84; Warmington 1995:274). இதில் இந்தியாவின் பிற பகுதிகளில் இருந்துவரும் அனைத்து வணிகர்களை ஒன்றாகவும், சேரநாட்டு வணிகர்களைத் தனியாகவும் பிளினி குறிப்பிடுவதால் மேற்குறிப்பிட்ட 100 மில்லியன் செஸஸ்டரசஸ் தொகையில் பெரும் பங்கைச் சேர வணிகர்கள் ஈட்டியிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

ரோம மன்னனான டைபீரியஸ் ரோம நாட்டு மக்கள் ஆடம்பரப் பொருட்களின் மேல் கொண்ட மோகத்தால் ரோமநாட்டுச் செல்வம் அந்நிய நாட்டிற்குப் போவதாகவும் இதனால் ரோம நாட்டிற்குப் பெருத்த நஷ்டம் ஏற்படுவதாகவும் தமது நாட்டு ஆட்சி மன்றமான செனட்டில் அறிவிப்புச் செய்கிறார். பிளினி நூறு மடங்கு விலையைக் கொடுத்துப் பொருட்களை வாங்குவதாகக் குறிப்பிடுகிறார். மேற்கூறிய வணிகம் தொடர்பான கருத்துகள் ரோமப் பேரரசில் தமிழக வணிகர்கள் ஏற்படுத்திய தாக்கதைப் புலப்படுத்துகின்றன. ஆவணத்தில் காணப்படும் பொருட்களும் அவற்றின் எடை, மதிப்புத் தொடர்பான குறிப்புகளும் மேற்கூறிய செய்திகளை மெய்ப்பிக்கின்ற வகையிலேயே அமைகின்றன. இதை ஆய்வு செய்த கேஸன் இப்பொருட்களின் மதிப்பு நைல் நதியின்

பாசனப்பிடிப்புப் பகுதியில் 2400 ஏக்கர் வளமான நிலத்தை வாங்குவதற்கு ஈடானது என்று குறிப்பிடுவது மூலம் ஒரு கப்பலில் ஒரு வணிகன் பெற்றிருந்த பொருட்களின் தொகை மதிப்புப் புலனாகிறது. இது போன்று பல கப்பல்களில் பல வணிகர்களின் பொருட்களை ஏற்றிச் சென்றிருக்க வேண்டும் என்பதும் அவற்றின் மூலம் பெற்ற செல்வம் தமிழகத்தின் எழுச்சிக்குப் பெருமளவில் உதவிபுரிந்திருக்க வேண்டும் என்பதும் புலனாகிறது.

சேரநாட்டில் எயல் (Eyyal), வேலந்தாவளம், வெள்ளலூர், சூலூர், கொடுமணல், கரூர் எனப் பண்டைய வணிகப் பெருவழிகளில் கிடைத்த ரோம நாட்டு ஆபரணங்களும், நாணயங்களும் அரிக்கமேட்டில் கிடைத்த அரிடைன், ரௌலெட்டட் பானை ஒடுகளும், ஆம்போரே என்றழைக்கப்படும் மதுச்சாடிகளும், அழகன்குளத்தில் மண்தட்டில் கீறப்பட்ட ரோம் கப்பலின் உருவமும் (படம் 22), குவாசிர்-அல்-காதிம், பெர்னிகேயில் கிடைத்த தமிழ்ப் பிராமி எழுத்துப் பொறிப்புப் பெற்ற பானை ஒடுகளும், கருமிளகும் தமிழர்கள் மேலைநாட்டுடன் கொண்ட தொடர்பினைப் பறைசாற்றுவனவாக அமைகின்றன ( Kasinathan 1995; Suresh 1992).



படம் 22 அழகன்குளம் : மண்தட்டில் ரோம் கப்பலின் கீறல் உருவம்

அண்மையில் கேரளா மாநிலத் தொல்லியலார் பெரியார் நதியின் தென் கரையில் பட்டினம் என்றழைக்கப்படும் ஊரில் எண்ணற்ற தொல்பொருட்களைக் குறிப்பாக ரோம நாட்டுடனான உறவினை வெளிப்படுத்தும் தொல்பொருட்களான ஆம்போரா என்றழைக்கப்படும் மதுச்சாடி, ரௌலட்டெட் பானை ஓடுகள் முதலியவற்றை அகழாய்வு மூலம் வெளிக்கொணர்ந்துள்ளனர். இதன்மூலம் தொல்லியலார் கண்களில் படாமல் இருந்த முசிறித் துறைமுகம் வெளிச்சத்திற்கு வந்துள்ளது. எதிர்காலங்களில் இவ்விடங்களில் மேற்கொள்ளப்படும் அகழாய்வு முசிறித் துறைமுகத்தின் பன்முகத் தன்மையைப் பறைசாற்றும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

## இலங்கை நாட்டுடனான வணிகத் தொடர்பு

இந்தியாவும் இலங்கையும் பல்லாண்டுகளாக ஒத்த பண்பாடுடைய நாடுகளாகக் காட்சியளிக்கின்றன. தமிழகமும் இலங்கையும் நிலவியல் அமைப்பில் மிக அருகருகே அமைந்துள்ள காரணத்தால் இப்பண்பாட்டுத் தாக்கம் மிக வெளிப்படையாகத் தெரிகிறது. அண்மைக் காலங்களில் இலங்கையிலும், தமிழகத்திலும் வெளிக் கொணரப்பட்ட கல்வெட்டியல், நாணயவியல், தொல்லியல் சான்றுகள் இவ்விரு நாடுகளிடையே இருந்த இணக்கமான சூழலை, ஒத்த பண்பாட்டை வெளிக்காட்டுகின்றன. கி.மு.5000 முதற்கொண்டே இரு நாடுகளுக்கிடையே தொடர்பு ஏற்பட்டுவிட்டது என்பதை ஒரே மாதிரியான தொழில்நுட்பத்தையும் அமைப்பையும் கொண்ட நுண்கற் கருவிகள் தமிழகத்தின் தேரிப் பகுதிகளிலும், இலங்கையிலும் கிடைப்பதன் மூலம் அறியலாம் என இலங்கைத் தொல்லியல் அறிஞர் தெரினிய கலா தெரிவிக்கிறார் (Deraniyagala 1992). நுண்ணிய கற்கருவிக் காலத்தில் தொடங்கிய இத்தொடர்பு பெருங்கற்படைப் பண்பாட்டுக் காலத்தில் வலுப்பெற்றது என்று செனவிரத்னே கூறுகிறார் (Seneviratne 1984:203-307). இலங்கையின் வரலாற்றிற்கு அல்லது பண்பாட்டின் எழுச்சிக்கு வித்திட்டதாகக் கருதப்படும் இளவரசன் விஜயன் தமது காலத்தில் பாண்டிய நாட்டிற்கு வருகைபுரிந்து பாண்டியன் மகளை மணந்து அதன் மூலம் பெற்ற படைபலத்தின் காரணமாக இலங்கையில் ஆட்சியை நிறுவியதாக ஜாதகக் கதைகள் கூறுகின்றன. இது இவ்விரு நாடுகளுக்கிடையே காணப்படும் தொடர்பைப் பறைசாற்றுகிறது.

இந்தியப் பண்பாட்டுத் தாக்கத்தால் இலங்கையில் ஏற்பட்ட பௌத்த மதப் பரவலும், ஒத்த பிராமி வரிவடிவத்தின் பயன்பாடும், பெருங்கற்படைச் சின்னங்களும், பானை ஓடுகளும், நாணயங்களும் இதற்கு மேலும் வலுவூட்டுகின்றன. அண்மையில் அநுராதபுரம் (Coningham 1990; 1991; Coningham and Allchin 1992; Deraniyagala 1972; 1986; 1990), பொம்பரிப்பு (Begley 1981), இபன்கட்டுவா (Bandaranayake 1992), மாந்தை (Carswell and Prickett 1984), கந்தரோடை (Orton 1993), மஹாகாமா (Parker 1909), ரிதிய காமா (Bopearachchi 1996:64-65) போன்ற இடங்களில் மேற்கொண்ட அகழாய்வுகளில் கிடைத்த தொல்லியல் சான்றுகள் இதனை மேலும் உறுதிசெய்கின்றன *(படம் 23).*




**படம் 23 இலங்கையில் தொல்லியல்சார் இடங்கள்**

கந்தரோடையில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் தமிழக அகழாய்வுகளில் வெளிப்படும் பண்பாட்டுக் கூறுகள் போன்றே கருப்பு சிவப்புப் பானை ஓடுகளைத் தொடர்ந்து ரௌலெட்டெட் பானை ஓடுகள் கிடைக்கின்றன (Begley 1973). அரிக்கமேடு, காவேரிப்பட்டினம், அழகன்குளம், கொடுமணல் போன்ற ஊர்களில் இலங்கைக்கே உரித்தான பிராகிருதச் சொற்களைத் தாங்கி நிற்கின்ற பிராமி வரிவடிவப் பானை ஓட்டுக் கீறல்கள் கிடைத்துள்ளன (Mahadevan 1994:1-26; 1995:55-65). மேலும் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டில் காணப்படும் குறியீட்டுக் கீறல்களும் இவ்விரு நாடுகளுக்கிடையேயான உறவு வரலாற்றுத் தொடக்கக் காலத்தில் வலுப்பெற்று விளங்கி உள்ளதைக் காட்டுகின்றன. இத்தகைய உறவுக்குத் தமிழகத்தின் கீழைக் கடற்கரையில் அமைந்திருந்த துறைமுகப் பட்டினங்களான வெளியன் வேண்மானின் வீரைப்பட்டினமும், சோழனின் புகார்ப்பட்டினமும், பாண்டியனின் கொற்கைப் பட்டினமும், இலங்கையின் மேலைக் கடற்கரையில் அமைந்திருந்த மாந்தையும், மகாகாமும் பெரும் பங்காற்றின என்றால் அது மிகையாகாது. இந்தப் பண்பாட்டுப் பரவலுக்குப் பெரிதும் துணை புரிந்தவர்கள் வணிகர்களே எனலாம்.

அசோக மன்னனே இலங்கையில் பிராமி வரிவடிவம் வழக்கிற்கு வரக் காரணமாக இருந்தான் என இதுவரை எண்ணப்பட்டு வந்தது. ஆனால் அண்மையில் அநுராதபுரத்தில் வெளிப்போந்த பிராமி வரிவடிவங்கள் அங்குக் காணப்பட்ட மண்ணடுக்காய்வின் அடிப்படையில் மகதப் பேரரசு தோன்று வதற்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்பே இலங்கையில் வணிகச் சமூகத்தின் மூலம் இவ்வரிவடிவம் புகுத்தப்பட்டு விட்டது என அல்சின் அவர்கள் கருதுகிறார் (Allchin 1995:209-210). இவரது கருத்துப்படி இலங்கையில் பௌத்தம் வருவதற்கு முன்பே இங்குள்ள வணிகர்கள் பிராமி வரிவடிவத்தை அறிந்திருந்தனர் எனவும் பின்னர் இவையே பிராகிருதக் கல்வெட்டுகள் தோன்ற வழிவகை செய்தன எனவும் குறிப்பிடுகிறார். இதற்கு ஆதாரமாகப் பிராமிக்கு முன்பாகவே இலங்கையிலும் இந்தியாவிலும் குறிப்பாகத் தமிழகத்திலும் கிடைக்கும் குறியீடுகள் ஒத்துக் காணப்படுவதை இங்கு நினைவு கூர்கிறார்.

அண்மையில் இலங்கையில் தென் கோடியில் உள்ள ரிதியகாமா துறைமுகப் பகுதியில் ஓசுமண்ட் போப்பியராட்சி அவர்களால் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் கிடைத்த குறியீடுகளும் கொடுமணல் அகழாய்வில் கிடைத்தவையும்

ஒத்துக் காணப்படுவது அல்சின் கூற்றுக்கு வலுசேர்க்கின்றது (Rajan and Osmund 2002: 97-105) (படம் 24). காலவரையறையை ஒதுக்கித் தள்ளிவிட்டுப் பிற தரவுகளைப் பார்த்தாலும் கூடத் தமிழகத்திலும், இலங்கையிலும் ஏற்பட்ட பண்பாட்டுப் பரவலுக்கு வணிகர்கள் பெரிதும் துணை புரிந்தனர் என்பதை மறுக்க இயலாது.




படம் 24 கொடுமணல் - ரிதியகாமாவில் காணப்படும் குறியீடுகள்

இலங்கைக்கே உரித்தான ஆண்விகுதியைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் 'ச' Λ வரிவடிவம் தமிழகத்தில் கிடைப்பதும், அசோகர் கல்வெட்டுக்களில் காணப்படும் 'ம' என்ற எழுத்துக்குரிய ( 𑀫 ) என்ற வரிவடிவம் பயன்படுத்தப்படாமல் தமிழ்ப் பிராமி வரிவடிவத்தில் காணப்படும் ( 𑀫 ) வரி வடிவத்தை இலங்கையில் பயன்படுத்தப்படுவதும், தமிழுக்கே உரிய சிறப்பான ழ, ள, ற, ன எழுத்து வரிவடிவங்கள் இலங்கைக் கல்வெட்டுகளில் கிடைப்பதும் மொழி, சொல், வரிவடிவம் தொடர்பான சான்றுகள் இலங்கையிலும், தமிழகத்திலும் மாறி மாறிக் கிடைப்பது இவ்விரு நாடுகளுக்கும் இடையேயான உறவு குறித்த ஆதாரங்களாக நிற்கின்றன எனலாம் (Mahadevan 1995:55-65). புகார்ப்பட்டினத்தில் அபிமகததோ என்ற பிராகிருதச் சொல் பொறிப்புக் கொண்ட பானை ஓடு ஒன்று கிடைத்துள்ளது (Kasinathan 1998:154; Rajavelu 1999:154). இது புகார்ப்பட்டினத்திற்கு ஈழத்திலிருந்து உணவுப் பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டன என்ற *பட்டினப்பாலையின்* கூற்றுக்கு வலுவூட்டுவதாக உள்ளது என்பதை இங்கு நினைவு கொள்ள வேண்டும்.

தமிழகத்தில் கிடைக்கும் பிராகிருத வரிவடிவங்களும், இலங்கையில் கிடைக்கும் தமிழ்ப் பிராமி வரிவடிவங்களும் வெளிப்படுத்தும் சொற்களின் தன்மையை ஆய்வு செய்தால் அவை வெளிப்படுத்தும் பண்பாட்டு உறவை அறியலாம். இலங்கையில் உள்ள கல்வெட்டுகளில் நாவாய், தோடா, படகே எனப் படகுகளின் பெயர்கள் வருகின்றன. இதே பெயர்கள் சங்க இலக்கியங்களில் பரவி வருவதைக் காணலாம். பொலனருவை மாவட்டத்தில் தூவகலா என்ற இடத்தில் கிடைத்த கல்வெட்டில் 'பரத' என்ற சொல்லுக்கு முன்பாக கப்பலின் உருவம் ஒன்று வரையப்பட்டுள்ளது (Paranavitana 1970:pl.xxv No.270). 'பரத' என்ற சொல்லும் மரக்கலத்தின் உருவமும் இணைந்து வருவதால் இக்கல்வெட்டு முக்கியத்துவம் பெறுகிறது (படம் 25). இலங்கையின் கடற்கரைப் பகுதிகளிலும், தமிழகத்தின் கடற்கரைப் பகுதிகளிலும் வாழ்ந்த பரதவர்களின் பண்பாட்டினை இலக்கியம், கல்வெட்டு ஆகியவற்றின் அடிப்படையில் ஆய்வினை மேற்கொண்ட இலங்கைப் பேராதனைப் பல்கலைக்கழகத் தொல்லியல் பேராசிரியர் செனவிரத்னேயும், மலோனியும் இவ்விரு நாடுகளின் கடற்கரையோரப் பகுதிகளில் வாழ்ந்த பரதவர்களே மீன்பிடித்தல், சங்கு மற்றும் முத்துக் குளித்தல், குதிரை வியாபாரம்

ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தனர் எனவும், இவர்கள் சமூகத்தில் உயர்நிலையில் இருந்தனர் எனவும் கருதுகின்றனர் (Seneviratne 1985:49-56; Maloney 1969:224-240). சங்க இலக்கியங்களில் முத்துக் குளித்தல் பெரிதும் பேசப்படுவதால் பரதவர்கள் இதில் பெரும் பங்கு ஆற்றியிருக்கவேண்டும். மன்னார் வளைகுடாவில் விளையும் முத்து அங்கு நிலவும் சீதோஷ்ண நிலை காரணமாக சிலகாலம் தமிழகக் கடற்கரைப் பகுதியிலும் சில காலம் இலங்கையின் கடற்கரைப் பகுதிகளிலும் விளைந்தது. இதனால் இதைப் பெரிதும் நம்பி வாழும் பரதவர்கள் தமிழகக் கடற்கரைக்கும், இலங்கைக் கடற்கரைக்கும் மாறி மாறி இடம் பெயர்ந்தனர் (Arunachalam 1952:5). இது பண்பாட்டுப் பரவலுக்கு அடிகோலியது.



**படம் 25 தூவகலாவில் கிடைத்த கப்பலின் உருவம் பொறித்த கல்வெட்டு**

இது தொடர்பாக ஆய்வு செய்த புஷ்பரத்னம் அவர்கள் *21* இலங்கைக் கல்வெட்டுகளில் பரத பெயர் வருவதாகவும் அவற்றில் *15* கல்வெட்டுகளில் 'திஸ' என்ற பெயரும் 'பரத' என்ற சொல்லும் இணைந்து வருவதையும் குறிப்பிட்டுப் பரதவர் உட்கொண்ட வணிகச் சமூகத்தில் 'திஸ' ஒரு சிறப்பிடத்தைப் பெற்றிருப்பதாகக் கருதுகிறார் (Pushparatnam 2001:51). கல்வெட்டில் மட்டுமல்லாது நாணயத்திலும் இத்தொடர்பு காணப்படுகிறது. இலங்கையில் கிடைக்கும் காசுகளில் பரத்திஸக எனக் காசின் முன்புறமும், பின்புறம் மீன்களும், சுவஸ்திகம் போன்ற மங்கலக் குறியீடுகளும் காணப்படுகின்றன (Bopearachchi and Wickremesinhe 1999:53). பரத திஸக என்ற பெயர் கொண்டவர்கள் அரசு தூதுவர்களாகவும், மரக்கலத்தின்

தலைவர்களாகவும், பெரும் வணிகர்களாகவும் விளங்கியுள்ளதை முறையே குர்ணகல, பரமகண்டா, கொடுவிலில் போன்ற இடங்களில் காணப்படும் கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகிறது (Paranavitana 1970:480, 1049, 1054). அம்பாறை மாவட்டம் கொடுவில் கிடைத்த கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டு திஸ என்றழைக்கப்படுகின்ற தமிழ் வணிகன் அங்குள்ள புத்த சங்கத்திற்குத் தானம் வழங்கியதைக் குறிப்பிடுகிறது. அதேபோல அநுராதபுரத்தில் அபயகிரிப் பகுதியில் கிடைத்த பாறைக்கல்வெட்டு ஈழ பரத வகுப்பைச் சார்ந்த சாமன என்ற தமிழ் வணிகர் மேற்கொண்ட வணிகத்தைத் தெரிவிக்கிறது (Paranavitana 1970:94). இங்கு ஈழ பரத என்று குறிப்பிடுவதைக் கூர்ந்து நோக்க வேண்டும். தமிழ்நாட்டைச் சார்ந்த பரதவர்களை ஈழநாட்டுப் பரதவர்களிலிருந்து பிரித்துக் காட்டுவதற்கே இச்சொல் கையாளப்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

இப்பரதவர்கள் வணிகர்களாகவும் மரக்கலங்களின் உரிமையாளர்களாகவும், மரக்கலங்களின் தலைவர்களாகவும், அரசுத் தூதுவர்களாகவும் விளங்கியுள்ளனர். மேலும் இவர்கள் வணிகக்குழுவாகவும் இயங்கியுள்ளனர் என்பதன் மூலம் இவர்கள் சங்க காலத்தில் சமூகப் படிநிலையில் மேல்மட்டத்து மக்களுக்கு ஈடாக வாழ்ந்து வந்தமை புலனாகிறது. தமிழகத்து வணிகர்கள் நாவிக்காரவா என்றழைக்கப்படும் மரக்கலத்தலைவனுடன் வணிக ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டு பன்னாட்டு வணிகத்தில் ஈடுபட்டனர். நாவிக எனப் பிராகிருத கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுபவர் தமிழில் நாவிகன் என்றே அழைக்கப்படுவர். சிலப்பதிகாரக் காப்பிய நாயகி கண்ணகியின் தந்தை மாநாயகன் (மாநாவிகன்) என்பது குறிப்பிடத்தக்கது. கண்ணகியின் தந்தை மாநாவிகனாக விளங்கியபோது கோவலனின் தந்தை மாசாத்துவான் அதாவது பெரும் வணிகனாக விளங்கியமை புலப்படுகிறது.

வட இலங்கையில் பெரிய புளியங்குளத்தில் கிடைத்த இரு கல்வெட்டுகள் விசாகே என்ற தமிழ் வணிகனைக் குறிப்பிடுகின்றன (Paranavitana 1970:Nos.356-357). செந்நிறப் பூச்சுப் பெற்று வெள்ளை வண்ணம் தீட்டப்பட்ட பானை ஓடு ஒன்று விசாகி என்ற தமிழ்ப் பிராமி எழுத்துப்பொறிப்புடன் கொடுமணலில் கிடைத்துள்ளது. இப்பானை ஓடு பெருங் கற்படைச் சின்னமான பரல் உயர் பதுக்கையிலிருந்து கிடைத்துள்ளமையால் இதன் காலம் மேலும் பின்னோக்கிச்

செல்லும் என்பதை இங்கு நினைவில் கொள்ள வேண்டும். இலங்கையில் பிராகிருத-பிராமிக் கல்வெட்டுகளில் கிடைக்கும் ஸாமுட, ஸாமுத, சாமுட என்ற சொற்கள் கடலைக் குறிப்பதற்குரிய சொற்களாகும் (Paranavitana 1970:123). இதற்கு இணையான தமிழ்ச் சொல்லாகக் காலத்தால் முந்திய பாண்டியன் நெடுஞ்செழியனின் மாங்குளம் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டில் 'கடலன்' என்று வருவதைப் பார்க்கலாம் (Mahadevan 1966:1-12).

அண்மையில் ஒசுமண்ட் போப்பியராச்சி வெளியிட்ட மகாசாத்தன் பெயர் பொறித்த காசுகள் முக்கியத்துவம் பெறுகின்றன (Bopearachchi 1999:54) (படம் 26). இச்சொல் மாசாத்துவன் என்ற தமிழ்ப் பதத்திற்கு ஈடானது. 'சாத்து' என்பது வணிகக் குழுவைக் குறித்து நிற்பதாகும். எடுத்துக்காட்டாக உமணச் சாத்துவைச் சுட்டலாம்.



**படம் 26 மகாசாத்தன் பெயர் பொறித்த காசு**

திருப்பரங்குன்றம் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டில் வரும் எருக்காட்டூர் ஈழக் குடும்பிகனுடன் நெடுசாத்தன் என்ற பெயர் இணைந்து வருவதைப் பார்க்கவேண்டும் (Mahadevan 2003:393). இதில் வரும் எருக்காட்டூர் இலங்கையின் ஈழப்பகுதியில் இருக்கவேண்டும் எனத் தெரிகிறது. இலங்கையில் சாத்துவன் அல்லது மகாசாத்துவன் பெயர் பொறித்த காசுகள் கிடைப்பது வணிகர்கள் நாணயங்களை வெளியிட்டதையும், அவை வணிகத்தில் பயன்படுத்தப் பட்டதையும், அவர்கள் காசுகள் வெளியிடும் அளவுக்குச் சுயஅதிகாரம் படைத்தவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதும் தெரிகிறது. ஆனால் தமிழகத்தில் மன்னர் தவிர்த்த பிறர் வெளியிட்ட காசுகள் இதுவரை கிடைக்கவில்லை. இது இரு நாடுகளிலும் அக்காலக்கட்டத்தில் காணப்பட்ட சமூகக் கட்டமைப்பைக் காட்டுகிறது.

கடற்செலவு குறித்துப் பல தரவுகளைத் தரும் பெரிப்லஸ் யவனர்கள் இலங்கைக்குச் செல்லாமலேயே அந்நாட்டுப் பொருட்களைப் பெற்றதாகக் குறிப்பிடுகிறார் (Warmington 1928:63). எனவே, இலங்கையிலிருந்து ஈழ வணிகர்களாலும், தமிழக வணிகர்களாலும் பொருட்கள் தமிழகத்திற்குக் கொண்டு வரப்பட்டுப் பின்னர் அவை ரோமநாட்டிற்கு ஏற்றுமதி செய்திருக்க வேண்டும். எனவேதான் புகார்ப்பட்டினத்திற்குக் கொண்டு வரப்பட்ட பன்னாட்டுப் பொருட்களில் ஈழத்துணவும் இடம்பெறுகிறது. மேற்கூறிய சான்றுகள் மூலம் இலங்கைக்கும் தமிழகத்திற்கும் இடையே வணிகப் பரிமாற்றமும் பண்பாட்டுப் பரிமாற்றமும் நிகழ்ந்துள்ளன என்பது தெரிகிறது. இதற்கு ஆதாரமாக விளங்கியவை மரக்கலன்களே என்பதையும் மறுக்க முடியாது. மரக்கலத்தை உருவாக்கும் திறனும் அதைப் பல இயற்கை இடர்ப்பாடுகளுக்கு இடையே செலுத்துகின்ற திறனும் ஒருங்கே பெற்றவர்களாக இவர்கள் திகழ்ந்திருக்க வேண்டும் என்பதையும் இங்குக் கருத்தில் கொள்ளவேண்டும். எனவே, மேற்கண்ட தொல்லியல், நாணயவியல், மொழியியல், கல்வெட்டியல் அடிப்படையிலான ஆய்வு வலுப்பெறுமானால் இலங்கைக்கும் தமிழ்நாட்டிற்கும் இடையே தொன்று தொட்டு நிலவி வரும் பண்பாட்டுத் தொடர்புகள் மேலும் வலுப்பெறும் எனலாம்.

## தென்கிழக்கு ஆசிய நாடுகளுடனான தொடர்பு

இலங்கை, ரோமநாட்டுடனான பன்னாட்டு வணிகத் தொடர்பினை அடுத்துத் தமிழகம் கீழை நாடுகளுடனான தொடர்பை வளர்த்துக் கொண்டது (படம் 27). இத்தொடர்பு நேரடியாகவும் இலங்கை வழியாகவும் மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதத் தோன்றுகிறது. மும்பை பல்கலைக்கழக முன்னாள் நிலவியல் பேராசிரியர் பி.அருணாச்சலம் அவர்கள் தமிழர்கள் கீழைக்கடற்கரைத் துறைமுகத்திலிருந்து இலங்கையின் கீழைக்கடற்கரைக்குச் சென்று அங்கிருந்து பத்து டிகிரி நீரோட்டம் (10° Channel) என்றழைக்கப்படும் இயற்கையாக உருவான நீரோட்டத்தின் வழியாகக் குறைந்த மனித சக்தியைப் பயன்படுத்தி நேராகத் தாய்லாந்து, மலேசியா, இந்தோனேசியா, பாலி, வியட்நாம் ஆகிய நாடுகள் வரை தமது வணிகத்தை மேற்கொண்டனர் எனக் கருதுகிறார்.




தென்கிழக்காசிய நாடுகள்

படம் 27 தமிழகம் தென்கிழக்காசிய நாட்டுடன் கொண்ட வணிகத் தொடர்புகள்

இயந்திரங்களைக் கொண்டு மரக்கலங்களைச் செலுத்தும் முறை தொழிற்புரட்சிக்குப் பின்னர் ஏற்பட்ட நிகழ்வாகும். அதற்கு முன்னர்ப் பருவக்காற்று, நீரோட்டம், மனித சக்தி கொண்டே மரக்கலங்கள் பெரிதும் செலுத்தப்பட்டன. இயற்கையின் சக்தியான பருவக்காற்றும், கடல்நீரோட்டமும் இதில் முக்கியப் பங்கு ஆற்றின. எனவேதான் தமிழர்கள் கீழை நாடுகள், மேலை நாடுகள், இலங்கை போன்ற பன்னாட்டு வணிகத்தில் மேற்கண்ட சக்திகளைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டனர். மேலை நாடுகளுடனான கடல்வழி உறவில் அரேபியர் மற்றும் யவனர்களின் கையோங்கியிருந்ததுபோல் காட்சியளிக்கிறது. ஆனால் கீழை நாடுகளுடனான உறவில்

தமிழர்களின் கையோங்கியிருக்க வேண்டும். இந்நிகழ்வு சோழர் காலத்திலும் தொடர்ந்தது. இந்தியர்கள் குறிப்பாகத் தமிழ் மன்னர்கள் கீழை நாடுகளை வெற்றி கொண்டதாகக் குறிப்பு வருகிறதே தவிர கீழைநாட்டவர் இந்தியாவை அல்லது தமிழ்நாட்டை வெற்றி கொண்டதாகக் குறிப்புகள் இல்லை. மேலும் இந்தியப் பண்பாட்டின் தாக்கம் மேலை நாடுகளைவிடக் கீழை நாடுகளின் மீது அதிகம் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

சங்க இலக்கியமான பட்டினப்பாலை கீழைநாடுகளில் இருந்து வந்த பொருட்களைக் குறிக்குமிடத்துக் 'காழகத்து ஆக்கம்' என்று குறிப்பிடுவதால் தாய்லாந்து நாட்டின் கீழ்ப்பகுதியும் மலேசிய நாட்டின் மேற்பகுதியும் இணைந்த நிலப்பகுதியே சங்க காலத்தில் தமிழக வணிகர்களிடையே 'காழகம்' என அழைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் இந்தியாவில் காணப்படும் பிற இலக்கியங்களும் கல்வெட்டுகளும் இப்பகுதியைச் சொர்ணபூமி என்றழைக்கின்றன. சொர்ணபூமி என்பதற்கு நேரடிப்பொருள் பொன் நிலம் என்பதாகும். எனவே சொர்ணபூமி என்றால் தங்கம் விளையும் நிலம் என்று பெரும்பாலான அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் இங்குத் தங்கம் கிடைப்பதில்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அதற்குமாறாக இங்குத் தகரமும் (Tin), செம்பும் (Copper) அதிகமாகக் கிடைக்கின்றன. குறிப்பாக வெண்கலம் (Bronze) தயாரிப்பதற்குத் தகரமும் (Tin) செம்பும் தேவை. தகரம் (Tin) இந்தப்பகுதியில் மட்டுமே கிடைப்பதால் இப்பகுதி வெண்கலப் பொருள்களுக்குப் பெயர்பெற்ற இடமாக விளங்குகிறது. இந்த வெண்கலப் பொருள்கள் தங்கத்திற்கு ஒப்பானவை என்பதால் இது சொர்ணபூமி என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும் எனத் தாய்லாந்து அறிஞர் சிர்சாட் அவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார் (Srisuchat 1996:141). தென்னிந்தியவில் எப்பகுதியிலும் செம்பு கிடைப்பதில்லை. இந்தியாவில் ராஜஸ்தான் மாநிலத்தில் மட்டுமே செம்பு கிடைக்கின்றது. எனவே தான் இலங்கையிலும், தமிழகத்தில் ஆதிச்சநல்லூர், கொடுமணல் போன்ற இடங்களிலும் கிடைத்த வெண்கலப் பொருட்கள் இப்பகுதியிலிருந்து வந்தனவோ என எண்ணத் தோன்றுகிறது. *பட்டினப்பாலையில்* வரும் காழகத்து ஆக்கம் இவ்வெண்கலப் பொருட்களை உள்ளடக்கியதாக இருக்கவேண்டும். இக் கருத்தையே இப்பகுதியில் பல்லாண்டுக் காலம் ஆய்வு புரிந்த உலோகவியல் நிபுணர் இயன் குளோவர்

அவர்கள் கருதுகிறார் (Glover 1996:129-158). காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைமையிடமாகக் கொண்டு வணிகம் செய்த மணிக்கிராமத்தார் என்ற வணிகக் குழுவினர் இப்பகுதிக்குச் சென்று வணிகத்தை மேற்கொண்டிருக்க வேண்டும். கி.பி.5ஆம் நூற்றாண்டு தொட்டுக் கிடைக்கும் கல்வெட்டுகளும், பிற தரவுகளும் இப்பகுதியில் இந்திய மரபினர் குடியேறிவிட்டதை உறுதிப்படுத்தியபோதிலும் அண்மைக்காலத்தில் வெளிக் கொணரப்பட்ட தரவுகள் அதற்கு முன்பே இங்குத் தமிழர்கள் வணிகம் செய்ததை உறுதி செய்கின்றன.

கி.மு.5ஆம் நூற்றாண்டு வாக்கிலேயே நன்கு நெறிப்படுத்தப்பட்ட வணிகக் குழுக் கட்டமைப்புக்கள் இந்தியாவில் தோன்றிவிட்டன. மேலை நாடுகளுடனான உறவில் பெற்ற பொருளாதார வளர்ச்சியின் காரணமாகவே இந்திய வணிகர்கள் கீழைநாடுகளுடன் தமது வணிக உறவைப் பலப்படுத்திக் கொண்டனர் என இயன் குளோவர் கருதுகிறார்.

கீழை நாடுகளிலிருந்து வாசனைத் திரவியங்கள் குறிப்பாக மெலுக்காவில் (Moluccas) விளையும் கிராம்பு (Clove), எஜினியா அரோமேடிகா (Eugenia Aromatica) என்ற மரத்திலிருந்து கிடைக்கும் (aromatic flower buds) மொட்டுகள் காவிரிப் பூம்பட்டினத்திற்குத் தருவிக்கப்பட்டு, மீண்டும் அவற்றைக் கடல் வழியாகவோ, தரைவழியாகவோ மேலைக் கடற்கரைப் பட்டினமான முசிறிக்குக் கொண்டு சென்று அங்கிருந்து மேலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்க வேண்டும். இலக்கியத்தில் வரும் குணகடல் துகிர் இப்பகுதியில் கிடைக்கும் செம்பவளம் (Red Coral) வகையைக் குறித்து நின்றது என்பதை இங்கு நினைவில் கொள்ள வேண்டும்.

வட இந்திய இலக்கியங்கள் சொர்ணபூமி எனப் பேச, சங்க இலக்கியம் இப்பகுதியைக் காழகம் எனச் சுட்டுகிறது. இவ்விரண்டும் ஒரே பகுதியா அல்லது வெவ்வேறு பகுதியா என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. சொர்ணபூமி என்பது மலேசியத் தீபகற்பத்தைத் தவிர்த்த பகுதியாக இருக்க வேண்டும் என்றும் காழகம் இக்காலக்கட்டத்தில் மலேசியத் தீபகற்பப் பகுதியைக் குறித்து நிற்கிறது என்றும் வல்லுநர்கள் கருதுகின்றனர். மலேசியத் தீபகற்பப் பகுதியிலேயே தமிழகத்தில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் அதிகமாகக் கிடைக்கின்றன.

தாய்லாந்து நாட்டின் கரபி (Krabi) மண்டலத்தைச் சார்ந்த கிளாங்தோம் என்ற இடத்திலும், சுரத்தானி மண்டலத்தைச் சார்ந்த சானா (Chana) என்ற இடத்திலும் அரிய கல்மணிகளும், கண்ணாடி மணிகளும் கிடைக்கின்றன (Glover 1996:64). கிளாங்தோமுக்கு (Khlong Thom) மற்றொரு பெயர் குவான் லக்பட் (Khuan Lukpad) அதாவது மணிமேடு (bead mound) என்று பெயர். இங்கு வண்ணம் தீட்டப்பட்ட சூதுபவள மணிகள் (etched carnelian bead), சூதுபவளத்தில் செய்யப்பட்ட சிங்க உருவம் கொண்ட கழுத்தணி, கண்ணாடி மணிகள் முதலியவை கிடைத்திருப்பது சிறப்பு வாய்ந்தவையாகும் (Veraprasert 1987:329-333; Bronson 1990:213-230). இது தவிர ரோமநாட்டுக்கே உரித்தான அரிய கல் மணியின் மீது கீறி உருவாக்கப்பட்ட (intaglio) யானை, சிங்கம், பெரிசியஸ் தெய்வம் போன்றவை இங்குக் கிடைக்கும் தொல்பொருட்களில் குறிப்பிடத்தக்கவை யாகும். இவற்றிற்கெல்லாம் மேலானது சிரிசேத்ரா (Srikshetra) என்ற இடத்தில் கிடைத்த பளிங்குக் கல்லால் செய்யப்பட்ட ஆமை உருவமாகும் (Di Crocco 1996:164 pl.5). இது கொடுமணலில் கிடைத்த ஆமை உருவத்துடன் ஒத்துக் காணப்படுகிறது. கொடுமணலில் இத்தகைய பொருட்கள் ஏராளமாகச் செய்யப்பட்டன என்பதை அங்கு நிகழ்த்திய கள ஆய்வு, அகழாய்வுகள் மெய்ப்பிக்கின்றன. சங்க இலக்கியமான *பதிற்றுப்பத்து* 'கொடுமணம் பட்ட வினை மாண் அருங்கலம்' என்று குறிப்பதால் மணிகள் செய்வதில் இவ்வூர் சிறப்புற்று விளங்கியமை புலனாகிறது. எனவே, கொடுமணலில் செய்யப் பட்ட மணிக்கற்கள் தமிழகத்திலிருந்து தாய்லாந்து நாட்டுச் சிரிசேத்ராவிற்கும் (Srikshetra) கிளாங்தோமிற்கும் கொண்டு செல்லப்பட்டிருக்க வேண்டும். அங்குக் கிடைக்கும் சூதுபவள மணிகளும், ரோமநாட்டுப் பொருட்களும்கூடத் தமிழகத் துறைமுகப் பட்டினங்கள் வழியாகவே சென்றடைந்திருக்க வேண்டும்.

இக்கருத்துக்கு வலு சேர்க்கும் வகையில் 1992-93 ஆண்டுகளில் நொபுரு கரோஷிமா தலைமையில் தாய்லாந்தில் மேற்கொண்ட கள ஆய்வில் கி.பி.3ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் தமிழ்ப் பிராமி வரிவடிவத்தில் 'பெரும் பதன் கல்' என்ற பெயர் பொறிக்கப்பட்ட உரைகல் ஒன்று வாட் கிளாங்தோம் அருங்காட்சியகத்தில் இருந்தமை அறியப்பட்டது (Karashima 1995:1-25) (படம் 28). இது பெரும் பத்தன் ஒருவனுடைய உரைகல் என்பது தெரிகிறது. இப்பகுதியில்

கிடைக்கப்பட்ட தமிழ்க் கல்வெட்டுகளில் காலத்தால் முந்தியது இதுவே ஆகும். இத்துடன் முன்புறம் புலியும் பின்புறம் யானையும் பொறிக்கப்பட்ட சதுர வடிவச் செப்புக்காசு ஒன்றும் கண்டெடுக்கப்பட்டது (Shanmugam 1993:81-84). இது சங்க காலச் சோழர் காசு என்பது குறிப்பிடத்தக்கது. பல்லவர் காசுகளும் இங்குக் கிடைத்துள்ளன. அவனிநாரணன் என்ற பட்டப் பெயர் பெற்ற மிகவும் புகழ் வாய்ந்த மூன்றாம் நந்திவர்மனின் (846-869) தகுவபா (Takua Pa) கல்வெட்டும் இங்குதான் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டு கோ காவ் (Kho Khao) என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுத் தற்பொழுது நக்கோ-கி-தம்மராட் (Nakhon-Si-Tammarat) அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. மலேசியத் தீபகற்பத்தின் மேற்குக் கடற்கரையில் அமைந்திருந்த கிளோங்தோம் மற்றும் முவாங் தோங் (Muang Thong) ஆகிய இரு துறைமுகங்களும் இதற்கு நேர் எதிர்ப்புறம் கீழைக் கடற்கரையில் அமைந்திருந்த காவ் சாம் கயோ (Khao Sam Kaeo) மற்றும் லாம் போ (Laem Pho) ஆகிய துறைமுகங்களும் இந்தியாவை வியட்நாம், சீன நாடுகளுடன் இணைக்கும் பாலமாக விளங்கின (Srisuchat 1996:244-246).





படம் 28 'பெரும் பதன் கல்' என்ற பெயர் பொறிக்கப்பட்ட உரைகல்

ஏற்கெனவே குறிப்பிட்டது போல ஆதிச்சநல்லூர், கொடுமணல் போன்ற ஊர்களில் கிடைக்கும் அதிகப்படியான தகரத்தையும் செம்பையும் கொண்டு உருவாக்கப்பட்ட வெண்கலப் பொருட்கள் தாய்லாந்து நாட்டிலிருந்தே தமிழகத்திற்கு வந்திருக்க வேண்டுமென இயன் குளோவர் கருதுகிறார் (Glover 1996:77). தாய்லாந்து நாட்டின் வெண்கலப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழிற் கூடமாக விளங்கிய பான் தான் தா பேட் (Ban Don Ta Phet) என்ற இடத்தில் தோண்டப்பட்ட ஈமச் சின்னத்திலிருந்து தமிழகத்திற்குரிய அரிய கல்மணிகளும், கண்ணாடி மணிகளும் கண்டெடுக்கப்பட்டதன் மூலம் இக்கருத்து மேலும் உறுதிப்படுத்தப்படுகிறது (Sirsuchat

1996:242-243). இலங்கையின் அநுராதபுரத்தில் அபயகிரி விகாரையில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் குவான் லக்பட் என்ற இடத்திலிருந்து கொண்டுவரப்பட்ட தகரமும், காரீயமும் கிடைத்தன (Abeyaratne 1990). இவை நேரடியாகவோ இலங்கை வழியாகவோ தமிழகத்திற்குக் கொண்டு வரப்பட்டிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

வெண்கலம் போன்றே கண்ணாடி மணிகள் தொடர்பாக மேற்கொள்ளப்பட்ட அண்மைக்கால ஆய்வுகளையும் இங்குக் குறிப்பிடவேண்டும். சங்க காலத்தில் கண்ணாடி மணிகள் ஏற்றுமதி சிறப்பிடத்தைப் பெற்றிருந்தது. பொதுவாகச் சங்க காலத்தை ஒட்டி உலகமுழுவதும் மூன்று வகையான மணிகள் கிடைக்கின்றன. அவை பொட்டாசியம்-சிலிக்கா (pottassium-silica based) கொண்டு தயாரிக்கப்பட்டவை, காரீயம் பேரியம் (lead-barium based) கொண்டு தயாரிக்கப்பட்டவை, சோடா-சுண்ணாம்பு (soda-lime) கொண்டு தயாரிக்கப்பட்டவை ஆகும். இவற்றில் முதலாவது வகை தமிழகத்தில் அரிக்கமேட்டிலும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும், இலங்கையில் உள்ள மாதோட்டம் (மாந்தை) சுற்றியுள்ள பகுதிகளிலும் தயாரிக்கப்பட்டன. இரண்டாவது வகை கண்ணாடி மணிகள் சீனாவிலும், மூன்றாவது வகை மேலை நாட்டிலும் தயாரிக்கப்பட்டன. எனவே, இக்கண்ணாடிப் பொருட்கள் ஓரிடத்தில் கிடைத்தால் அவற்றின்கண் காணும் வேதியியல் பொருளைக் கொண்டு எந்த நாட்டில் இருந்து வந்தன என அறியலாம்.

கி.மு.200க்கும் கி.பி.200க்கும் இடைப்பட்ட காலத்தில் தென்சீனாவில் மஞ்சள் (Yellow) மற்றும் யாங்சி (Yangzi) ஆற்றங்கரைப் பள்ளத்தாக்கில் ஆட்சி புரிந்த ஹன் அரச மரபைச் (Han dynastry) சார்ந்த உயர்குடி மக்களின் ஈமச் சின்னங்களிலிருந்து தமிழகத்தில் தயாரிக்கப்பட்ட மணிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன (Jiayao 1996:127-138). இதுதவிர சீனத் தயாரிப்பு மணிகளுடன் தமிழகக் கண்ணாடி மணிகளும் குவாங்கோங் (Guangong) மற்றும் குவாங்சி (Guangxi) என்ற இடங்களிலும் கிடைத்துள்ளன. ஹன் அரச மரபைச் சார்ந்த வு என்ற பேரரசர் (Wu emperor) இத்தகைய மணிகளை வாங்கத் தென்சீன நாட்டிற்குத் தம் மக்களை அனுப்பி வைத்ததாக ஹன் அரச வம்சத்தினரது வரலாற்று ஆவணங்கள் கூறுகின்றன. எனவே, தென் சீனப் பகுதிகளில் கிடைக்கும் தமிழகத்துக் கண்ணாடி மணிகள் தாய்லாந்து, வியட்நாம் வழியாக அங்குச் சென்றடைந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது. தமிழகத்துக்

கண்ணாடி மணிகளுடன் ரோமநாட்டு மணிகள் தென்சீன நாட்டு நகரங்களான காண்டன் (Canton), கான்ஜியன் (Hanjian), நான்ஜிங் (Nanjing) போன்ற இடங்களில் ஹன் அரசவம்சத்தினரது ஈமச்சின்னங்களில் கிடைத்துள்ளதால் இம்மணிகள் ரோம நாட்டிலிருந்து முசிறி வந்தடைந்து பின்னர்ப் புகார்ப் பட்டினத்து வழியாகத் தென்சீனா நாட்டை அடைந்திருக்க வேண்டும். தொழில் நுட்பத்தின் மேன்மையின் காரணமாகப் பொட்டாசியம்-சிலிகா கலந்த மணிகள் தயாரிப்பு தமிழகத்துத் தொழில்நுட்ப வல்லுநர்களிடையே பல காலம் இருந்திருக்க வேண்டுமென மணி ஆய்வில் புகழ்பெற்ற பிரான்சிஸ் கருதுகிறார் (Francis 1996:141).

அண்மையில் இத்தகைய மணிகள் செய்யும் பட்டறை ஒன்று கடலூர்-சிதம்பரம் சாலையில் புதுச்சத்திரத்திற்கு மேற்கே அமைந்துள்ள மணிக்கொல்லை என்ற ஊரில் கண்டு பிடிக்கப்பட்டது. இன்றும் ஏராளமான மணிகள் இங்குக் கிடைப்பதால் இது மணிக்கொல்லை என்றே பெயர் பெற்றுத் திகழ்கிறது. இதற்கு அருகிலேயே சங்ககால வாழ்விடமான காரைக்காடு அமைந்துள்ளது.

இந்தோனேஷியாவின் ஒரு பகுதியான மேற்குப் பாலியில் கிலிமானுக் என்ற இடத்தில் இத்தகைய மணிகள் கிடைத்துள்ளன (Ratna Indiraningsih 1985:133-141). எனவே, தாய்லாந்து, இந்தோனேஷியா, வியட்நாம், தென் சீனம் ஆகிய பகுதிகளில் கிடைத்த தமிழகத்துத் தயாரிப்புகளான சூது பவள மணிகள், எஃகுப் பொருட்கள், கண்ணாடி மணிகள் முதலியன தமிழகம் சங்க காலம் தொட்டுக் கீழைநாட்டுடன் கொண்டிருந்த தொடர்பை வெளிப்படுத்துகின்றன. வியட்நாம் நாட்டின் முக்கியப் பண்பாடாக ஒக்கியோ நதி தீரத்தில் வெளிப்போந்த ஒக்கியோ பண்பாடு கருதப்படுகிறது. இப்பண்பாடும் சங்ககாலப் பண்பாடும் சமகாலத்தவை. அண்மைக் காலமாக இங்கும் தமிழகத்துப் பொருட்கள் வெளிவர ஆரம்பித்துள்ளன. எனவே, எதிர்காலத்தில் இப்பகுதிகளில் மேற்கொள்ளப்படும் அகழாய்வுகளும், கள ஆய்வுகளும் தமிழகத்து வணிகர்களின் பன்னாட்டு வணிகத்தின் பன்முகத் தோற்றத்தை வெளிக்கொணரும் எனலாம். மேலை நாடுகளுடனும், கீழை நாடுகளுடனும், இலங்கையுடனும் தமிழகம் மேற்கொண்டிருந்த உறவுகள் என்பது பண்பாட்டுப் பரவல் என்ற கட்டமைப்புக்குள் வைத்து ஆய்வு செய்திட முடியாது. கப்பல் கட்டும் திறன், கடல் நீரோட்டம் பற்றிய அறிவு, பருவக்காற்று என்னும்

இயற்கைச் சக்தியைத் தன் வயப்படுத்திக் கொள்ளுதல், இறக்குமதி நாட்டின் எதிர்பார்ப்புக்குத் தக்கவாறு பொருட்களின் தரத்தினை உயர்த்திக் கொள்ளப் பேணும் தொழில் நுட்பத் திறன், தனித்து இயங்காமல் வணிகக் குழுவாக இயங்குகின்ற தன்மை, பிறநாடுகளின் மொழி, பண்பாடு ஆகியவற்றை அறிந்து அவற்றுடன் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டிய சமூக இணக்கம் போன்றவையே தமிழகம் சுமார் ஐநூறு ஆண்டுகளுக்கு மேலாகப் பன்னாட்டுடன் தொடர்ந்து வணிக உறவுகளை நிலைநிறுத்திக் கொள்ள முடிந்தமைக்குக் காரணங்களாகும். இதற்குப் பெரும் துணையாக இருந்த ஒரு முக்கியமான காரணி தொழில்நுட்பத்தின் மேன்மை எனலாம். தமிழகத்தில் பல்வேறு தொழில் நுட்பங்கள் அக்காலக் கட்டத்தில் வளர்ச்சியுற்று இருந்தாலும் கூடப் பன்னாட்டு வணிகத்தில் கிடைக்கும் பொருட்களைப் பார்க்கும்பொழுது எஃகு செய்தல், மணிகள் உருவாக்குதல், மரக்கலங்கள் கட்டுதல் போன்றவையே சிறப்புற்று விளங்கியுள்ளன என்பதை அகழாய்வுச் சான்றுகள் உரைக்கின்றன. தமிழக வளர்ச்சிக்குப் பெரிதும் துணை புரிந்த முக்கியமான சில தொழில்நுட்பங்களை இனிவரும் இயலில் பார்க்கலாம்.

# தொழில்நுட்பம்

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சி என்பது அந்நாட்டில் கிடைக்கும் இயற்கை வளங்களை உயர்ந்த தொழில் நுட்பத்தின் மூலம் உற்பத்திப் பொருட்களாக மாற்றி அவற்றை உள்நாட்டின் பயன்பாட்டிற்கும், வெளிநாட்டின் தேவைக்கும் அளித்து அதன் மூலம் பெறப்படும் உபரி வருவாயை ஒட்டு மொத்த சமூக வளர்ச்சிக்குப் பயன்படுத்துவதே ஆகும். இதில் மனித சக்தியை முறையாகப் பயன்படுத்துதல் என்பது இன்றியமையாததாகும். இவ்வுற்பத்திப் பெருக்கத்தின் பலன் சமூகத்தின் அனைத்துப் பிரிவினருக்கும் சென்றடைவதற்கும், இத்தொழிற் கூடங்களைச் சில சட்டதிட்டங்களுடன் ஒழுங்கு செய்யவும் அரசு தேவைப்படுகிறது. தமிழகத்தின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றிய 'பல தொழில்நுட்பங்களில் சிலவற்றை மட்டும் தெரிவு செய்து அவற்றின் தன்மையை உணர்த்துவதே இவ்வியலின் முக்கிய நோக்கமாகும்.

சங்க காலத்தில் தமிழகம் கீழை, மேலை நாடுகளுடனும், இலங்கையுடனும் கொண்டிருந்த தொடர்ச்சியான வணிக உறவுகளை முன் இயலில் கண்டோம். இலக்கியங்கள், தொல்பொருட்கள், கல்வெட்டுகள், நாணயங்கள் போன்ற சான்றுகளின் அடிப்படையில் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்பட்ட எண்ணற்ற பொருட்களை நாம் கண்டோம். தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்களில் பெரும் பான்மையானவை ஆடம்பரப் பொருட்களாகவும், இறக்குமதி செய்யப்பட்ட பொருட்கள் பெரும்பாலும் அத்தியாவசியப் பொருட்களாகவும் இருப்பதைக் காணலாம். ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்களில் சிறப்பாகக் காணப்படுபவை வாசனைத் திரவியங்களும், மலைபடு பொருட்களும், பருத்தித் துணிகளும், எஃகுப் பொருட்களும், அரிய கல்மணிகளும் ஆகும். இதில் இயற்கையாகக் கிடைக்கின்ற பொருட்களான வாசனைத் திரவியங்களையும், மலைபடு பொருட்களையும் தவிர்த்தால் எஞ்சியிருக்கின்ற பொருட்கள் அனைத்தும் உயர்

தொழில் நுட்பம் கொண்டு உருவானவை என்பது புலப்படும். இத்தொழில் நுட்பங்களைப் பற்றி அறிவதும், பன்னாட்டு வணிகத் தொடர்புக்கு உறுதுணையாக இருந்த மரக்கலங்களின் தொழில்நுட்பத்தை அறிவதும் இவ்வியலின் நோக்கமாகும்.

## மரக்கலக் கட்டுமானமும், துறைமுக அமைப்பும்

சங்க இலக்கியங்களும், வெளி நாட்டவர் குறிப்புகளும் தமிழகத்துத் துறைமுகங்களான தொண்டி, முசிறி, கொற்கை, புகார், வீரை முதலியன பெற்றிருந்த சிறப்பையும், மேலைநாட்டு நாவாய் தமிழகத் துறைமுகங்களுக்கு வருகை புரிந்ததையும், தமிழ் நாட்டு மரக்கலங்கள் கடல்வழிச் செலவினை மேற்கொண்டதைப் பற்றியும் குறிப்பிடுகின்றன. சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் *அம்பி, புணை, திமில், கலம், நாவாய்* போன்ற சொற்கள் அக்காலத்தில் பலவகையான மரக்கலங்கள் இருந்ததை நமக்குத் தெளிவுறுத்துகின்றன. ஆனால், இலக்கியத்தில் காணப்படும் செய்திகளைப் பார்க்கும்பொழுது இவையனைத்தும் பன்னாட்டு வணிகத்திற்குப் பயன்படுத்தப் பட்டவை என்று கூற இயலாது. *அம்பி* என்பது எவ்விதப் பாய்மரமும் இன்றிக் காணப்படுவதால் இது கடற்கரையிலிருந்து வெகுதூரம் சென்றிருக்க இயலாது. *அம்பி* ஆற்றிலும் (*அகம்* 98:1-2) கடற்கரையோரப் பகுதிகளிலும் (*நற்றிணை* 354:5-7) பயன்படுத்தியமை தெரிகிறது. *புணை* அல்லது *கட்டுமரம்* என்பது மரத்துண்டுகளைக் கொண்டு கட்டப்பட்டது ஆகும். இது பெரிய கப்பலில் எடுத்துச் செல்லப்பட்டதைப் *பெரும்பாணாற்றுப்படையும்* (*பெரும்பாணாற்றுப்படை* 2:30-35), உயிர்காக்கும் படகாக விளங்கியதைக் *கலித்தொகையும்* (*கலித்தொகை* 34:24-25) குறிக்கின்றன.

*திமில்* வகை மரக்கலம் மீன் பிடிக்கவும், முத்துக் குளிக்கவும் பயன்படுத்தியதற்கான குறிப்புகள் *நற்றிணையிலும்* (*நற்றிணை* 111:5-9), அகநானூற்றிலும் (*அகம்* 350:10-15) காணப்படுகின்றன. இதன் அளவின் காரணமாகவும், செய்யப்பட்ட பாங்கின் காரணமாகவும் இது *கொடுந்திமில், திண்திமில்* (*நற்றிணை* 175:1-3; *அகம்* 240:5-7) என்று அழைக்கப்பட்டது. இதைச் செலுத்துவதற்குச் சிறப்புவாய்ந்த திமிலர்கள் பணிபுரிந்துள்ளனர்.

பன்னாட்டுக் கடற்செலவில் பயன்படுத்த மரக்கலங்களுக்கான குறிப்பில் கலமும், நாவாயும் முன் நிற்கின்றன (*நற்றிணை* 295:6-7). இவை பல பாய்

மரங்களையும், கொடிகளையும் கொண்டு விளங்கியதையும், ஒரு துறைமுகப் பட்டினத்திலிருந்து மற்றொரு துறைமுகப் பட்டினத்திற்குச் சென்று வந்தமைக்கான குறிப்புகளைக் கொண்டும் இவ்வகை மரக்கலங்களே தமிழர்கள் உருவாக்கியவற்றில் சிறப்பு வாய்ந்தவை எனலாம் *(புறம் 30: 10-11; அகம் 152:6-8; மதுரைக்காஞ்சி 74-83).* கலம் என்பது தமிழர்களின் மரக்கலமாகவும் நாவாய் என்பது வெளிநாட்டவர் மரக்கலமாகவும் இருக்கலாமோ என்ற மயக்கத்தை ஏற்படுத்து கின்ற வகையில் நாவாய் இலக்கியங்களில் வெளிநாட்டவருடன் தொடர்புபடுத்திக் கூறப்படுகிறது. நாவாய் ரோமநாட்டு மரக்கலமாக இருக்கலாம்.

ரோமநாட்டு மரக்கலங்கள் கீழைக் கடற்கரைக்கு வந்துள்ளதை வைகை ஆற்றின் முகத்துவாரத்தில் அமைந்துள்ள சங்ககாலப் பாண்டியரின் துறைமுகமான அழகன்குளத்தில் (மருங்கூர்ப்பட்டினம் ?) கிடைத்த ரோமநாட்டு மரக்கல உருவம் பொறித்த பானை ஓடுகளும், மதுச்சாடிகளின் துண்டுகளும் உறுதிசெய்கின்றன. முசிறி, அலெக்ஸாண்டிரியா வணிக ஒப்பந்தத்தில் முசிறித் துறைமுகத்திற்கு வருகை புரிந்த ஹெர்மபோலின் என்ற கப்பலின் குறிப்பும், யவனர் இயற்றிய வினைமாண் பாவை, யவனர்பாவை, யவனர் ஓதிம விளக்கு, வண்கண் யவனர், யவனர் இருக்கை, யவனத்தச்சர் போன்ற எண்ணற்ற குறிப்புகளும் இவர்களது நேரடித் தொடர்பை உறுதிசெய்கின்றன. அதுமட்டுமல்லாது பூம்புகார் நில அகழாய்வில் கிடைத்த படகுத்துறைகளும், கடல் அகழாய்வில் கலங்கரை விளக்கம் என்று கருதும் அளவிற்குக் கிடைத்த அரைவட்ட வடிவக் கட்டிடப் பகுதியும் இதை மேலும் உறுதிசெய்கின்றன (Soundarajan 1994:21-42; Rao 1987).

இலக்கியங்களில் துறைமுகங்களைக் குறிப்படும்பொழுது வீரை முன்துறை, புகார் முன்துறை, கொற்கை முன்துறை எனவும், மேலும் புகார்ப் பெருந்துறை, கொற்கைப் பெருந்துறை எனவும் சொற்றொடர்கள் வருவதைப் பார்க்கலாம். முன்துறை *(அகம் 130:12; 201:4; 206:13; பட்டினப்பாலை 173),* பெருந்துறை *(நற்றிணை 295:6; அகம் 27:9)* என்ற சொற்கள் மிக நேர்த்தியாகக் கையாளப்பட்டதை இங்கு உற்று நோக்க வேண்டும். உலகமுழுதும் வரலாற்றுத் தொடக்க காலத்தில் எழுந்த துறைமுகங்கள் ஆறு கடலுடன் கலக்கும் ஆற்று முகத்துவாரத்தில் உருவாக்கப்படுவதில்லை. காரணம் கடல் அலைகளின் தாக்கம் மரக்கலங்ளின் மேல் கடுமையாக இருக்கும்

என்பதே இதற்குக் காரணமாகும். இது பொருளை ஏற்றுவதிலும், இறக்குவதிலும் இடர்ப்பாடுகளை ஏற்படுத்தக்கூடும் என்பதால் ஆற்றின் உள்ளே படகுத்துறையும், அதையொட்டிப் பண்டகச் சாலையும் (ware house) காணப்படும். பண்டகச்சாலையும், படகுத்துறையும் கொண்ட பகுதியே பெருந்துறையாகும். இங்கே வணிகப் பெருமக்களும், உயர்குடிமக்களும், சுங்கவரி அதிகாரிகளும் வாழ்வர் அல்லது பணிபுரிவர். அதனால்தான் *புறநானூறு* (30:10-12) மரக்கலங்கள் கடலிலிருந்து ஆற்றின் உள்ளே வந்ததை "*கூம்பொடு மீம் பாய் களையாது புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்*" எனத் தெரிவிக்கிறது (*புறம்* 343:5-6). மரக்கலங்கள் பாயை மடக்காது காற்றின் உதவிகொண்டு நுழைந்ததால் இது வேகமாக உள்ளே புகுந்திருக்க வேண்டும். ஒரு மரக்கலம் ஆற்றின் உள்ளே வேகமாக நுழைய வேண்டுமாயின் ஆற்றின் வாய் அகலமாகவும், ஆழமாகவும் இருக்க வேண்டும் என்பதை உய்த்துணரலாம். இது சங்ககாலக் காவிரி ஆற்றிற்கு மிகப்பொருந்தும் கூற்றாகும். அனைத்துக் கலங்களையும் ஆற்றின் உள்ளே கொண்டு வந்து பெருந்துறையில் உள்ள படகுத்துறையில் நிறுத்தமுடியாது. எனவே இவை ஆற்று முகத்துவாரத்தில் உள்ள முன்துறையில் நங்கூரமிட்டு நிறுத்தப்பட்டிருக்கும். முன்துறையிலேயே மீனவர்களும், பரதவ சமூகத்தினரும், பிற தொழில் செய்வோரும் வாழ்ந்திருக்க வேண்டும். இதைத்தான் பெருங்காப்பியமான *சிலப்பதிகாரம்,* பட்டினப்பாக்கம், மருவூர்ப் பாக்கம் என வேறுபடுத்தி இருபகுதிகளைக் காட்டுகிறது.

இவ்விரு பகுதிகளுக்குமிடையே காணப்படுபவை அல்லங்காடி, நாளங்காடி என்றழைக்கப்படும் மாலை, காலை கூடும் அங்காடிகளாகும். இத்துணை மரக்கலங்கள் வந்து செல்லுமிடத்தில் கலங்களைச் செப்பனிடத் தேர்ச்சி பெற்ற தச்சர்கள் வாழ்ந்திருக்கவேண்டும். அதனால்தான் யவனர்களின் மரக்கலங்களின் தனித்தன்மை காரணமாக அவற்றைச் செப்பனிட யவனத்தச்சர்கள் புகாரில் பணிபுரிந்திருக்கவேண்டும் எனலாம். மிகப்பெரிய கலங்கள் பெருந்துறைக்கு வராதபொழுது அவை கடலில் நங்கூரம் பாய்ச்சி நிறுத்தப்பட்டிருக்கும். பெருந்துறைக்கு வர இயலாது கடலிலேயே தங்கும் பெருங்கலங்களில் பொருட்களை ஏற்றவும், இறக்கவும் சிறிய கலங்கள் பயன்படுத்தப்பட்டதைப் புறநானூற்றுப் பாடல் (*புறநானூறு* 343:5-6). புலப்படுத்துகிறது. மேற்கூறிய செய்திகள் மூலம் சங்ககாலத்தில் தமிழகத்தின் கடற்கரையோரப் பகுதிகளில்

புழக்கத்தில் இருந்த மரக்கலங்களின் செயல் திறனை அறிந்து கொள்ள முடிகிறது. மரக்கலம் ஒன்றினைக் கடல் கடந்து செலுத்த வேண்டுமெனில் மாலுமிக்குக் கடலைப் பற்றிய அறிவு மிகவும் தேவை. குறிப்பாகக் கடல் கடந்து மரக்கலத்தைச் செலுத்துவதற்குக் கடல் ஓதம் (tide), கடல் அலையின் தன்மை, காற்றின் தன்மை, விண்மீன்களின் இருப்பிடம் ஆகியவற்றைப் பற்றி அறிந்திருக்கவேண்டும்.

இதில் காற்று மிக முக்கிய இடத்தைப்பெறுகிறது. பருவக்காற்றைப் பயன்படுத்தித் தமிழர்கள் கீழை நாடுகளுடனும், மேலை நாடுகளுடனும் வணிகம் செய்துள்ளனர். ஆனி மாதத்தில் இவர்கள் கீழை நாடுகளுக்குப் பயணத்தை மேற்கொண்டு ஐப்பசியில் திரும்புவர். எனவே துறைமுகங்களில் கீழைக் கடற்கரையில் ஏற்றுமதிப் பொருட்கள் ஆனி மாதத்திலும், இறக்குமதிப் பொருட்கள் ஐப்பசி மாதத்திலும் குவிந்து கிடக்கும். மேலைக் கடற்கரையில் உள்ள துறைமுகங்களில் ஆனிமாதத்தில் பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டு ஐப்பசி மாதத்தில் ஏற்றுமதி செய்யப்படும். தமிழகக் கடற்கரையில் வீசும் தென்மேற்குப் பருவக்காற்றும், வடகிழக்குப் பருவக்காற்றும் இதற்குப் பெரும் துணை புரிந்தன. இப்பருவக் காற்றின் சக்தியை அறிவதற்கு முன்பு அனைத்துக் கடல்வழிப் பயணங்களும் கடற்கரையை ஒட்டியே நிகழ்ந்தன. ஆனால் காற்றின் சக்தியைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்தி கொள்வதன் மூலம் சுமார் 40 நாட்களில் முசிறியிலிருந்து செங்கடல் துறைமுகத்தை அடைந்துவிட முடியும். குறைந்த காலம் என்பதைவிடக் குறைந்த மனித சக்தியைக் கொண்டு அதிகப் பொருட்களை ஏற்றிச் செல்ல முடியும் என்பதையே முன் இயலில் குறிப்பிட்ட முசிறி-அலெக்ஸாண்டரியா வணிக ஒப்பந்தம் தெரிவிக்கிறது. "*நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும் காலின் வந்த கருங்கறி மூடையும்*" என்ற பட்டினப்பாலையின் வரிகள் இக்கருத்தை மேலும் வலுவடையச் செய்கின்றன.

காற்றைப்போன்றே நீரோட்டமும் (current) கடல்வழிப் பயணத்தில் முக்கியத்துவம் பெறுகிறது. எடுத்துக்காட்டாக 10 டிகிரி சானல் என்றழைக்கப்படும் கடல் நீரோட்டம் 10 டிகிரி அட்சரேகையை ஒட்டி இந்தியாவிற்கும் கீழை நாட்டிற்கும் இடையே செல்கிறது. இந்நீரோட்டம் இலங்கைக்கும், தமிழ் நாட்டிற்கும் அருகில் ஓடுவதால் இந்நீரோட்டத்தைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டனர்.

காற்று, நீரோட்டம் போன்றே இலக்கியங்களில் ஓதம் (tide) என்றழைக்கப்படும் கடல் நீர் மட்டத்தில் ஏற்படும் உயர்வு தாழ்வு நிகழ்வுகள் முக்கியமானவையாகும். இம்மாற்றங்கள் நிலவியல், வானவியலில் ஏற்படும் மாற்றங்களுக்குத் தக்கவாறு இடத்திற்கு இடம் மாறுபடும். கடல்நீர் மட்டம் சில இடங்களில் ஒரு மைல்கல் அளவிற்கு முன்னோக்கி பின்னோக்கி நகரும். இதைப் பரதவர்கள் முன் ஓதம் (high tide), பின் ஓதம் (low tide) என்றழைப்பர். இவற்றின் காரணமாகத் துறைமுகத்திற்கு மரக்கலங்கள் வருவது பெரிதும் பாதிக்கப்படும். ஆனால் இவ்வோதங்களின் தன்மையை அறிந்து கொண்டால் இவற்றைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, முன் ஓதத்தின் போது கடல் அலைகள் கரையை நோக்கி நகரும். கடலின் ஆழமும் கூடும். எனவே பெரிய கலங்களைக் குறைந்த மனித சக்தி கொண்டு துறைமுகத்திற்கு எளிதில் கொண்டு வரலாம். அதேபோல் பின் ஓதத்தின்போது கலங்களைக் கடலுக்குள் எளிதில் எடுத்துச் செல்லலாம். இந்த ஓதத்தின் தன்மையை நன்கு அறிந்து அதைப் பயன்படுத்திக் கொண்டனர் என்பதை *நற்றிணை* (117:1-2; 335:1-3), *அகநானூறு* (123:12-13; 220:12; 300:16-17) பாடல்கள் நமக்குத் தெரிவிக்கின்றன.

சங்க இலக்கியங்களில் நங்கூரத்தைப் பற்றிய நேரடிக் குறிப்புகள் இல்லாதபோதிலும் *நாலாயிரதிவ்வியப்பிரபந்தம்* (629:3-4) இதுகுறித்த செய்தியை அளிப்பதாலும், பிளினி இலங்கை மாலுமிகள் நங்கூரங்களைப் பயன்படுத்தினர் என்று கூறுவதாலும் தமிழர்களும் தமது மரக்கலங்களில் நங்கூரங்களைப் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

தமிழ்நாட்டின் இராமேஸ்வரம் கடலோரப்பகுதிகளிலும், குஜராத் மாநிலத்தின் துவாரகையிலும், மத்தியத் தரைக்கடல் பகுதிகளிலும், ஆப்பிரிக்க நாட்டுக் கடற்கரைப் பகுதிகளிலும் கண்டுபிடிக்கப்பட்ட கல்நங்கூரங்கள் மூலம் அக்காலத்தில் கல்நங்கூரங்களே பயன்பாட்டில் இருந்திருக்க வேண்டுமெனத் தெரிவிக்கின்றன (Athiyaman 1996:129-136; Rao 1987). நங்கூரத்தின் பயன்பாட்டை *மதுரைக்காஞ்சி* (375-379) குறிப்பிடுவதால் சங்ககாலத்தில் தமிழகத்தில் அது கல்நங்கூரமாக வழக்கில் இருந்திருக்கலாம். கொற்கை, அழகன்குளம், அரிக்கமேடு, புகார் ஆகிய இடங்களில் பெற்ற தொல்லியல் தரவுகள் துறைமுகங்களின் இட அமைப்பை நமக்குத் தெளிவாக உணர்த்துகின்றன. அனைத்துத் துறைமுகங்களும் நதியின்

உள்ளேயே அமைந்திருந்தன என்பதை இத்தரவுகள் பறைசாற்றுகின்றன. கோவாவில் உள்ள தேசியத் கடலாய்வு நிறுவனம் மேற்கொண்ட பூம்புகார் கடல் அகழாய்வில் கடலின் உள்ளே ஒரு மைல் தொலைவில் 65மீட்டர் ஆழப்பகுதியில் அரைவட்ட வடிவில் கட்டிடப்பகுதி ஒன்று கிடைத்துள்ளது. இது சங்ககாலத்தில் கடல் ஒருகல் தொலைவு பின்நோக்கி இருந்ததையும் பூம்புகாரில் ஏற்பட்ட கடல்கோளால் அழிந்திருக்க வேண்டும் என்பதையும் புலப்படுத்துகிறது. அதேபோல் தொலையுணர்வுக் கோள்கள் மூலமும், சைடுஸ்கேன் சோனார், எக்கோ சவுண்டர் போன்ற உயர் தொழில்நுட்பக் கருவிகள் மூலமும் கோவாவில் உள்ள தேசிய கடலாய்வு நிறுவனமும், சென்னையில் உள்ள தேசிய கடல் தொழில் நுட்ப நிறுவனமும் மேற்கொண்ட நில ஆய்வுப்பணியில் பழைய காவிரி நதிப்படுகை வெளிக்கொணரப்பட்டது. சங்ககாலத்தில் ஓடிய காவிரி தற்போதைய காவிரி நதிக்கு ஒரு கல் தொலைவில் வடக்கில் பாய்ந்து சென்று கடலில் கலந்துள்ளது. மேலும் மத்தியத் தொல்லியல் ஆய்வுத்துறை, தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை மேற்கொண்ட நில அகழாய்வுகளிலும் இவ்வாற்றுப் படுகையிலேயே படகுத்துறை கண்டுபிடிக்கப் பட்டுள்ளதால் பூம்புகார் முழுவதுமாக மறையவில்லை என்பதையும் நகரின் கீழ்ப்பாகம் மட்டுமே கடலுக்குள் சென்றுவிட்டது என்பதையும் உணரமுடிகிறது. இலக்கியச் செய்திகளும், தொல்லியல் சான்றுகளும் ஒன்றுடன் ஒன்று இணைந்து போவதை இங்கு நாம் பார்க்க முடிகிறது. எனவே மேற்கூறிய சான்றுகள் மூலம் சங்க காலத்தில் தமிழர்களின் கடல்வாணிகம் செழித்திருந்ததை நன்கு உணரமுடிகிறது.

## முத்துக் குளித்தல்

கடலில் விளையும் முத்துகள், சங்குகள், வாழும் மீன்கள் எனக் கடல் வளம் மனித வாழ்வின் மேம்பாட்டிற்காகப் பெரிதும் பயன்பட்டுள்ளது. இவற்றில் மீன்களின் பயன்பாடு உள்ளூர்த் தேவைகளைப் பெரிதும் நிறைவு செய்தது. சங்கும், முத்தும் வணிகத்தில் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளன. முத்து அதன் சிறப்பு வாய்ந்த தன்மையின் காரணமாக உலக வர்த்தகத்தில் தனி இடத்தைப் பிடித்துக் கொண்டது என்றால் மிகையாகாது. தமிழகத்து முத்து பற்றி முதன்முதலில் மெகஸ்தனீஸ் குறிப்பிடுகிறார். முத்துகளின் பயன்பாடு

தொடர்பான குறிப்புகள் அதிகமாகக் கிடைத்த போதிலும் முத்துக்குளித்தல் பற்றிய கருத்துகள் சங்க இலக்கியத்தில் அருகியே காணப்படுகின்றன. பாண்டிய நாட்டுத் துறைமுகமும் தலைநகரமுமான கொற்கையில் முத்துக் குளித்தல் பணியில் பரதவர் ஈடுபட்டிருந்ததைக் *கலித்தொகை* (131:22), *அகநானூறு* (350:10-11), *சிறுபாணாற்றுப்படை* (56-58) போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன.

*மகாவம்சம்* எட்டு வகையான முத்துகளை இலங்கை நாட்டு மன்னனான தேவநாம்பியதிச (கி.மு.250-210) அசோகருக்கு வழங்கியதையும், துத்தகாமினி தனது அரங்கத்தை முத்துகளால் அலங்கரித்ததையும் குறிப்பதால் இவை மன்னார் வளைகுடாவில் விளைந்தவை என்பது புலனாகும். பெரிப்லஸ் நூலும், ஸ்ட்ராபோ, பிளினி, தாலமி, குறிப்புகளும் மன்னார் வளைகுடாப் பகுதியில் விளைந்த முத்துகளைக் குறிப்பிடுகிறது. இம்முத்துக் குளித்தல் தொழில் தமிழகத்துக் கொற்கையையும் இலங்கையின் மாந்தையையும் (மாதோட்டம்) மையமாகக்கொண்டு இயங்கிற்று என்பது அனைத்து இலக்கியத் தரவுகள் மூலமும் அறியமுடிகிறது.

ஆனால் எவ்வித அறிவியல் சார்ந்த நீர் மூழ்குக் கருவிகளும் இன்றித் தமிழகப் பரதவர்கள் எங்ஙனம் நீரில் மூழ்கி முத்துக்குளித்திருக்க முடியும் என்பதற்கு விடைகாணும் வகையில் ந.அதியமான் மேற்கொண்ட ஆய்வு அமைகிறது (2000). இவரது ஆய்வு மூலம் இன்றும் மன்னார் வளைகுடாப் பகுதியில் எவ்வித அறிவியல் சார்ந்த நீர்மூழ்கு கருவிகளும் இன்றிக் கடலில் மூழ்கிச் சங்கு எடுக்கின்றனர் என்பது வியப்பளிப்பதாக உள்ளது.

இப்பகுதிப் பரதவர்கள் இன்றும் 30-35 அடி ஆழம் வரை சென்று 50-55 வினாடிகள் கடலின் அடியில் தங்கிச் சங்கு சேகரித்து வருகின்றனர். எனவே சங்க காலத்தில் அறிவியல் சார்ந்த கருவிகள் இன்றி நீரில் மூழ்கி முத்துக்குளித்திருக்க முடியும் என்பது இதன்மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது. இருப்பினும் முத்துக் குளித்தல் நுட்பம் தொடர்பான செய்திகள் சங்க இலக்கியங்களில் கிடைக்கவில்லையாதலால் சங்ககால முத்துக் குளித்தல் பற்றி அதிகமாக எடுத்துரைக்க இயலாது. ஆயினும் சங்க இலக்கியம், மகாவம்சம் மற்றும் மேலை நாட்டவர் குறிப்புகளிலிருந்து பாண்டிய நாட்டு முத்துகள் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டன என்பதை அறியலாம்.

## மணிகள் செய்தல்

தமிழகத்தில் சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய தொழில்களில் ஒன்று மணிகள் செய்தல். பெருங்கற்படைச் சின்னங்களில் கிடைக்கின்ற ஏராளமான மணிகளையே இதற்குச் சான்றாகக் குறிப்பிடலாம். மணிகள் செய்தல் என்பது மூன்று நிலைகளைக் கொண்டது. அரிய மணிக்கற்கள் நிலவியலில் ஏற்பட்ட எண்ணற்ற வேதியியல், இயற்பியல் காரணமாகப் பாறைகளுக்கு இடையே தோன்றுபவையாகும். இவ்வகைப் பாறைகள் தொடர்பான ஆழ்ந்த அறிவு பெற்றிருந்தால் மட்டுமே அவற்றின் இருப்பிடமறிந்து கண்டெடுத்து மணிகள் செய்ய இயலும். எனவே அரிய மணிகள் விளையுமிடம் அறிந்து அவற்றை வாழ்வியலுக்குப் பயன்படுத்தும் நிலை முதல் நிலை ஆகும். இரண்டாவது, இவ்வரிய கல்மணிகள் ஒவ்வொன்றும் சில இய்ற்பியல் வேதியியல் . கூறுகள் கொண்டவை. இத்தன்மையை ஒருவர் அறிந்திருந்தால் மட்டுமே அவற்றை ஆபரணப்பொருட்களாக மாற்ற இயலும். எனவே அரிய மணிகள் பற்றிய அறிவியல் சார்ந்த பின்புலம் (Gemmology) தேவை. மூன்றாவது நிலை என்பது இவற்றை வணிகத்திற்குப் பயன்படுத்தும் வகையில் தொழில் நுட்பத்தைக் கொண்டு வடிவமைப்பது ஆகும். இவற்றைச் சங்ககாலத் தமிழ் மக்கள் நன்கு உணர்ந்திருந்தனர் என்பது குறிப்பாகக் கொடுமணல் அகழாய்வு மூலம் உறுதிசெய்யப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் கையாளப்பட்டுள்ள மணி, காசு, காணம் என்ற சொற்களின் பின்புலத்தை அறியாமலேயே சில இடங்களில் இச்சொற்கள் குறித்துக் கருத்துகள் வெளிப்படுத்தப் பட்டுள்ளன. இங்கு இம்மூன்று சொற்களின் உண்மை நிலையைப் புரிந்து கொள்ளவேண்டியது அவசியமாகிறது. காரணம் சங்க இலக்கியத்தில் பயின்று வரும் இச்சொற்கள் வெளிப்படுத்தும் தொழில்நுட்பத்தினை அப்பொழுதுதான் புரிந்து கொள்ள இயலும் என்பதால் மணி, காசு, காணம் தொடர்பான சொற்கள் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

'மணி' என்ற சொல் நூலில் மாலையாகக் கோத்து அணிந்து கொள்ளும் ஆபரணம் என்ற நிலையிலேயே பெரும்பாலும் பொருள் கொள்ளப்பட்டுள்ளது. ஆனால் சங்க இலக்கியத்தில் *381* இடங்களில் இச்சொல் பயின்று வரும்

நிலையைப் பார்க்கும்பொழுது இயற்கையாகக் கிடைக்கும் கற்களையே இது குறித்தது எனலாம். புறப்பாடல் (202:1-8) கலைமான் ஒன்று ஓடுகின்றபொழுது அதன் குளம்படிபட்டு மணிகள் தெறித்து மிளிர்வதாகக் குறிப்பிடுகிறது. *பதிற்றுப்பத்து* (21:20-23) சேரமன்னனுக்குச் சொந்தமான செருப்பு மலையில் ஆநிரை மேய்க்கச் செல்கின்ற முல்லை நிலத்துக் கோவலர்கள் மிளிரும் கதிர்மணிகளைப் பெற்றதாகக் குறிப்பிடப்படுகிறது. இன்றும் காங்கேயத்திற்கு வடமேற்கே ஐந்து கல் தொலைவில் அமைந்துள்ள சிவன்மலை, பெருமாள்மலை என்ற இரு குன்றுகளிலும் மணிகளை மக்கள் சேகரித்து வருகின்றனர் என்பதை ஈண்டு நினைவு கூரவேண்டும். அதேபோன்று சேர நாட்டு ஏராளர்கள் நிலத்தை உழுகின்ற பொழுது அக்கொழுவின் வழி (நாஞ்சில் ஆடிய கொழுவழி) திருமணிகள் கிடைப்பதாகப் *பதிற்றுப்பத்து* குறிப்பிடுகிறது. இன்றும் அத்தகைய மணிகள் கொடுமணலைச் சுற்றியுள்ள ஊர்ப் பகுதிகளில் கிடைப்பது சங்கப் பாடலுக்கு வலுசேர்க்கின்றது. இதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் எவ்வகைப் பாறைகளில் மணிகள் கிடைக்கும் என்ற குறிப்பும் காணப்படுகின்றது. பொதுவாக இவை பளிங்குக் கற்களுக்கிடையே அதிகமாகக் கிடைக்கும். இதையே *நற்றிணையும்* (243:3), *ஐங்குறுநூறும்* (233:2-4) வான் பளிங்குக்கு இடையே திருமணிகள் கிடைப்பதாகக் குறிப்பிடுகின்றன. சேர மன்னனுக்குச் சொந்தமான கொல்லிமலை மீது மாலை நேரத்துச் சூரியக் கதிர்கள் படுவதால் அம்மலையின் கண் உள்ள மணிகள் இமைப்பதாக *அகநானூற்றுப்* பாடல் (213:11-15) குறிப்பிடுகிறது. மேலும் மலை நிலத்து மக்களான கானவர்கள் கிழங்கிற்காகத் தோண்டும் பொழுது மணிகள் வெளிப்படுவதாகக் *குறுந்தொகைப்* பாடல் (379: 1-3) ஒன்று சுட்டுகிறது. அதேபோன்று யானைத்தந்தமான வெண்கோட்டைக் கொண்டு நிலத்தைத் தோண்டி மணிகள் எடுத்தாக அகப்பாடல் (282:1-10) ஒன்று தெரிவிக்கிறது. மேற்கூறிய மணிகள் தொடர்பான குறிப்புகள் அனைத்தும் இவை இயற்கையாகக் கிடைப்பதையே வலியுறுத்துகின்றன. இவற்றை நூலில் கோத்து மாலையாகப் பயன்படுத்தியதாகக் குறிப்பிடவில்லை. எனவே மணி என்ற சொல் சங்ககாலத்தில் இயற்கையாகக் கிடைக்கும் அரிய கல்மணியையே குறிக்கிறது எனலாம். கொடுமணலுக்கு அருகில் அறச்சலூர் மலையில் கிடைத்த கி.பி. இரண்டாம் நூற்றாண்டு எழுத்தமைதியில் எழுதப்பட்ட தமிழ்ப் பிராமிக் கல்வெட்டில் வரும் வண்ணக்கன் ஒருக்கால் மணிகளைத் தெரிவு செய்வதில் வல்லவராக இருந்திருக்கலாம். இதே போன்று

இவ்வரிய மணிகளைத் துளையிடும் வல்லுநரைத் திருமணிக்குயினர் என *மதுரைக்காஞ்சி* (511) குறிப்பிடுகின்றது. இவ்வரிய மணிகள் கொண்டு மண்டைகள் (bowl) செய்யப்படுவதை "*மணிசெய் மண்டை*" என *அகநானூற்றுப்* பாடல் சுட்டுவதன் மூலம் அறியலாம் (அகம்:105:5). *பட்டினப்பாலை* சில மணிகள் வடக்கிலிருந்து வந்ததை "*வடமலைப் பிறந்த மணி*" எனக் குறிப்பிடுகிறது. சங்க காலத்தில் வட நாட்டிலிருந்து மணிகள் இறக்குமதி செய்யப்பட்டதையே இது குறித்தது எனலாம். கொடுமணலில் கிடைத்த சில அரிய கல்மணிகளான வைடூரியம் (Lapis lauzli), சூது பவளம் (carnelian beads), அகேட் (agate) போன்றவை வட நாட்டில் மட்டுமே விளைபவை. குறிப்பாக சூதுபவளம் குஜராத் மற்றும் மகாராட்டிர மாநிலத்திலும், வைடூரியம் ஆப்கானிஸ்தான் நாட்டிலும் விளைபவை. இவ்வரிய கற்கள் அங்கிருந்து தருவிக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டதைப் *பட்டினப்பாலை* வரிகளும், கொடுமணல் கண்டுபிடிப்புகளும் நமக்குத் தெளிவாக உணர்த்துகின்றன. மேற்கூறிய அனைத்துச் செய்திகளும், குறிப்புகளும், சான்றுகளும் மணி என்ற சொல் சங்க இலக்கியத்தில் இயற்கையாகக் கிடைக்கும் "கல்" என்ற பொருளிலேயே கையாளப்பட்டுள்ளது என்பதை உணர்த்து கின்றன.

மணி என்பது அரிய கல் என்ற பொருளில் பயன் படுத்தப்பட்டிருந்தால் நூலில் கோத்து மாலையாக அணியும் ஆபரணத்திற்கு எந்தச் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது. சங்க இலக்கியத்தை ஊன்றிப்பார்க்கும்பொழுது இதற்கு இணையான சொல்லாகக் "காசு" என்ற சொல்லைப் பயன்படுத்தியிருப்பதை அறியமுடிகிறது. இக்"காசு" என்ற சொல் சங்க இலக்கியத்தில் 13 இடங்களில் பயின்று வருகிறது. *அகநானூறு* (315:12) பளிங்கினால் செய்யப்பட்ட காசுகள் (quartz beads) ஒரு நூலில் கோக்கப்பட்டிருந்ததைக் குறிப்பிடுகிறது. மேலும் மணிக் கற்களால் காசு (semi presious stone beads) செய்யப்பட்டதை மணிக்காசு என்று அகப்பாடல் (293:7) சுட்டுகிறது. இங்கு மணிக்காசு என்ற சொற்றொடரை ஊன்றிப் பார்க்க வேண்டும். இது "மணி" மற்றும் "காசு" என்ற இரு சொற்களால் உருவானது. இரண்டும் ஒரே பொருளைத்தரும்பட்சத்தில் இவ்விரு சொற்களையும் பயன்படுத்தத் தேவையில்லை. மணி

என்பது அரிய கற்களையும் (gems stone), காசு என்பது நூலில் கோத்து அணியத்தக்க அமைப்பினையும் ஆபரணத்தையும் (beads) குறித்து நின்றதால் அரிய கல்மணிகளால் செய்த ஆபரணத்தை மணிக்காசு என்று இலக்கியம் குறிப்பிடுகிறது. இதேபோன்று 'பளிங்குக் காசு' என்ற சொல் பளிங்குக் கற்களால் (quartz) செய்யப்பட்ட காசு என்று பொருள்படும்.

பொற்கொல்லர் கையால் பிடித்துக்கொண்டு காசின் ஊடே நூல் செலுத்துவது கிளியின் அலகில் வேப்பம் பழம் இருப்பதற்கு ஒப்பானதாகக் *குறுந்தொகை* குறிப்பிடுகிறது. இங்குக் காசு என்பது துளை கொண்டு இருப்பதை உணர்த்துகிறது. மற்றொரு இடத்தில் இது கொன்றைப் பூவின் மொட்டுப் போன்று இருப்பதாகக் குறிப்பிடப்படுகிறது (*குறுந்தொகை* 148:3). கொன்றைப் பூ மஞ்சள் நிறத்தில் உருண்டை வடிவில் இருப்பதை நினைவிற் கொள்ளவேண்டும். இக்காசுகளில் சிறிய பரல்கள் இடப்பட்டு ஓசை எழுப்பப்படுவது 'கிண்கிணி' என்று குறிப்பிடப்படுகிறது (புறநானூறு 198:5). "கால் பெயல் அல்குல் காசு" (*நற்றிணை* 66:9); "பொலம் பசும் பாண்டிற்காசு நிறை அல்குல்"; "பொலம் பல்காசு அணிந்த அல்குல்" போன்ற சொற்றொடர்கள் தங்கத்தால் செய்யப்பட்ட காசுகள் இடையில் அணியப்பட்டதைத் தெரிவிக்கின்றன. எனவே "காசு" என்ற சொல் சங்க இலக்கியத்தில் கையாளப் பட்ட இடத்தையும் அமைப்பையும் பார்க்கும்பொழுது இவை நாம் நினைத்துக் கொண்டிருப்பதுபோல் நாணயம் என்ற பொருளில் பயன்படுத்தப்படாமல் துளையிடப்பட்ட ஆபரண மாகவே பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இதுவரை தமிழகத்தில் கிடைத்துள்ள நாணயங்கள் யாவும் சதுரமாகவும், வட்டமாகவும், தமிழ்ப் பிராமி எழுத்துப்பொறிப்புடனும், யானை, மீன், வில், அம்பு, மலை, ஆறு போன்ற சின்னங்களுடனும் காணப்படுகின்றன. எனவே சங்க இலக்கியத்தில் காசு என்பது நாம் நினைப்பதுபோல் நாணயத்தைக் குறித்து நிற்கவில்லை எனலாம். காசு நாணயத்தைக் குறிக்கவில்லையெனில் நாணயத்தைக் குறிக்க எச்சொல் பயன்படுத்தப்பட்டது என்பதை அறியவேண்டியது அவசியமாகிறது. சங்க இலக்கியத்தில் நேரடியாக இது குறித்த சொல் கிடைக்கவில்லையெனினும் பதிற்றுப்பத்தின் பதிகத்தில் இது "காணம்" என்ற பெயரில் பயின்று வருகிறது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் நச்செள்ளையாருக்கும், செல்வக்கடுங்கோ வாழியாதன்

கபிலருக்கும், பெருஞ்சேரல் இரும்பொறை அரிசில் கிழாருக்கும், சேரல் இரும்பொறை பெருங்குன்றூர் கிழாருக்கும் பல்லாயிரம் காணங்கள் வழங்கியதாகப் *பதிற்றுப்பத்தின்* பதிக வரிகள் குறிப்பிடுவதால் நாணயம் காணம் என்ற சொல்லால் குறிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை அறியலாம். *மணிமேகலை* சுட்டும் (23:48,53) "காணமிலிக் கையெதிர் கோடலும்" என்ற வரியும் நாணயத்தையே குறிக்கிறது எனலாம். *தேவாரப்* பாடல்களில் வரும் "பாடிப் பெற்ற பரிசில் பழங்காசு" (5.505.1), "காசு அருளிச் செய்தீர்" (7.473.4), "வாசிதீரவே காசு நல்குவீர்" (1.9.2.1) போன்ற செற்றொடர்கள் நாம் இப்பொழுது பயன்படுத்தும் நாணயம் என்ற பொருளில் வருகின்றன. எனவே கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு வரை காசு ஆபரணம் என்ற பொருளிலேயே கையாளப்பட்டுள்ளதைக் காண்கிறோம். எனவே மணி, காசு, காணம் ஆகிய மூன்று சொற்களும் ஒன்றோடொன்று தொடர்புடையதாகவும், அரிய மணிக்கல், ஆபரணம், நாணயம் என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் ஆளப்பட்டு வந்துள்ளதையும் அறியமுடிகிறது. "மணி", என்ற சொல் அரிய மணிக்கற்களைக் குறித்து நிற்பதால் சங்க இலக்கியத்தில் இச்சொல் பயன்படுத்தப்பட்ட இடம் கூர்ந்து நோக்கப்பட்டு இம்மணிகள் கொண்டு செய்யப்பட்ட ஆபரணங்கள் சமூகத்தில் பெற்றிருந்த உயர் இடம் மற்றும் தொழில் நுட்பம் ஆகியவற்றை இனிக் காண்போம்.

"*கொடுமணம் பட்ட .. நன்கலம்*" (பதிற்று 67) என்று கபிலரும் '*கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்*' என்று (பதிற்று 74) அரிசில் கிழாரும், சங்ககால ஊரான கொடுமணலில் செய்யப்பட்ட விலையுயர்ந்த மணிகளைப்பற்றிப் பேசும் *பதிற்றுப்பத்துப்* பாடல் வரிகளுக்கு வலுசேர்க்கும் வகையில் கொடுமணல் அகழாய்வில் கிடைத்த எண்ணற்ற மணிகள் சான்றுகளாக உள்ளன. சங்க காலத்தில் மணிக்கற்கள் கொண்டு ஆபரணங்கள் செய்யும் தொழில் நுட்பத்தில் தமிழர்கள் சிறப்புற்று விளங்கியிருந்தனர் என்பதை இச்செய்திகளால் உணரலாம். மேலும் கொடுமணலில் கிடைத்த சான்றுகளை உற்று நோக்குவதன் மூலம் சங்ககாலத் தொழில் நுட்பத்தை மீள் உருவாக்கம் செய்ய இயலும்.

கொடுமணலில் இரும்புத் தொழிலைப் போன்றே அரிய கற்களைக் கொண்டு மணிகள் செய்யப்படும் தொழிற் கூடங்கள் சிறந்து விளங்கியுள்ளன. இதைச் சங்கப்பாடல்களும் உறுதி

செய்கின்றன. இப்பகுதியில் காணப்படும் ரோம நாட்டு வணிகத்தொடர்பைப் பார்க்கும்பொழுது இவை மேலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பது புலனாகிறது. நிலப்பொதியியல் அமைப்பில் கொடுமணல் அரிய கற்கள் கிடைக்கும் காங்கேயம் வட்டாரத்தில் அமைந்துள்ளது (படம் 29). "பெரில்" (beryl) எனப்படும் பச்சைக்கல்லுக்குப் பெயர் பெற்ற இடமாகிய படியூரும் "சபையர்" (saphire) என்றழைக்கப்படும் நீலக்கல் கிடைக்கும் இடமாகிய சிவன்மலையும், "குவார்ட்ஸ்" (quartz) என்றழைக்கப்படும் பளிங்குக்கல் கிடைக்கும் வெங்கமேடும், அரசம்பாளையமும் கொடுமணலைச் சுற்றியே அமைந்துள்ளன.




படம் 29 அரிய கல்மணிகள் கிடைக்கும் இடங்கள்

இதனால் இங்குப் பச்சைக்கல், நீலக்கல், பளிங்கு, சூதுபவளம், ஜேஸ்பர், அகேட், குருந்தம், வைடூரியம், மாவுக்கல் முதலிய அரியகற்களைக் கொண்டு மணிகள் செய்யும் தொழில் சிறப்பாக நடந்து வந்துள்ளது. மேற்கூறியவற்றில் வைடூரியம், சூதுபவளம், அகேட் போன்றவை மூலப் பொருட்காளாக இந்தியாவின் பிறபகுதியிலிருந்து தருவிக்கப்பட்டு இங்கு ஆபரணங்களாக உருவாக்கப்பட்டுள்ளன.

மணிகளில் முற்றுப்பெற்றவை, முற்றுப்பெறாதவை, மெருகேற்றப்பட்டவை, மெருகேற்றப்படாதவை, துளையிட்டவை, துளையிடப்படாதவை எனப் பலநிலைகளில் கிடைப்பதும், மூலப்பொருட்கள் கட்டிகளாகவும், சில்லுகளாகவும் கிடைப்பதும் மணிகள் கொடுமணலிலேயே தயாரிக்கப்பட்டன என்பதற்குச் சான்று பகர்வனவாக உள்ளன.

## தொழில் நுட்பம்

முதலில் மூலப்பொருட்களைக் கட்டிகளாக உடைத்து எடுத்து அக்கட்டிகளிலிருந்து சிறு துணுக்குகள் அல்லது சில்லுகள் எடுக்கப்படுகின்றன. பின் இவை மீண்டும் மிகச்சிறிய மணிகள் செய்யும் அளவிற்குச் சிறுகட்டிகளாகப் பிரித்தெடுக்கப் படுகின்றன. இத்தகைய சில்லுகளில் பல தம்முடைய ஒழுங்கற்ற வடிவம், கனம் ஆகியவற்றின் அடிப்படையில் பயனற்றவையாக ஒதுக்கப்பட்டுத் தகுதிவாய்ந்த சில்லுகளிலிருந்து சில்லின் தன்மைக்குத் தக்கவாறு கரடுமுரடான நிலையில் மணிகள் தேவையான வடிவில் உருவாக்கப்படுகின்றன (படம் 30, 31).



**படம் 30 கொடுமணலில் அரிய கல்மணிகள் உருவாக்கும் முறை தெரிவிக்கும் கல்**

பின் மணிகள் நன்றாகத் தேய்க்கப்பட்டு மெருகூட்டப் படுகின்றன. மெருகூட்டுவதற்குத் தேவையான வட்ட வடிவச்

சக்கரத்தை அரக்குக் கொண்டும், குருந்தம் (corrundum) கொண்டும் செய்கின்றனர். இதை அகப்பாடல் (359:9-10) "சிறு காரோடன் பயனொடு சேர்த்திய கல்" என்று குறிப்பிடுவதால் இத்தகைய பொருட்களைச் செய்பவர்கள் சங்ககாலத்தில் சிறுகாரோடர் என்றழைக்கப்பட்டிருப்பது புலனாகிறது. குருந்தம் பொடி தடவப்பட்ட சக்கரத்தின் உதவியுடன் நன்கு மெருகேற்றப்பட்ட மணிகள் பின்னர்த் துளையிடப்பட்டுள்ளன. மயிரிழை அளவு துளைகள் கொண்ட மணிகள் கொடுமணலில் கிடைப்பதால் இத்தொழில் நிபுணத்துவம் பெற்ற வல்லுநரே இத்துளைகளை இட்டிருக்கவேண்டும் எனத் தெரிகிறது, அதனால்தான் இலக்கியங்களில் திருமணிக்குயினர் சிறப்பிடம் பெறுகின்றனர். துளையிடப்பட்டு மெருகேற்றப்பட்டவுடன் மணி செய்வது முற்றுப்பெறுகிறது (படங்கள் 32-37).



**படம் 31 கொடுமணலில் கல்மணிகள் உருவாக்கும் முறை தெரிவிக்கும் பளிங்குக்கல்**

சங்க இலக்கிய வரிகளை மெய்ப்பிக்கும் வண்ணம் அகழாய்வுச் சான்றுகள் அமைவதால் இம்மணித்தொழில் சங்ககாலத்தில் சிறப்புற்று இருந்திருப்பது தெளிவாகிறது. இத் தொழில் தமிழகத்திற்கு ஏராளமான அன்னியச் செலாவணியை ஈட்டித் தந்தது.



படம் 32 காங்கயத்தில் கல்மணிகள் உருவாக்கும் பட்டறை



படம் 33 காங்கயத்தில் கல்மணிகள் உருவாக்கும் பட்டறை



படம் 34 காங்கயத்தில் கல்மணிகள் உருவாக்கும் பட்டறை



படம் 35 காங்கயத்தில் கல்மணிகள் உருவாக்கும் பட்டறை



படம் 36 காங்கயத்தில் கல்மணிகள் உருவாக்கப் பயன்படுத்தும் கருவிகள்



படம் 37 காங்கயத்தில் கல்மணிகள் உருவாக்கும் பட்டறை

## இரும்புத் தொழில் நுட்பம்

சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கிய மற்றொரு தொழில் இரும்புத் தொழில் ஆகும். இந்தியாவின் மற்ற மாநிலங்களில் குறிப்பாக வட மாநிலங்களில் செப்புத்தாது அதிகமாகக் கிடைப்பதால் அதன் பயன்பாடு அதிகமாகி அப்பகுதி மக்களின் வாழ்க்கைத்திறன் மேம்படத் துணை புரிந்தது. தென்னகத்தில் செப்புத்தாது கிடைக்காததால் அதனாலான இக்கருவிகளைப் பெறுவதிலும் அதன்மூலம் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்திக் கொள்வதிலும் சிரமம் ஏற்பட்டது. ஆனால் தென்னகத்தில் இரும்புத்தாது ஏராளமாகக் கிடைக்கிறது. இரும்புத் தாதுவிலிருந்து இரும்பைப் பிரித்தெடுக்கும் தொழில் நுட்பம் அறிந்தவுடன் தென்னக வரலாற்றிலேயே ஒரு புரட்சிகர மாற்றம் ஏற்பட்டது எனலாம். இத்தொழில் நுட்பம் பற்றி அண்மைக்காலத்தில் கிடைத்த அறிவியல் சார்ந்த சான்றுகளின் அடிப்படையில் இங்கு ஆராய்வோம். பிளினி தமது *நேச்சுரல் ஹிஸ்டரி* என்ற நூலில் இரும்புப் பொருட்கள் ரோமநாட்டிற்குச் சேரநாட்டிலிருந்து வந்ததாகக் குறிப்பிடுகிறார். மேலும் இரும்பு தொடர்பான தொழில்நுட்பச் சொற்களான இரும்பு (*அகம் 4:3*); எஃகு (*புறம் 26:5-6*); கொல்லன், கருமை கொல்லன் (*புறம் 21:8*), உலை (*பெரும்பாணாற்றுப்படை 437*); உலைக்கூடம் (*புறம் 170:17*); உலைக்கல் (*புறம் 170:11*); துருத்தி, விசைவாங்கி, மிதியுலை (*பெரும்பாணாற்றுப்படை 206,207*); குடம், குறடு, குறுக்கு போன்றவை சங்ககாலத்தில் இத்தொழில் சிறப்புற்றிருந்ததை தெளிவுபடுத்துகின்றன. இரும்பை எஃகாக மாற்றுவதற்குத் தனி நிபுணத்துவம் பெற்றிருக்கவேண்டும். இதைச் சங்ககால மக்கள் பெற்றிருந்தனர் என்பதை அண்மைக்கால ஆய்வுகள் புலப் படுத்துகின்றன.

இரும்பை எஃகாக மாற்றுவது என்பது இரும்பில் சமச்சீரான அளவில் தேவைப்படும் அளவிற்குக் கரியத்தைச் (corbon) சேர்ப்பதாகும். இயற்கையாகச் சில இடங்களில் கிடைக்கின்ற இரும்புத்தாதுக்களில் கரியம் அதிகமாகவும், சில இடங்களில் குறைவாகவும் இருக்கும். இவ்விதம் இரும்புத் தாதுக்களில் கரியம் அதிகமாக இருக்குமிடத்தில் அதைக் குறைக்கவும், குறைவாக இருக்குமிடத்தில் அதிகமாக்கவும் வேண்டும். முன்னதை டிகார்பனைசேசன் முறை (decarbonisation) என்றும், பின்னதைக் கார்பனைசேசன் முறை (carbonisation) என்றும் உலோகவியலார் கூறுவர். தமிழகத்தில் கிடைக்கும்

இரும்புத்தாதுக்களில் கரியம் அதிகமாகக் காணப்படுவதால் டீகார்பனைசேசன் என்ற முறையே இங்குக் கடைப்பிடிக்கப் பட்டது. மேலும் இரும்பு செய்யவும், எஃகு செய்யவும் இருவேறு உலைக்கலங்கள் பயன்படுத்தப்படும். இரும்புத் தாதுவிலிருந்து இரும்பை உருக்கி எடுக்கும் உலைக்கலங்கள் நிலத்திற்கு மேல் உருவாக்கப்பட்டிருக்கும் (படம் 38). இதில் சுடு மண்ணால் செய்யப்பட்ட ஊது உலைகள் அதிகமாகக் காணப்படும். இத்தகைய உலைக்கலங்களில் இருந்து எடுக்கப்பட்ட இரும்பைப் புடமிடும் கலத்தில் (படம் 39) இட்டு நிலத்திற்குள்ளே அமைக்கப்பட்ட உலைக்கலங்களில் வைத்து எஃகாக மாற்றம் செய்வர். இவ்விருவகை உலைக்கலங்களும் கொடுமணலில் கண்டெடுக்கப்பட்டன.



படம் 38 கொடுமணலில் கிடைத்த உலைக்கலம்

மேலும் இரும்பை உருக்க $1100^{\circ}$ சென்டிகிரேட் வெப்பநிலையும், எஃகாக மாற்ற $1300^{\circ}$ சென்டிகிரேட் வெப்பநிலையும் தேவை. இந்த வெப்பநிலையைக் கொடுமணலில் கிடைத்த உலைக்கலங்கள் அடைந்தன என்பதை இலண்டன் பல்கலைக்கழகத்தின் தொல்லியல் பள்ளியின் ஆய்வாளர் சாரதா சீனிவாசன் அவர்கள் நடத்திய உலோகவியல் பகுப்பாய்வும் (Sharada Srinivasan 1994:44-59), இந்தியத் தொழில் நுட்பக்கழகத்தின் ஆய்வாளர்கள் ரகுநாதரால், சசிசேகரன்

ஆகியோர் நடத்திய பகுப்பாய்வும் தெளிவாக உணர்த்துகின்றன (Raghunatha Rao and Sasisekaran 1997:347-359). மேலும் ரகுநாதராவ், சசிசேகரன் ஆகிய இருவரும் இணைந்து தமிழ்நாட்டில் தகடூர்ப் பகுதியில் குண்டூர் என்ற இடத்தில் கிடைத்த உலைக்கலங்கள் மீது நடத்திய உலோகவியல் ஆய்வு அவ்வூரில் வார்ப்பு இரும்பு செய்யப்பட்டதை நமக்கு உணர்த்துகிறது. இவ்வார்ப்பிரும்பு செய்யத் தனி நிபுணத்துவம் வேண்டும். காரணம், *1300°* சென்டிகிரேட்டில் இரும்பை உருக்கி அதே வெப்பநிலையில் நீண்ட நேரம் வைத்திருக்கவேண்டும். இத்தகைய நிபுணத்துவத்தைத் தமிழர்கள் பெற்றிருந்தனர் என்பதை மேற்கண்ட ஆய்வு தெளிவுபடுத்துவதுடன் *குறுந்தொகைப்* பாடலில் *(155)* இது குறித்து வரும் செய்திகளும் இவ்வாய்வுக்கு வலுசேர்க்கின்றன.




**படம் 38 கொடுமணலில் கிடைத்த புடமிடும் கலம்**

எனவே எஃகும், வார்ப்பு இரும்பும் மேலை நாடுகளுக்கு மிகுதியாக ஏற்றுமதி செய்யப்பட்டு அன்னியச் செலாவணி ஈட்டப்பட்டுள்ளது. இவை உள்நாட்டின் பயன்பாட்டிற்கும் வந்ததால் தமிழக மக்களின் வாழ்க்கை நிலையில் பல்வேறு புரட்சிகர மாற்றங்கள் தோன்றின. மேற்கூறிய தொழில்நுட்பத்தில் திறமைமிக்கவர்களாகத் தமிழக மக்கள் திகழ்ந்துள்ளதுபோல் ஆடை நெய்வதிலும், சங்கு அறுப்பதிலும், நீர்ப்பாசனத்திலும், தமது தொழில் நுட்பத்திறனைக் கொண்டிருந்தனர் என்பதை எண்ணற்ற தொல்லியல் சான்றுகள் மெய்ப்பிக்கின்றன.

# Bibliography


Abeyratne, M and O.C. Wickramasinghe 1990 Emission Spectroscopy in Determining the Origin and the Composition of Ancient Glazed Tiles found During Excavation at Abhagiri Vihara, Anuradhapura, Paper presented in the International Seminar, Sri Lanka, July 7-13.

Allchin, F.R., 1995 *The Archaeology of Early Historic South Asia - The Emergence of Cities and States*, Cambridge University Press, Cambridge.

Ardika, I.W., P.S.Bellwood, R.A.Eggleton and D.J.Ellis, 1993 A Single Source for South Asian Export-Quality Rouletted ware?, *Man and Environment,* vol.18(1), pp.101-109.

Arkell, A.J., 1936 "Cambay and the Bead Trade", *Antiquity*, vol.10(39), pp.292-305.

Arunachalam, S., 1952 *The History of the Pearl Fishery of the Tamil Nadu Coast*, Annamalai Historical Series No.10, Annamalai University, Annamalainagar.

Athiyaman, N., 1996a "Sanga Ilakkiyankalil kalankarai vilakkankal", paper presented in the Seminar on *Tamil Canrukalum Varalarru Aaivum*, Tamil University, Thanajvur, 22nd March.

Athiyaman, N., 1996b "Kal nankurangal (Stone Anchors), *Journal of Tamil Nadu Archaeological Society, Avanam,* vol.7, pp.129-136.

Athiyaman, N., 1997a "Test Results of the Ancient Bricks of Poompuhar, Tamil Nadu", S.R.Rao (ed.) *An Integrated Approach to Maritime Archaeology*, National Institute of Oceanography, Goa.

Athiyaman, N., 1997b *Traditional Pearl and Chank Diving in Mannar Gulf*, Report submitted to the Nehru Trust, New Delhi.

Athiyaman, N., 2000 *Pearl and Chank Diving of South Indian Coast*, Tamil University, Thanjavur.

Babington, J., 1823 "Descriptions of the Pandoo Coolies in Malabar", *Transactions of the Literary Society of Bombay*, vol.3, pp.324-330.

Bandaranayake, S., 1992 "The settlement pattern of the Proto-historic-Early Historic interface in Sri Lanka", C.Jarrige (ed.), *South Asian Archaeology* 1989, pp.15-24, Prehistory Press, Madison Wisconsin.

Banerjee, N.R., 1956 "The Megalithic Problem of Chingleput in the recent Exploration", *Ancient India*, no.12, pp.21-34.

Beck, Horace C., 1930 "Notes on Sundry Asiatic Beads", *Man*, vol.30 (34), pp.166-182.

Begley, V., 1973 "Proto-historic Material from Sri Lanka (Ceylon) and Indian Contacts", A.R.Kennedy and George L.Possehl (ed.), *Ecological Backgrounds of South Asian Pre-history*, pp.193-194, Cornell University, Cornell.

Begley, V., 1993 "New Investigations at Port Arikamedu", *Journal of Roman Archaeology*, vol.6, pp.93-108.

Begley, V., J.R.Lukacs and K.A.R.Kennedy, 1981 "Excavations of Iron Age Burials at Pomparippu, 1970", *Ancient Ceylon,* vol.4, pp.49-132.

Biswas, A.K., 1986 "Vaidurya, Marakata and other Beryl Family Minerals: Etymology and Traditions in Ancient India", *Indian Journal of History of Science,* vol.29(2), pp.139-154.

Biswas, A.K., 1994a "Non-Gem Minerals in Pre-modern India", *Indian Journal of History of Science,* Vol.29 (3), pp.389-420.

Biswas, A.K., 1994b "Vaidurya, Marakata and other Beryl Family Gem Minerals: Etymology and Traditions in Ancient India", *Indian Journal of History of Science,* 29(2):139-154.

Boperachchi, Osmund, 1996, "Seafaring in the Indian Ocean - Archaeological evidence from Sri Lanka", H.P.Ray and J.F.Salles (ed.), *Tradition and Archaeology - Early Maritime Contacts in the Indian Ocean*, pp.59-77, Manohar Publishers and Distributors, New Delhi.

Bopearachchi, Osmund and Rajah.M.Wickremesinhe, 1999 *Ruhuna: An Ancient Civilization Re-visited – Numismatic and Archaeological Evidence on Inland and Maritime Trade,* Nugegoda, Sri Lanka.

Branfill, B.R., 1881 "Old slab stone monuments in Madras and Maisur, *Indian Antiquary*, vol.10, pp.47-100.

Bronson, B., 1986 "The making and selling of wootz - a crucible steel of India", *Archaeo-materials* 1(1):13-51.

Bronson, B., 1990 "Glass and Beads at Khuan Lukpad, Southern Thailand", *South Asian Archaeology 1986*, pp.213-230.

Buchanan, Francis, 1807 *A Journey from Madras through the Countries of Mysore, Canara and Malabar,* Asian Educational Services, New Delhi.

Caldwell, 1956 *A Comparative Grammar of the Dravidian Languages*, Madras,

Carswell, J., and M.Prickett, 1984 "Mantai 1980", *Ancient Ceylon,* vol.5, pp.3-80.

Casson, L., 1992 "Ancient Naval Technology and the Route to India", Vimla, Begley and R.De Puma ed., *Rome and India – the Ancient Sea Trade,* Oxford University Press, Delhi, pp.8-11.

Casson, Lionel, 2001 "New Light on Maritime Loans:P.Vinob G 40822", Ranabir Chakravarti (ed.), *Trade in Early India*, Oxford University Press, New Delhi.

Chakrabarti, D.K., 1978 "Lapis lazuli in Early India", *Man and Environment*, vol. 2, pp.51-58.

Champakalakshmi, R., 1975-76 "Archaeology and Tamil Tradition", *Puratattva*, vol. 8, pp.110-122.

Champakalakshmi, R., 1989 "Ideology and the State in South India", *Proceedings of the Andhra Pradesh History Congress, 13th Session*, Srisailam.

Chambakalakshmi., 1996 *Trade, Ideology and Urbanization :South India 300 BC to AD 1300,* Oxford University Press, Delhi.

Childe, V.Gardon, 1948 "Megaliths", *Ancient India*, vol.4, pp.5-13.

Coningham, R.A.E., 1990 "Anuradhapura Citadel archaeological project, British sub-project, Anuradhapura Salgaha Watta preliminary report 1989-1990", *Ancient Ceylon,* vol.9, pp.23-48.

Coningham, R.A.E., and F.R.Allchin, 1992 "Preliminary report on the third season of Sri Lankan-British excavations at Salgaha Watta, July-September 1991", *South Asian Studies* vol.8, pp.157-167.

Coningham, R.A.E., *et.al.*,1996 "Passage to India? Anuradhapura and Early Use of Brahmi Script", *Cambridge Archaeological Journal*, 6(1):73-97.

Daraniyagala, Siran, 1992 *The Pre-history of Sri Lanka*, Department of Archaeology Sri Lanka, 2:739-750.

Deraniyagala, S.U., 1972 "The Citadel of Anuradhapura 1969: excavations in the Gedige area", *Ancient Ceylon,* vol.2, pp.49-169.

Deraniyagala, S.U., 1986 "Excavations in the Citadel of Anuradhapura: Gedige 1984, a preliminary report", *Ancient Ceylon,* vol.6, pp.39-47.

Deraniyagala, S.U., 1990 "Radio Carbon dating of early Brahmi script in Sri Lanka", *Ancient Ceylon,* Vol.11, pp.149-168.

Di Crocco Virginia M., 1996 References and Artifacts Connecting the Myanmar Area with Western and Central Asia and China Proper via the Ancient Southwestern Silk Route from ca. 3rd century BC to the 13th century CE, in *Ancient Trades and Cultural Contacts in Southeast Asia* (Amara Srisuchat Ed.), pp.161-180, Bangkok: Office of the National Culture Commission,Thailand.

Francis, Jr. Peter, 1996 "Beads, the Bead Trade and State Development in Southeast Asia", Amara Srisuchat (ed.), *Ancient Trades and Cultural Contacts in Southeast Asia,* pp.139-160, Office of the National Culture Commission,Thailand, Bangkok.

Geiger, W., and M.H.Bode, 1950 *The Mahavamsa or the Great Cronicle of Ceylon,* Ceylon Government Information Department, Colombo.

Ghosh, A., 1989 *Encyclopaedia of India Archaeology*, Indian Council of Historical Research, New Delhi.

Glover, I.C., 1989 *Early Trade Between India and Southeast Asia*, The University of Hull, U.K.

Glovar, I.C.,1996a "The Southern Silk Road:Archaeological Evidence for Early Trade between India and Southeast Asia", Amara Sirsuchat (ed.), *Ancient Trades and Cultural Contacts in Southeast Asia*, pp.57-94, Office of the National Culture Commission,Thailand, Bangkok.

Glover, I.C., 1996b "Recent archaeological evidences for early maritime contacts between India and Southeast Asia" H.P.Ray and J.F.Salles (ed.), *Tradition and Archaeology - Early Maritime Contacts in the Indian Ocean* pp.129-158, Manohar Publishers and Distributors, New Delhi.

Gurukkal, Rajan, 1989 "Forms of Production and Forces of Change in Ancient Tamil Society", *Studies in History*, vol. 5 (2), pp.159-175.

Gurumurthy, S., 2000 *Deciphering the Indus Script*, University of Madras, Chennai.

Gurunathan, V., 1993 "Canka Ilakkiyankalil Vaniyal Nutpankal (Technical aspects of Astronomy in Sangam Literature)", Rm.Sundaram and A.Elangovan (ed.) *Valarthamilil Ariviyal*, All India Scientific Tamil Association, Thanjavur.

Gurunathan, V., 2001 *Cankakala aracar varalaru*, Tamil University, Thanjavur.

Gururaja Rao, B.K.,1972 *The Megalithic Culture in South India*, Prasaranga, University of Mysore, Mysore.

Hardy, F., 1983 "Viraha-Bhakti: The early history of Krishna Devotion in South India", Oxford University Press.

Harrauer, H., and Sijpesteiju, P., 1985. "Ein Neues Dokument Zu Roms Indienhandel P.Vindob G.40822", *Anzhien*, vol.122, pp.124-155.

Hart, G.L., 1976a "Ancient Tamil Literature: its scholarly past and future", B.Stein (ed.) *Essays on South India*, New Delhi.

Hart, G.L., 1976b *Relation between Tamil and Classical Sanskrit Literature*, Wiesbaden.

Hunt, E.H., 1929 "Hyderabad Cairns and their Significance", *Journal of Royal Anthropological Institute*, 54:140-150.

Iyengar, Krishnaswami, S., 1918 *Beginning of South India Historiography*, Madras.

Iyengar, Srinivasa, P.T., 1983 *History of Tamils:from the earliest times to 1000 AD*, Asian Educational Services, New Delhi.

Jiayao, An., 1996 "Glass Trade in Southeast Asia", Amara Srisuchat (ed.), *Ancient Trades and Cultural Contacts in Southeast Asia)*, pp.127-138, Office of the National Culture Commission,Thailand, Bangkok.

Kailasapathy, K., 1968 "Tamil Heroic Poetry: A Comparative Study", *Proceedings of the Second International Conference of Tamil Studies*, Madras, 2:152-157.

Kanakasabhai, V., 1956 *The Tamils Eighteen Hundred Years Ago*, Madras, 2nd.ed.

Karashima, Noboru 1995 "Indian Commercial Activities in Ancient and Medieval South East Asia", Paper presented in the Plenary Session of the VIIIth International Conference - Seminar of Tamil Studies, Tamil University, Thanjavur, pp.1-25.

Karashima, Noboru, 2002 *Ancient and Medieval Commercial Activities in the Indian Ocean: Testimony of the Inscriptions and Ceramic-sherds* Taisho University, Tokyo.

Kasinathan, Natana, 1995 "Date of Sangam Literature", paper presented in the VIIIth International Conference - Seminar on Tamil Studies, January 1-4.

Kasinathan, Natana, 1997 "Antiquity of Sea Voyage in Tamil Nadu", paper presented in the First International Conference on Marine Archaeology of Indian Ocean Countries, Chennai.

Kasinathan, Natana, 1998 "Recent discoveries of Tamil Nadu State Archaeology Department", *Avanam*, vol. 9, pp. 153-154.

Kasinathan, Natana, 1999 *Poompuharum Katal akazhaivum* (Poompuhar and Underwater Excavations), Chennai.

Keene, Manuli, 1981 "The Lapidary Arts in Islam", *Expedition*, vol. 24(1), pp.24-38.

Krishnamurthy, R., 1997 *Sangam Age Tamil Coins*, Garnet Publications, Madras.

Krishnamurthy, R., 1998 "A note on Couterstruck Silver Coin of Makkotai", *Studies in South Indian Coins*, 8:35-39.

Krishnamurthy, Salva, 1994 *A History of Telugu Literature*, Madras.

Krishnaswami Iyengar, S., 1918 *Beginning of South India Historiography*, Madras.

Lal, B.B., 1962 "From the Megalithic to the Harappa: Tracing back the Graffiti on the pottery", *Ancient India* 16:4- 24.

Leshnik, Lawrence, S., 1974 *South Indian Megalithic Burials: Pandukal Complex*, Wiesbaden.

Mahadevan, Iravatham, 1994 "Ancient Tamil Contacts Abroad: Recent Epigraphical Evidence", *Journal of the Institute of Asian Studies,* vol.12(1), pp.136-155.

Mahadevan, Iravatham, 1995a "From Orality to Literacy: The Case of the Tamil Society", *Studies in History*, vol. 2, pp.173-188.

Mahadevan, Iravatham, 1995b "Old Sinhalese Inscriptions from Indian Ports: New Evidence for Ancient India - Sri Lanka Contacts", *Journal of the Institute of Asian Studies*, vol. 14(1), pp. 55-65.

Mahadevan, Iravatham, 1966 "Corpus of Tamil-Brahmi Inscriptions", R.Nagasamy (ed.), *Seminar on Inscriptions*, Madras, pp.57-73.

Mahadevan, Iravatham, 1998a "The Earliest Inscriptions of Kerala", Presidential Address of the XXIV Annual Congress of the Epigraphical Society of India, Trichur.

Mahadevan, Iravatham, 1998b "Ekiptu nattil tamilil elitiya taali" (On the Pottery inscription from Berenike), *Avanam* , vol. 9, pp.17-19.

Mahadevan, Iravatham, 2000 "Ancient Tamil Coins from Sri Lanka", *Journal of the Institute of Asian Studies,* vol. 17(2), pp.147-156.

Mahadevan, Iravatham, 2003 *Early Tamil Epigraphy:From the Earliest Times to the Sixth Century A.D.*, Cre-A, Chennai and The Department of Sanskrit and Indian Studies, Harvard University, Harvard.

Majeed, Abdul A., 1987 "A Note on Korkai Excavations", *Tamil Civilization*, vol. 2(1-2), pp.73-77.

Maloney, C., 1969 " The Paratavar:2000 years of culture dynamics of a Tamil caste", *Man in India*, vol. 49(1), pp.224-240.

Marr, J.R., 1985 *The Eight Anthologies: a study in early Tamil Literature*, Madras.

Maurizio Tosi and Marcello Piperno, 1973 "Lithic Technology behind the Ancient Lapis Lazuli Trade". *Expedition*, vol. 16(1), pp.15-23.

Mc Crindle, J.W., 1984 *The Commerce and Navigation of the Erythrean Sea*, Todays and Tomorrows Printers, New Delhi.

McCrindle, J.W., (ed.) 1901 *Ancient India as Described in the Classical Literature*, Westminister.

Nagasamy, R., 1981 "Ancient Tamil Epigraph found in South Arcot", *The Hindu*, Oct.9, 1981; "Avvaikku Nellikani inda Atiyaman kalvettu", *Dinamani*, Oct.12, 1981; "Asoka and the Tamil country - a New Link", *Indian Express*, Dec.6, 1981.

Narasimhaiah, B., 1980 *Neolithic and Megalithic Cultures in Tamil Nadu*, Sundeep Prakashan, Delhi.

Orton, N., 2003 "The early ceramics of Kantarodai", *Ancient Ceylon*, No.13, in press.

Paranavithana, S., 1970 *Inscription of Ceylon:Early Brahmi Inscriptions*, Colombo:Department of Archaeology, Ceylon.

Parker, H., 1909 *Ancient Ceylon*, Luzac, London.

Pillay, K.K., 1975 *A Social History of the Tamils*, University of Madras, Madras.

Pushparatnam, P., 2001 *Ilankai Tamilarin pandaiya kala nanayangal* (Ancient Coins of Sri Lankan Tamils), Bavani Patippakam, Jaffna

Pushparatṇam, P., 2001 *Tolliyal nokkil Ilankai Tamilar panpadu* (Sri Lankan Tamil Culture - An Archaeological View), Kumaran Publishers, Chennai.

Pushparatnam, Paramu, 1993 *Poonakari - Tolporulaaivu* (Poonakari -An archaeological Survey), Jaffna University Publication, Tirunelveli.

Raghunatha Rao, B. and Sasisekaran, B., 1997 "Guttur - An Iron Age Industrial Centre in Dharmapuri District", *Indian Journal of History of Science*, vol. 32(4), pp.347-359.

Raghupathy, P., 1987 *Early Settlements in Jaffna*, Thillimalar Raghupathy, Jubliee Road West Mambalam, Madras.

Rajan, Gurukkal, 1989 "Forms of Production and Forces of Change in Ancient Tamil Society", *Studies in History*, vol. 5 (2), pp.159-175.

Rajan, K., 1991a "Archaeology of Dharmapuri District, Tamil Nadu", *Man and Environment*, vol.16(1), pp.37-52.

Rajan, K., 1991b "Rock Paintings in Dharmapuri District", *Purakala*, vol.2, pp.51-70.

Rajan, K., 1991c. "Iron and Gemstone Industries as revealed from Kodumanal Excavations", *Puratattva*, vol. 20, pp.111-112.

Rajan, K., 1991d "New Light on Graffiti Marks", *Journal of Marine Archaeology*, vol. 2:47-54.

Rajan, K., 1993 "Megalithic Culture in North Arcot Region", *Puratattva*, 22:35-47.

Rajan, K., 1994a *Archaeology of Tamil Nadu (Kongu Country)*, Book India Publishing Company, Delhi.

Rajan, K., 1994b "Muciri Turaimukam: Cila Putiya Ceytikal ( Musiri Port: Some New Evidences)", *Avanam*, vol. 4, pp.107-110.

Rajan, K., 1994c *Kodumanal Aaivu Oor Arimukam* (An Introduction to Kodumanal Excavation), Manoo Pathippakam, Thanjavur.

Rajan, K., 1995 *Traditional Bead Making Industry in Tamil Nadu*, a report submitted to the Nehru Trust, New Delhi.

Rajan, K., 1996 "Kodumanal Excavations - A Report", K.V.Ramesh (ed.), *Gauravam* B.K.Gururajarao Felicitation Volume, Harman Publishing Company, New Delhi, pp.72-86.

Rajan, K., 1997a *Archaeological Gazetteer of Tamil Nadu*, Manoo Pathippakam, Thanjavur.

Rajan, K., 1997b "Port of Musiri", *Journal of Marine Archaeology*, vol. 5-6, pp.49-53.

Rajan, K., 2000a "Musiri-Alexandria Trade Contract: An Archaeological Approach", *Pondicherry University Journal of Social Sciences and Humanities*, Pondicherry, vol. I (1&2):93-104.

Rajan, K., 2000b *Archaeology of Palar Basin*, Tamil University, Thanjavur.

Rajan, K., 2000c *South Indian Memorial Stones*, Manoo Pathippakam, Thanjavur.

Rajan, K., and Osmund Bopearachchi, 2002 "Graffiti Marks of Kodumanal (India) and Ridiyagama (Sri Lanka) – A Comparative Study", *Man and Environment*, vol. 27(2), pp.97-105.

Rajan, K., 2003 "Mayiladumparai akazhaivu", *Avanam*, Journal of Tamil Nadu Archaeological Society, Thanjavur, vol. 14, pp.120-126.

Rajavelu, S., 1999 "Sinhala-Brahmi inscribed potsherd from Poompuhar", *Avanam*, vol. 10, p.154.

Raman, K.V., 1964-65 "Excavation at Uraiyur, District Tiruchirappalli", *Indian Archaeology - A Review*, pp.25-26.

Raman, K.V., 1976 "Brahmi inscriptions of Tamil Nadu: an historical assessment", *The Sri Lanka Journal of South Asian Studies*, vol. 1(1), pp.64-75.

Raman K.V., 1992 "Roman Coins from Tamil Nadu", *Studies in South Indian Coins* vol. 2, pp.19-34.

Ramanujam, A.K., 1967 *Interior Landscape: love Poems from a classical Tamil anthology*, Indiana University Press, Bloomington.

Rao, S.R., 1964-65 "Excavations at Paiyampalli, District North Arcot", *Indian Archaeology - a Review*, pp.22-23.

Rao, S.R.,1967-68 "Excavations at Paiyampalli, District North Arcot" , *Indian Archaeology - A Review*, pp.26-30.

Rao, S.R. 1987 *Progress and Prospects of Marine Archaeology in India*, National Institute of Oceanography, Goa.

Ratna Indraningsih, 1985 Research on Prehistoric Beads in Indonesia, *Bulletin of the Indo-Pacific Prehistory Association*, Vol. 6, pp.133-141.

Rea, A., 1902-03 "Prehistoric Antiquities in Tinnevelli", *Annual Report of the Archaeological Survey of India*, pp.111-143.

Roux, V., B. Bril and G.Dietrich. 1995. "Skills and learning difficulties in stone knapping: the case of stone-bead knapping in Khambhat, India", *World Archaeology*, vol. 27(1), pp.63-87.

Samuel, John, G., 1978 "Literary Theories of Tamil Heroic Poetry", *Studies in Tamil Poetry*, Madras.

Santhalingam, C., 1997 "Roman coins from Kambam valley in Tamil Nadu", *Studies in South Indian Coins*, vol. 7, pp.57-60.

Sastri, A.M., 1992 "Imperial Roman Coins in Early Decanese Inscriptions", *Studies in South Indian Coins*, Vol. 2, pp.77-88.

Sastri, Nilakanta, K.A.N., 1958 *A History of South India: from Prehistoric Times to the fall of Vijayanagar*, Oxford University Press, Oxford.

Sastri, Nilakanta, K.A.N., 1972 *Sangam Literature: its cult and culture*,Swati Publications, Madras.

Sastri, Nilakanta, K.A.N., 1987 "Sanskrit Elements in Early Tamil Literature", K.M.Shrimali, *Essays in Indian Art, Religion and Society (Indian History Congress Golden Jubilee Year Publication Series)*, New Delhi 1:45-48.

Satyamurthy, T., 1992 *The Iron Age in Kerala - a Report on Mangadu Excavation*, Department of Archaeology, Thiruvananthapuram.

Schoff, W.H., (tr.) 1974 *The Periplus of the Erythraean Sea*, Oriental reprint, New Delhi.

Seetharaman, A., 1994 "Kiruyittu Motiram (Ring with Graffiti)", *Avanam, Journal of Tamil Nadu Archaeological Society*, vol. 4, pp.86-87.

Seetharaman, A., 1994 *Tamilakat Tolliyal Cantrukal (Tamil Nadu Archaeological Evidences)*, Dhanalakshmi Pathippakam, Thanjavur.

Seneviratne, Sudarshan, 1984 "The Archaeology of Megalithic-Black and Red Ware Complex in Sri Lanka", *Ancient Ceylon*, No.5, pp.237-306;

Seneviratne, Sudarshan, 1985 "The Baratas: A Case Study of Community Integration in Early Historic Sri Lanka", A.R.B.Amerasinghe (ed.), *Festschrift James Thevathasan Ratnam*, Colombo, pp.49-56.

Seneviratne, Sudarshan, 1989 "Pre State to State Societies: Transformations in the Political Ecology of South India with Special Reference to Tamil Nadu", paper presented at *Seminar on the State in Pre Colonial South India*, Jawaharlal Nehru University, New Delhi.

Seneviratne, Sudarshan, 1992 "Pre-State Chieftains and Servants of the State: A Case of Parumuka", *The Sri Lanka Journal of the Humanities,* Vol.15, Nos.1&2, pp.99-131.

Seshadri, M., 1960 *Report of the Jadiganahalli Megalithic Excavations*, Mysore,

Seshadri, M., 1971 *Report of the excavations at T.Narasipur*, Mysore.

Shanmugam, P., 1993 Tamilnaadum Thailandum:Tonmai Todarpukal (Ancient Relation between Tamil Nadu and Thailand), *Avanam, Tamil Nadu Archaeological Society,* vol. 3, pp.81-84.

Shanmugam, P., 1994 "Indonesiavil India panpattu takkam (Impact of Indian Culture in Indonesia)", *Avanam, Journal of Tamil Nadu Archaeological Society* vol. 4, pp.111-115.

Shanmugam, P., 1995 "Indian Cultural Heritage in Vietnam and Cambodia ", *Avanam, Journal of Tamil Nadu Archaeological Society* Seneviratne, Sudarshan, vol. 6, pp.106-109.

Shetty, Ashok Vardhan, K., 2003 *Excavations at Mangudi,* Department of Archaeology, Government of Tamil Nadu, Chennai.

Shetty, Ashok Vardhan, K., 2003 *Excavations at Perur,* Department of Archaeology, Government of Tamil Nadu, Chennai.

Sidebotham, E.Steven, 1989 "Ports of the Red Sea and the Arabia-India Trade", T.Fahd ed., *L'Arabia Preislamique Et Son Environnement Historique Et Cultural,* Universite des Sciences Himaines de Strasbourg Travaux du Centre de Recherche, Strasbourg, 1989.

Singaravelu, S., 1966 *Social Life of the Tamils: Classical period,* Department of Indian Studies, University of Malaya, Kula Lampur.

Sivaraja Pillai, K.N., 1984 *Chronology of the Early Tamils*, New Delhi.

Sivathamby, K., 1981 "Early South Indian Society and Economy: the Tinai Concept", *Social Scientist*, New Century Book House, Madras.

Soundrarajan, K.V., 1994 *Kaveripattinam Excavations 1963-1973 (A Port City on the Tamil Nadu Coast)*, Archaeological Survey of India, New Delhi.

Sridharan, K., 1984 "Excavations at Karur", paper read in the Seminar on *Archaeology of Tamil Nadu and Kerala - Accomplishments and Prospects*, Tamil University, Thanjavur.

Srinivasa Iyengar, P.T., 1983 *History of Tamils:from the earliest times to 1000 AD*, Asian Educational Services, New Delhi.

Srinivasan, K.R and Banarjee, N.R., 1953 "Survey of South Indian Megaliths" *Ancient India*, no.9, pp.103-115.

Srinivasan, Sharada, 1994 "Wootz crucible steel: a newly discovered production site in South India", *Papers from the Institute of Archaeology*, vol. 5, pp.44-59.

Srisuchat, Amara, (ed.), 1996a *Ancient Trades and Cultural Contacts in Southeast Asia*, Office of the National Culture Commission, Thailand, Bangkok.

Srisuchat, Amara. 1996b "Merchants, Merchandise, Markets:Archaeological Evidence in Thailand Concerning Maritime Trade Interaction between Thailand and Other Countries before 16th century AD", Srisuchat, Amara, (ed.), 1996 *Ancient Trades and Cultural Contacts in Southeast Asia*, Office of the National Culture Commission, Thailand, Bangkok.

Subbarayalu, Y., 1985 "Vallam Excavations", *Tamil Civilization*, Vol.2, No.4, pp.30-42.

Subramanian, N., 1980 *Sangam Polity : The Administration and Social life of the Sangam Tamils*, Ennes Publications, Madurai.

Sukavana Murugan, 2000 "Pennaikaraiyil Sindhu Kasu (An Indus Coin from Pennai river bank), a paper presented in the Annual Conference of the Tamil Nadu Archaeological Society, Thanjavur, 19-20 August, 2000.

Sundara, A., 1975 *Early Chamber Tombs of North Karnataka*, Dharwar.

Suresh, S., 1992 *Roman Antiquities in Tamil Nadu*, The C.P.Ramaswami Aiyar Institute of Indological Research, Madras.

Thapar, B.K., 1957 "Maski 1954: A Chalcolithic Site of The Southern Deccan", *Ancient India* 13:86-88.

Thapar, Romila, 1973 *Asoka and the Decline of Mauryas*, Delhi.

Veraprasert, Mayuree, 1987 "Khlong Thom:an ancient bead and manufacturing location and an ancient entrepot", Seminar in Prehistory of Southeast Asia, SPAFA Final Report, Bangkok, SEAMEO Project in Arcaheology and Fine Arts:323-331.

Verhoeven, J.D., 1987 "Damascus steel Part:1 Indian steel", *Metellography*, vol. 20, pp.145-151.

Walker, M., and Santoso, S., 1980 Romano-Indian Rouletted Pottery in Indonesia, *Asian Perspectives,* vol. 22(2), pp.225-235.

Warmington, E.H. 1928 *The Commerce between the Roman Empire and India*, Munshiram Manoharlal Publishers Pvt., Ltd., New Delhi.

Wheeler, R.E.M., 1948 "Brahmagiri and Chandravalli 1947: Megalithic and Other Cultures in the Chitaldurg District, Mysore State", *Ancient India*, vol.4, pp.181-308.

Wheeler, R.E.M., Ghosh, A., and Krishna Deva, 1946. "Arikamedu, An Indo-Roman Trading Station on the East Coast of India", *Ancient India,* Vol.2, Archaeological Survey of India, New Delhi.

Whitecomb, D.S. and Johnson, J.H., 1979 *Quseir al-Qadim 1978:Preliminary Report*, Princeton.

Whitecomb, D.S. and Johnson, J.H., 1982 "Quseir al-Qadim 1980: Preliminary Report", *American Research Centre in Egypt, Reports No.*7, Undenna Publications, Malibu.

Yadu Vanshi, 1942 "The Marks on the Deccan Pottery", *Proceedings of the Hyderabad Archaeological Society*, p.40.

Yazdani, G., 1917 "Megalithic Remains of the Deccan - A New Feature of them", *Journal of Hyderabad Archaeological Society*, pp.56-79.

Zvelebil, K., 1973 *The smile of Murugan:Oon Tamil Literature of South India*, E.J.Brill, Leiden.

Zvelebil, K., 1974 *Tamil Literature*, Leiden.

# சொல்லடைவு

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்



---

**A499 தொல்லியல் நோக்கில் சங்ககாலம் 70.00**